# அறிவியல் நோக்கில் ஆன்மீக ரகசியங்கள்



ஆசிரியர்

ச. நாகராஜன்

நாகப்பா பப்ளிகேஷன்ஸ்

(புத்தகம் வெளியிடுவோர் & விற்பனையாளர்கள்)

37, முத்து தெரு, இராயப்பேட்டை, சென்னை – 14.

☎ : 28131549, 28132033

## நூல் விவர அட்டவணை


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **அறிவியல் நோக்கில் ஆன்மீக ரகசியங்கள்** |
| ஆசிரியர் | : | ச. நாகராஜன் |
| முதற்பதிப்பு | : | "நவம்பர் 2005" |
| உரிமை | : | பதிப்பகத்தாருக்கு |
| தாளின் தன்மை | : | 10.5kg வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு | : | 1x8 Crown |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | அறிவியல் |
| எழுத்து | : | 12 புள்ளி |
| பக்கங்கள் | : | 184 |
| நூல் கட்டுமானம் | : | சாதா அட்டை பைண்டு |
| நூல் வெளியிடுவோர் | : | **நாகப்பா பப்ளிகேஷன்ஸ்** (புத்தகம் வெளியிடுவோர் & விற்பனையாளர்கள்) 37, முத்து தெரு, இராயப்பேட்டை சென்னை – 600 014. |
| அச்சிட்டோர் | : | கே.வி.எஸ். ஆப்செட் பிரிண்டர்ஸ் சென்னை –14, Ph:2848 0166 |
| ஒளி அச்சு | : | ஜி பப்ளிஷிங் சர்வீஸ் Suite No. 3, Basement, "Real Regency" 102, Pycrofts Road, Chennai – 600 014. |
| விலை | : | **ரூ. 45.00** |

# முன்னுரை

ஹிந்து மதம் ஒரு மதம் மட்டுமல்ல; ஒரு தத்துவமும் கூட, ஒரு மதமும் தத்துவமும் மட்டுமல்ல; அது ஒரு வாழ்க்கை முறை என்று மேலை நாட்டு அறிஞர்களில் ஆரம்பித்து உலகின் பெரும் சிந்தனையாளர்கள் கிழக்கு, மேற்கு என்ற பாகுபாடின்றிப் போற்றிப் புகழ்கிறார்கள்.

இந்த வாழ்க்கை முறையில் பிறந்ததிலிருந்து இறக்கும் வரை, காலையில் எழுந்ததிலிருந்து இரவு உறங்கப் போகும் வரை மனிதராய்ப் பிறந்தோர் என்னென்ன செய்ய வேண்டும் என்பது தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

நலம் பயக்கும் இந்த வாழ்க்கை முறையை முரட்டுத்தனமான பல்வேறு படையெடுப்புகள் தாக்கிப் பார்த்தன; ஆங்கில ஆதிக்கம் துளைத்துப் பார்த்தது. ஆனால் காலத்தை வென்ற ஹிந்து வாழ்க்கை முறை நிலை குலையவில்லை! என்றாலும் அறிவியல் உரைக்கல்லில் உரசிப் பார்த்தால் என்ன விடை கிடைக்கும் என்பதைப் பல விஞ்ஞானிகளும், சிந்தனையாளர்களும், இலக்கிய வாதிகளும், பக்தர்களும், தொழில் நுட்ப நிபுணர்களும் முயன்று பார்த்துள்ளனர்.

அவற்றை எல்லாம் ஒருங்கே திரட்டி மாபெரும் கலைக் களஞ்சியமாக வெளியிட அதிகம் பொருட்செலவு ஆகும். ஏராளமான அறிஞர் பெருமக்கள் அந்தப் பெரும் பணியில் தம்மை அர்ப்பணித்து ஈடுபட வேண்டியிருக்கும். இந்தச் சூழ்நிலையில் சிறு வயது முதலே இந்தத் துறையில் என்னை சுதந்திரப் போராட்ட வீரரும் தினமணி பொறுப் பாசிரியருமான எனது தந்தையார் திரு. வெ.சந்தானம்

அவர்கள் ஊக்கி விட்ட காரணத்தால், ஏராளமான நூல்களைப் படித்ததோடு அவற்றிலிருந்து குறிப்புகள் எடுத்து வந்தேன். முடிந்த போதெல்லாம் புத்தகங்களை வாங்கிச் சேகரிக்க ஆரம்பித்தேன். படித்ததைப் பகிர்ந்து கொண்டால் இந்த வாழ்க்கை முறை அறிவியல் வியக்கும் ஒன்று என்பதை இளைய சமுதாயத்தினரும் ஏனையோரும் அறிந்து மகிழ உதவியாக இருக்கும் என்ற எண்ணம் தோன்றியதால் சிறு சிறு கட்டுரைகளாக மங்கையர் மலர், தின பூமி, கலை மகள், மஞ்சரி, ஞான ஆலயம், வாஸ்து, பெங்சுயி, ஜெம்மாலஜியும் ஜோதிடமும், கோகுலம் கதிர் போன்ற தமிழ் வார, மாத இதழ்களில் எழுதி வந்தேன்.

ஹிந்து வாழ்க்கை முறை மீதான அறிவியல் சோதனைகள் மற்றும் ஆராய்ச்சிகளின முடிவுகள் மாபெரும் கலைக்களஞ்சியமாக இன்னும் உருவாகாத சூழ்நிலையில் இந்தக் கட்டுரைகள் சேதுவில் அணை கட்ட அணில் செய்த சேவை போல இருக்கும் என்பது என் நம்பிக்கை.

இந்தக் கட்டுரைகளைத் தொகுப்பு நூலாக வெளியிட வேண்டுமென்று நண்பர்கள் தூண்டினர். எனவே இந்த நூல் உங்கள் கரங்களில் இப்போது மலர்ந்துள்ளது. இதற்கு நல்லதொரு அணிந்துரை நல்கிய முன்னாள் தமிழ் நாட்டுக் காவல் துறைத் தலைமை இயக்குநரும் பல்துறை வித்தகருமான திரு. சு. ஸ்ரீபால் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் கட்டுரைகளைப் பிரசுரித்து ஊக்கிய பல்வேறு இதழ்களில் ஆசிரியப் பெருமக்களுக்கும், படித்து நேரிலும், தொலைபேசியிலும், கடித மூலமாகவும் பாராட்டிய வாசகர் களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வழக்கம் போலவே எனது நூல்களை வெளியிடும் திரு. சுவாமிநாதன் இந்த நூலையும் வெளியிட முன்வந்ததற்காக அவருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். பல வழிகளிலும் உதவி செய்த என் மனைவி மற்றும் மகன் களுக்கும் என் நன்றி உரித்தாகுக.

அறிவியல் வியக்கும் ஹிந்து வாழ்க்கை முறை பற்றி அதிக நம்பிக்கையை ஏற்படுத்துவதோடு அதைக் கடைப்பிடிக்க அதிக ஆர்வத்தையும் இந்த நூல் படிப்பவரைத் தூண்டுமானால் அதை விட மகிழ்ச்சி எனக்கு வேறில்லை!

நன்றி

ச. நாகராஜன்
சென்னை
3-8-2005
மின்னஞ்சல் முகவரி : snagarajans@gmail. com
snagarajans@yahoo.com

# அணிந்துரை

(சு. ஸ்ரீபால், முன்னாள் தமிழ் நாட்டுக் காவல்துறைத் தலைமை இயக்குநர்)

அன்பிற்குரிய நண்பர் திரு.ச. நாகராஜன் அவர்கள் எழுதியுள்ள இருபத்தேழு கட்டுரைகள் இருபத்தேழு நட்சத்திரங்களைப் போல ஜொலிக்கின்றன. ஒரு கட்டுரையைப் படித்தால் அது முன்பு படித்த கட்டுரையை விட சிறந்தது என்று எண்ணத் தோன்றுகிறது.

இந்த நூல் நமக்கு எடுத்து இயம்புகின்ற பாடம் இதுதான்.

"மனிதனின் அறிவியலும் ஆராய்ச்சியும் மனிதனே. மனித இனம் ஆராய்வதற்கு மிகுந்த தகுதி வாய்ந்த பொருள் மனிதனே. மண்ணுலகில் தொன்றுதொட்டு பார்க்கும் போது மனிதனை விட சிறந்த பொருள் இல்லை. மனிதனில் மனத்தைத் தவிர சிறந்தது ஒன்றுமில்லை"

சுவாமி விவேகானந்தர் சொன்னார்,

"வேதங்களிலும் உபநிடதங்களிலும் பெண்கள் உண்மைகளைப் போதித்து, ஆண்களைப் போலவே போற்றி வணங்கப் பட்டனர்"

இந்த வரலாற்று உண்மையைப் பெண்கள் பற்றி ஆசிரியர் எழுதியுள்ள கட்டுரைகளில் படிக்கிறோம். காயத்ரி மந்திரத்தைப் பெண்களும் ஜபம் செய்யலாம், உருத்திராட்சம் பெண்களும் அணியலாம் என்ற கருத்துகள் அழகாக எடுத்துச் சொல்லப் படுகின்றன.

மனிதனின் வரலாறு பல்வேறு கால கட்டங்களில் அவன் புரிந்த சாதனைகளை, உருவாக்கிய படைப்புகளை, வாழ்க்கை முறையை, பழக்க வழக்கங்களை, பண்புகளை, நம்பிக்கைகளை எடுத்துச் சொல்கிறது. ஆசிரியர் மனித வரலாற்றை நன்கு படித்து உள்ளார். மேலை நாடுகளில் செய்த ஆராய்ச்சிகளை அறிந்து உள்ளார். இவற்றையெல்லாம் பல கட்டுரைகளில் எடுத்து உரைக்கும் பாட்டு பாராட்டுக்குரியது.

ஒரு இடத்தில் அமெரிக்க வரலாற்றில் எப்படி "13" என்ற எண் நல்ல பிணைப்புகளை இருக்கிறது என்று விளக்குகிறார். இது ஒரு நல்ல தகவல் ஆகும். அமெரிக்க சுதந்திரம் அடைந்த நாள் 4.7.1776. 4 என்ற எண் 1 + 3 = 4 என்று 13ன் கூட்டுத் தொகையே ஆகும். எண் கணிதத்தில் "4" என்ற எண் ராகு கிரகத்துக்கு உரிய எண்.

பண்டைய காலத்தில் முன்னோர் வகுத்த நெறிகளுக்கும் நியதிகளுக்கும் காரணங்கள் உண்டு. சில காரணங்கள் இப்போதும் நமக்கு விளங்குகின்றன. சில நமக்கு விளங்குவது இல்லை. ஆனால் அதற்காக அவற்றை ஒதுக்கி விடுவது நல்லது என்று கூற முடியாது. இந்தக் கருத்தைப் பல இடங்களில் ஆசிரியர் உரைப்பது பொருத்தமாகும்.

குளிர்காலத்தில் சூட்டை உண்டாக்க மரக்கட்டைகளை எறிந்து நெருப்பில் குளிர் காய்வோம். சூடு என்ற சூழ்நிலையை நெருப்பு உண்டாக்குகிறது. அதைப் போல ஆன்மிகச் சூழ்நிலையை உண்டாக்குவது எப்படி என்ற வழிமுறையை "பிரார்த்தனை" பற்றி எழுதியுள்ள கட்டுரையில் படித்து மகிழ்ந்தேன்.

நம்முடைய வீட்டில் பூட்டி வைத்து இருக்கும் காசு பணத்தை எண்ண முற்படும் போது வெளிக் கதவுகளை மூடி விடுகிறோம். அது போல ஆன்மாவில் புதைந்து கிடக்கும் பொக்கிஷத்தைக் காண வெளிக்கதவுகளாகிய புலன்களை மூட வேண்டும். "தியானம்", "எண்ணங்கள்" பற்றிய கட்டுரைகளில் வெளிக்கதவுகளாகிய புலன்களை எப்படி மூடுவது என்பது குறித்த வழி முறைகளைப் படிக்கின்றோம்.

மனத்தை ஈர்த்து சிக்க வைத்து சுயமாகச் சிந்திக்கத் தூண்டுவதே புத்தகங்களின் உண்மையான நோக்கம். அந்த நோக்கத்தை இந்த நூல் சிறப்பாக நிறைவேற்றி இருக்கிறது.

"சில புத்தகங்கள் சுவைக்க வேண்டியவை; வேறு சில விழுங்க வேண்டியவை: ஒரு சில புத்தகங்களே சுவைத்து உண்டு சீரணிக்க வேண்டியவை"

சுவைத்து உண்டு சீரணிக்க வேண்டிய இந்தப் புத்தகத்தை எழுதி இருக்கும் திரு. ச. நாகராஜன் அவர்களுக்கு என்னுடைய மனமார்ந்த பாராட்டுகள்.

வளர்க அவர்தம் எழுத்துப் பணி!

**சு. ஸ்ரீபால்**

# பொருளடக்கம்

# நாமங்கள் ஆயிரம்! நலங்கள் பல்லாயிரம்!!

## ஷீர்டி சாயியின் வாழ்வில்!



ஷீர்டியில் வாழ்ந்து பக்தர்களுக்கு 'உதி' கொடுப்பதன் மூலம் பல்வேறு கொடிய வியாதிகளையும், துன்பங்களையும் தீர்த்த ஷீர்டி சாயி பாபாவின் வாழ்வில் நடந்த சம்பவம் இது!

ஒரு முறை அவர் நெஞ்சு வலியால் அவதிப்பட்டார். மற்றவரின் நோய்களைத் தீர்ப்பவருக்கே உடல்நலம் குன்றியது என்றால் யாரிடம் மருந்துக்குப் போவது?

பாபாவே பதில் கூறிவிட்டார்: "எனக்கு இதயத்தில் நோய் வந்து விட்டது. விஷ்ணு சஹஸ்ரநாமத்தை நெஞ்சிலே வைத்தேன். ஹரி அதிலிருந்து இறங்கினார். நோய் நீங்கி குணம் அடைந்தேன்."

விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் மகிமையை உலகுக்கு உணர்த்த பாபா செய்த திருவிளையாடல் இது!

## பீஷ்மர் கிருஷ்ணரின் முன்னே உரைத்தது!

யுதிஷ்டிரரிடம் போர்களத்திலே வீழ்ந்துபட்ட பீஷ்மரிடம் தர்மங்களைக் கேட்டறியுமாறு கிருஷ்ண பரமாத்மா தூண்டுகிறார். அந்தச் சமயத்தில் வால்மீகி ராமாயணத்தை ராமரின் முன்னேயே லவகுசர்கள் கூறியதைப் போல, கிருஷ்ணாவதாரத்தில் அவர் முன்னேயே விஷ்ணுவின் ஆயிரம் நாமங்களை பீஷ்மர் கூறுகிறார். கிருஷ்ணரின் அங்கீகாரத்துடன் உலகிற்குக் கிடைத்த ஒப்புயர்வற்ற ஸ்தோத்திரம் விஷ்ணு சகஸ்ரநாமம்!

## ஆதிசங்கரரின் அற்புத அனுபவம்!

ஒரு முறை 'லலிதா சஹஸ்ரநாமத்திற்கு' பாஷ்யம் (விரிவுரை) செய்யத் திருவுள்ளம் கொண்டார் ஆதிசங்கரர். தம் சிஷ்யர் ஒருவரிடம் லலிதா சஹஸ்ரநாம சுவடியைக் கொண்டு வருமாறு பணித்தார். அவரும் ஒரு சுவடிக்கட்டைக் கொண்டு வந்தார். ஆனால் அவர் கொண்டு வந்ததோ விஷ்ணு சஹஸ்ரநாமம்! தன் எண்ணத்தை அப்போது கை விட்ட சங்கரர் இன்னொரு முறை லலிதா சஹஸ்ரநாமம் கொண்டு வரப் பணித்தார். ஆனால் அப்போதும் அவர் கைக்கு விஷ்ணு சஹஸ்ரநாமமே வந்து சேர்ந்தது! மூன்றாம் முறையும் இப்படி நடக்கவே, இறைவனின் திருவுள்ளம் விஷ்ணு சஹஸ்ரநாமத்திற்கே தாம் பாஷ்யம் இயற்ற வேண்டும் என்பது தான் என்று தெளிந்துணர்ந்த அவர் லலிதா சஹஸ்ர நாமத்திற்கு பாஷ்யம் எழுதுவதை விட்டு விட்டு விஷ்ணு சஹஸ்ரநாமத்திற்கு பாஷ்யம் எழுதினார்!

## விஷ்ணு சஹஸ்ரநாமம்

விஷ்ணுவின் ஆயிரம் நாமங்களை அற்புதமான மாலையாகத் தொடுத்துள்ள ஸ்தோத்திர நூலே விஷ்ணு சஹஸ்ரநாமம்! நான்கு வேதங்களில் உள்ள அனைத்து மந்திரங்களின் சாரத்தை உள்ளடக்கிய ஆயிரம் திருநாமங்களை 107 சுலோகங்கள் எடுத்துரைக்கின்றன. தொடக்கத்தில் 13 சுலோகங்கள் முன்னுரையாகவும் இறுதியில் 22 சுலோகங்கள் பலனை விளக்கும் பலசுருதியாகவும் அமைந்து மொத்தம் 142 சுலோகங்களை உள்ளடக்கியதாக இது உள்ளது. வேதங்களை ஓதுவதற்குக் கட்டுப்பாடுகள் அதிகம். ஆகவே அதன் சாரத்தை இதில் தந்து அனைவரும் உபயோகப்படுத்தும் அதிகாரத்தை பீஷ்மர் கூறிய சஹஸ்ரநாமம் தருகிறது. வேத வியாசர் இயற்றிய மகாபாரதத்தில் ஆனுஸாஸன பர்வத்தில் இது வருகிறது.

## மூவரின் பாஷ்யம்

இதற்கு சுமார் 15 விரிவுரைகள் உள்ளன என்ற போதிலும் சஹஸ்ரநாமத்தின் அருமையையும் பெருமையை யும் உணர்ந்த சங்கரர், பராசர பட்டர், ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் ஆகியோரின் உரைகள் சிறப்பாகக் கருதப்படுகின்றன. அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் என முப்பெரும் பிரிவுகளைச் சேர்ந்த பெரியோர் பாஷ்யம் எழுதி விட்டதால் மூன்று பிரிவுகளின் அங்கீகாரத்தையும் பெற்ற அற்புத ஸ்தோத்திரமாக இது விளங்குகிறது. மகாபாரதத்திற்கு உரை எழுதிய நீலகண்டர், விஷ்ணு சஹஸ்ரநாமத்திற்கு உரை எழுதாமல் இதற்கு

ஆதிசங்கரரின் உரையைப் பார்த்துக் கொள்ளுங்கள் என்று கூறுகிறார்!

**நாம மகிமை**

ச்ஹஸ்ர நாமத்தில் வரும் ஒவ்வொரு நாமத்தின் மகிமையும் பல நலங்களைத் தரவல்லது. சங்கரர், பராசர பட்டர், ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் இந்த நலங்களை விரிவாக விளக்குகின்றனர்.

தேர்ந்த கைவினைஞர் ஒரு மாலையில் அழகுற மணிகளைக் கோர்த்தது போல ஒன்றுடன் ஒன்று பொருந்துமாறு பல ரகசியங்களை உள்ளடக்கி இந்த ஆயிரம் நாமங்கள் அமைந்துள்ளது.

வைத்ய சாஸ்த்ரம், மந்த்ர சாஸ்திரம் ஆகியவை தீராத குஷ்டம், புற்று வியாதி மற்றும் ஜ்வரம் போன்றவற்றிற்கு இதை பாராயணம் செய்வதையே ப்ரிகாரமாக – மருந்தாகக் கூறுகின்றன. சரகரும் தன் நூலில் இதை வலியுறுத்துகிறார். வேத சாரமாகக் கருதப்பட்டு, மந்திர ராஜம் என்று அழைக்கப்படும் காயத்ரி மந்திரத்தின் 24 அக்ஷரங்கள் இதில் முதல் மூன்று சுலோகங்களில் அமைந்துள்ளன.

விஸ்வம் என்ற முதல் நாமமே உடல் நோய்களைத் தீர்த்து இக உலக வாழ்வை இன்பமாக்கும்; மறு பிறவி தரும், சம்சாரத்திலிருந்து விடுவிக்கும் என்கிறார் சங்கரர். 999ம் நாமமான அக்ஷோப்ய: என்ற நாமம் அசைக்க முடியாதவர் என்ற பொருளைத் தந்து தன்னை அண்டிய பக்தர்களைக் காப்பாற்றும் உறுதியிலிருந்து அசைக்க முடியாதவர் என்பதை உறுதிப்படுத்துகிறது. இறுதி நாமமான

சர்வப்ரஹறரணாயுத: என்பது உலகில் உள்ள பொருள்கள் அனைத்துமே விஷ்ணுவிற்கு ஆயுதமாகி அவனை சரணாகதி அடைந்த பக்தர்களைக் காக்கிறது என்ற பொருளைத் தருகிறது. நரசிம்மருக்கு நகமே ஆயுதமானது. ராமரோ தர்ப்பையை எடுத்து அதில் பிரம்மாஸ்திரத்தை ஏவி காக்கையை பிரபஞ்சம் முழுதும் சுற்ற விட்டார்.

செல்வ வளம் உண்டாக.

'அர்த்தோநர்த்தோ மஹாகோசோ

மஹா போகோ மஹாதன:

என்ற நாமங்களயையும்.

உற்சாகம் மற்றும் பலம் ஏற்பட

"மஹாத்ஸாஹோ, மஹா பல:"

என்ற நாமங்களையும்,

பாவங்கள் தீர, "பாபநாசன:" என்ற நாமத்தையும் உச்சரிக்கலாம். இப்படி அனைத்து நலன்களுக்கும் ஒவ்வொரு நாமம் உள்ளது. ஒவ்வொரு நலனுக்காக நாமத்தைத் தேடாமல் சஹஸ்ர நாமத்தைச் சொல்லும் போது அனைத்து நலன்களும் தானாகவே வந்து சேரும்.

## வினோபாஜியும் விஷ்ணு சகஸ்ரநாமமும்

பவனார் ஆசிரமத்தில் இருந்த வினோபாஜியிடம் மாதா ஜானகிதேவி என்பவர், "ஆனந்த் ஹிங்கோரானியின் டைரியில் ஒவ்வொரு நாளும் ஒரு நல்ல சிந்தனையை நீங்கள் எழுதுவது போல எனக்கும் தினமும் ஏதாவது எழுதித் தாருங்கள்" என்று வேண்டினார். அதற்கு இசைந்தார் வினோபாஜி.





என்ன எழுதித் தரப் போகிறார் என்று அனைவரும் ஆவலுடன் எதிர்பார்த்த போது "இன்று என் சிந்தனை முழுவதும் விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் மீதே உள்ளது" என்று கூறி முதல் எழுத்தான 'ஓம்' என்பதைத் தன் கையால் எழுதினார்.

அன்று தொடங்கி அவ்வப்பொழுது தனக்குப் பிடித்த நாமத்தை ஒரு பாடத்துடன் வரைந்து வர ஆரம்பித்தார். அற்புதமான ஒரு சித்திர விரிவுரையாக அது உருவாக ஆரம்பித்தது! இது பின்னால் புத்தகமாகப் பிரசுரிக்கப்பட்டது. படிப்பதற்கும் பார்ப்பதற்கும் பயன் பெறுவதற்குமான அற்புதமான விசித்திரமான விஷ்ணு சஹஸ்ரநாம (வி)சித்திர விரிவுரை இது!

விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் முழு அர்த்தத்தையும் ஆழமாக ஆராய்ந்த வினோபாஜி அதில் சர்வ மதங்களுக்கும் உரிய நாமங்கள் இருப்பதைக் கண்டு அவற்றைத் தொகுத்தார். ஹிந்து மத்திற்கு சம்பு, நாராயண், ரவி, கணேஷ்வர, மஹாசக்தி என்று ஐந்து நாமங்களையும், பௌத்த மதத்திற்கு சித்தார்த்த, சர்வக்ஞ, மஹாபுத்தி முதலான 12 நாமங்களையும், சீக்கிய மதத்திற்கு விஸ்மய: அஜ: முதலான 12 நாமங்களையும்; ஜைன மதத்திற்கு சித்த, வர்த்தமான் முதலான 12 நாமங்களையும், பார்ஸி மதத்திற்கு





வசுமனா, மஹான், ஜிதமன்யு ஆகிய 3 நாமங்களையும், இஸ்லாத்திற்கு பரமாத்மா, ஏகாத்மா, அனுகூல : முதலான 66 நாமங்களையும், யஹூதி மதத்திற்கு மஹாசக்தி, மஹாவீர்ய ஆகிய இரு நாமங்களையும், சீன மதத்திற்கு விஸ்தார: என்ற நாமத்தையும் உரித்ததாகச் சுட்டிக் காட்டினார். 66 நாமங்களும் இஸ்லாமியப் பெயர்களுக்கு நேருக்கு நேர் இருப்பதையும் அர்த்தம் பொருந்தி இருப்பதையும் தனியே பட்டியலிட்டார்!

அவரது உரை இந்த சஹஸ்ர நாமம் உலகில் உள்ள அனைத்து மக்களுக்கும் பொருந்துவதாக இருப்பதை உணர்த்தி ஒரு புது உரையாக அமைந்துள்ளது!

## நலங்கள் பல்லாயிரம்!

ஒரு முறை ஆசாரிய மத்வருடன் மற்ற அறிஞர்கள் விவாதத்திற்கு வந்த போது ஸ்கந்த புராணத்தை மேற்கோள் காட்டி எல்லா வேதங்களுக்கும் மூன்று அர்த்தங்கள் உள்ளன என்றும் மஹாபாரதத்திற்கு பத்து அர்த்தங்கள் உள்ளன என்றும் ஆனால் விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் ஒவ்வொரு நாமத்திற்கும் நூறு அர்த்தங்கள் உள்ளன என்றும் அவர் கூறினார்!

ஒரு நாமம் நூறு நலங்களைச் செய்யும். ஆயிரம் நாமம் நூறாயிரம் நலங்களைச் செய்யும் என்பது இதன் உட்கருத்து.

### கூட்டு வழிபாடு

விஷ்ணு சஹஸ்ரநாமத்தைத் தனியாகவும் கூட்டு வழிபாடாகவும் எந்த நேரத்திலும் சொல்லலாம். காலம் காலமாக இப்படி ஆயிரக்கணக்கானோரால் உச்சரிக்கப் பட்டு வந்துள்ள இதைக் கற்பதும் இப்போது சுலபம். பிரபல பாடகர்களின் கேஸட்கள் எங்கும் கிடைக்கும்!

கூறும் நாமங்கள் ஆயிரம்! நலங்களோ பல்லாயிரம்!

## சப்த சக்தி என்ன செய்யும்?

நம்முடைய பெரியவர்கள் 'ஓங்காரம்', 'ராம', 'நமசிவாய', 'நமோ நாராயணாய' –என்பது போன்ற இஷ்டமான தேவதைகளின் மந்திரங்களை உச்சரிக்க வேண்டும் என்று சொல்வார்கள். இதற்குப் பயன் உண்டா? சப்த சக்தி என்ன செய்யும்?

சப்தத்தை – ஒலியின் நுட்பத்தை ரிஷிகளும், முனிவர்களும் உன்னிப்பாகக் கவனித்து, உணர்ந்து, தம் அனுபவங்களை பதினெட்டுப் புராணங்களிலும், ராமாயண, மகாபாரத இதிஹாஸங்களிலும் தந்துள்ளனர்.

நவீன விஞ்ஞானம் தனது நவீன உபகரணங்களைக் கொண்டு இந்த அதிசயமான சப்த சக்தியை ஒரு நூற்றாண்டு காலமாக ஆராய்ந்து வருகிறது!

வியன்னாவில் நடந்த சம்பவம் இது! மார்ஷல்ஸ் என்ற இன்ஸ்டிடியூட்டில் புரொபஸர் காவராண்ட் என்ற என்ஜீனியருக்கு ஒரு புதுவிதத் தொல்லை ஏற்பட்டது. எப்போதெல்லாம் தனது வகுப்பறைக்குப் போகிறாரோ, அப்போதெல்லாம் அவருக்கு இயல்பான அமைதி போய் மனக் கலக்கமும், உடல் தளர்ச்சியும் ஏற்பட்டது. அவரால் செயல்பட முடியவில்லை. இதற்கான காரணம் என்ன என்று ஆராய ஆரம்பித்தார்.

ஒருநாள் சுவரில் சாய்ந்தவாறே யோசித்துக் கொண்டிருந்த போது, சூட்சுமமான ஒலியின் அதிர்வுகளை உணர்ந்தார். அருகே உள்ள அறையில் இருந்த ஏர் கண்டிஷன் இயந்திரம் ஏற்படுத்தும் நுண்ணிய ஒலி 7 ஹெர்ட்ஸ் அளவில் இயங்கிக் கொண்டிருந்தது. அதுவே அவரது நிம்மதியின்மைக்குக் காரணம் என்பது தெரியவந்தது.

இந்தச் சம்பவத்திற்குப் பின்னர் காவராண்ட் தனது வேலையை ராஜிநாமா செய்துவிட்டு சூட்சும ஒலி அலைகளை ஆராய ஆரம்பித்தார். காதால் கேட்காத ஒலி அலைகள் மூலம் மனித உடலில் ஏற்படும் விளைவுகளை ஆராய, ஒரு இன்ப்ரோசோனிக் இயந்திரத்தைக் கண்டுபிடித்தார். இந்த இயந்திரம் ஏற்படுத்திய ஒலியைக் கேட்டவுடன் மிருகங்கள் துடிதுடித்து இறந்தன. மின்னல் ஒளியால் மனித உடல் கருகுவது போல, இந்த ஒலி அலைகள் பறவைகளுக்கும், மிருகங்களுக்கும் உடனடி மரணத்தை ஏற்படுத்தின.

சாதாரணமாக நாம் 20 ஹெர்ட்ஸுக்குக் கீழே உள்ள ஒலியையும் (இன்ப்ரோசோனிக்) 20000 ஹெர்ட்ஸுக்கு மேலே உள்ள (அல்ட்ரா சோனிக்) ஒலி அலைகளைபும் கேட்க முடியாது. ஆனால் இவற்றிற்கு வலிமை அதிகம்!

இந்த ஒலி அலைகளைச் செலுத்தி ஏராளமான காரியங்களை விஞ்ஞானிகள் செய்ய ஆரம்பித்தனர். உடலில் சிறுநீரகக் கற்களை உடைப்பது முதலாக, பல்வேறு நோய்களை, ஒலி அலைகள் மூலம் தீர்ப்பது இன்றைய வழக்கமாகி விட்டது!

இரண்டாம் உலகப் போரின் போது அதிக அதிர்வுகளை உண்டாக்கும் ஒலி அலைகளைச் செலுத்தி,. எதிரி நாட்டு வீரர்களின் செயல்பாட்டை இழக்கச் செய்யும் ஒரு இயந்திரமும் கண்டுபிடிக்கப் பட்டது!

இந்த ஒலி விஞ்ஞானம் வளர்ந்து, அமெரிக்க விண்வெளி ஆராய்ச்சி நிறுவனமான நாஸா, சப்தத்திற்கு எதையும் துளைத்து ஓட்டைப் போட்டு விடும் சக்தி உண்டு என்பதைக் கண்டுபிடித்து விட்டது!

210 டெசிபல் சப்தத்தை 14 மீட்டர் ஸ்டீல் ஹார்ன் மூலம் வெளிப்படுத்தினால், அந்தச் சப்தம் கான்கிரீட்டையே துளை போட்டு விடும் என்கிறார்கள் நாஸா விஞ்ஞானிகள்!

கலிபோர்னியாவில் ஒரு விஞ்ஞானி செய்த சோதனை இன்னும் பிரமிக்க வைக்கும் விளைவை ஏற்படுத்தியது. ஒரு வினாடிக்கு ஐந்து கோடி அதிர்வுகளைத் தரும் ஒலியை அவர்

ஏற்படுத்தினார். அப்போது அங்கே இருந்த பஞ்சுப் பொதிகள் தீப்பற்றி எரிய ஆரம்பித்தன. அங்கே குழுமியிருந்த விஞ்ஞானிகளின் உடையில் வெப்பம் அதிகரித்து, அவை எரிந்து விடும் அபாயமும் ஏற்பட்டது!

நமது முன்னோர்கள் இந்த ஒலி நுட்பத்தை மிக நன்றாக அறிந்திருந்தனர். லிங்க புராணத்தில் வீட்டில் செய்யப்படும் ஜபம் எனப்படும் மந்திர உச்சாரணத்திற்கு, சாதாரண பலனும், நதிக்கரையில் செய்யப்படும் ஜபத்திற்கு லட்சம் மடங்கு அதிகப் பலனும், ஆலயம் போன்ற புனித இடங்கள், சமுத்திரக் கரை, மலைச் சிகரம் ஆகிய இடங்களில் செய்யப்படும் ஜபத்திற்குக் கோடி மடங்கு பலனும் உண்டு என்றும் கூறப்பட்டிருக்கிறது.

நவீன அறிவியல், ஒலி, காற்றின் வழியே ஒரு வினாடிக்கு சுமார் 1088 அடியும், தண்ணீரின் வழியே 5000 அடியும் செல்வதாகக் கூறுகிறது. இந்த அறிவியலை விட அதி நுட்பமான ஒலி அலைகளின் செயல்பாட்டைக் கண்டு, வீடு, நதிக்கரை, சமுத்திரக்கரை, மலைச் சிகரம் ஆகிய இடங்களில் இவற்றின் விளைவை இனம் கண்டு, புராணம் விவரித்திருப்பது வியப்பூட்டும் உண்மை! மந்திரங்களைத் தம் சூட்சும திருஷ்டியால் உணர்ந்த முனிவர்கள் சப்தத்தை 'சப்த பிரம்மம்', 'நாத பிரம்மம்' என்றனர். 20,000க்கும் மேற்பட்ட மந்திரங்களை இனம் கண்டு அதன் ஒலி மகத்துவம், பிரயோக முறை, பலன்கள் ஆகியவற்றை வகைப்படுத்தித் தொகுத்து பாரம்பர்யமாகப் பாதுகாத்து வந்துள்ளனர்.

மந்திரங்களைச் சொல்ல நான்கு அடிப்படைத் தேவைகள் உண்டு. 1. உச்சரிப்பு, 2.. நியமமும், கட்டுப்பாடும், 3. உபகரணம், 4. நம்பிக்கை.

சரியான உச்சரிப்போடு, விதிக்கப்பட்ட நியமத்துடன், ஜபமாலை, ஆசனம் மற்றும் இதர தேவையான உபகரணங்களோடு, ஆத்மசக்தியை வலுப்படுத்தும் நம்பிக்கையுடன் மந்திரங்களைச் சொல்லும் போது, அபாரமான நல் விளைவுகளைச் சப்த சக்தி தருகிறது! கௌத்ச முனிவர் நௌஷத சரித்திரத்தில் 13ம் சர்க்கத்தில் 'ஸ்ரீம்', 'க்லீம்' போன்ற ஒலியை அடிப்படையாகக் கொண்ட மந்திரங்கள் அர்த்தம் தராவிட்டாலும் 'த்வனி' அடிப்படையில் எராளமான நல்லனவற்றை ஏற்படுத்தும் என்று விளக்குகிறார்.

நாதத்தை வழியாகக் கொண்டு நாத பிரம்மத்தோடு ஐக்கியமானவர் ஸ்ரீ தியாகராஜர். சப்தத்தை அடிப்படையாகக் கொண்ட சங்கீதமும், சப்த சக்தியின் மகிமையை நேரடியாக விளக்குகிறது.

தீபக் ராகம் மூலம் நெருப்பை உண்டாக்கவும். மேக மல்ஹார் ராகம் மூலம் மழையைப் பொழிவிக்கவும், கஜகதி ராகம் மூலம் மான்களை அசையாமல் கட்டிப் போடவும், மோகன ராகம் மூலம் பாம்பை மயக்கவும் முடியும் என்று சங்கீத வல்லுநர்கள் நிரூபித்துள்ளனர்.

மந்திர ராஜம் எனப்படும் காயத்ரி மந்திரம் ஒலிக்கப்படும் இடத்திலிருந்து சுமார் 1600 மைல் தூரம்

வரை சுற்றுப்புறத்தைத் தூய்மைப்படுத்துகிறது! வினாடிக்கு இரண்டு லட்சம் அதிர்வுகளை ஏற்படுத்தும் இந்த மந்திரத்தை ஆராய்ந்த அமெரிக்கர் ஸ்ட்ராங்ளர் இதை வியந்து போற்றுகிறார்!

இப்படி விஞ்ஞான உபகரணங்களை உபயோகித்து கோடிக்கணக்கில் பணத்தைச் செலவழிப்பது தேவையற்றது என்றும், சாமான்யனுக்கு சாத்தியமானது அல்ல என்றும் உணர்ந்த நம் ரிஷி முனிவர்கள் இதன் புனிதத் தன்மையை, குரு சிஷ்ய பரம்பரை மூலமாக உணர்த்தினர். குடும்பப் பெரியோர் வாயிலாக, வாழ்க்கை முறையாகவும் மாற்றினர். ராம நாம மகிமையை உணர்த்த வந்த கம்பன் தனது ராமாயணத்தில்,

"நன்மையும், செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
ஜென்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே ராம என்ற இரண்டெழுத்தினால்!"

என்று ராம சப்தத்தின் மகிமையைக் கூறுகிறான்.

சப்த சக்தி என்ன செய்யும் என்ற கேள்விக்கு 'என்னதான் செய்யாது?' என்ற எதிர்க்கேள்வியையே விடையாக ஆன்மீகமும், அறிவியலும் ஒருங்கிணைந்து, சேர்ந்து தருகின்றன.

# ஒலிக்குச் சக்தி உண்டோ? உண்டுண்டு... டு... டு...



மந்திரமாவது மாங்காயாவது – வெறும் ஒலிக்குச் சக்தி உண்டா, என்ன என்று ஏளனம் செய்வோர் ஜாக்கிரதை! அறிவியல் உங்கள் பக்கம் இல்லை!

வெறும் 'ஹா' என்ற சப்தத்தை எரியும் மெழுகுவர்த்தி முன்னே கூறும் போது அது அணையவில்லையா? என்று கேட்பவர்களுக்கு அந்தக் கதை வேண்டாம், அது ஒலியின் சக்தி அல்ல, காற்றின் அழுத்தம் என்று கூறிவிடுவர் மந்திரம் நம்பாத அறிவுஜீவிகள்.

இதற்கு பதிலாக காயத்ரி மந்திர மகிமையை ஸ்ட்ராஙங்க்ளர் என்னும் விஞ்ஞானி கூறும்போது 'காயத்ரி மந்திரத்தைச் சரியாக உச்சரித்தால் அது நொடிக்கு இரண்டு லட்சம் அதிர்வுகளை உண்டாக்குகிறது' என்று கூறியதை நினைவுபடுத்தி இதை அமெரிக்காவிலேயே அவர் நிரூபித்துக் காட்டியதைக் கூறுவர் மந்திரத்தை உச்சரிப்போர்!

இது ஒருபுறமிருக்க, டென்னிஸ் விளையாடி முழங்கை ஜாயிண்ட் வலி என்போரும் மற்றும் இதர பொதுவான மூட்டு ஜாயிண்டுகளில் வலி என்போரும் தங்கள் வேதனைக்கு ஒரு நிரந்த தீர்வு தர எதுவும் இல்லையே என்று ஏங்கித் தவிக்கும் போது நான் இருக்கிறேன் என்கிறது ஒலி. ஒரு விசேஷ

கருவியை உபயோகித்து ஒலியை (துப்பாக்கி குண்டுகளைச் சுடுவது போல) வலிக்கும் முழங்கை அல்லது தோள் ஆகியவற்றில் சரியான இடம் பார்த்து குறி நோக்கிச் சுட்டால் வலி பஞ்சாய்ப் பறக்கிறதாம்!

ஜெர்மனியில் ஏழு ஆர்த்தோ சென்டர்களில் ஆய்வு நடத்தும் டாக்டர்கள் மற்றும் தொழில் நுட்ப வல்லுனர்கள், அறிவியல் நிபுணர்கள் இது எதனால் என்பதையும் கண்டுபிடித்து விட்டனர். ஒலி அலைகள் வலிக்கும் இடத்தில் பாதிக்கப்பட்ட இடங்களில் பாய்ச்சப்படும் போது வலி பரவுவது தடுக்கப்படுகிறது என்பது கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.

இந்த முதல் வெற்றியைத் தொடர்ந்து, டாக்டர்கள் இந்த ஒலி அலை தெராபியை பெரிதும் நம்பத் தொடங்கி உள்ளனர். இதன் மூலம், தீராத தொடர்ந்த வலியைத் தசை இன்செர்ஷன் பிரதேசத்தில் உள்ள நோயாளிகளுக்கு ஒரு நிவாரணம் கிடைக்கும் என அவர்கள் நம்பத் துவங்கி உள்ளனர். சீமன்ஸ் நிறுவனத்தால் உருவாக்கப்பட்ட இந்த ஒலி அலை குண கருவி, 'ஸோனாக்யூர் ப்ளஸ்' என்று பெயரிடப்பட்டுள்ளது. ஆர்த்தோபிடிஸ்ட் லாகவமாகக் கையாளும் முறையில் அட்ஜஸ்ட் செய்யும் பாகத்தைக் கொண்ட இந்தக் கருவி உடலின் எந்தப் பகுதியில் ஒலி பாய்ச்சப்பட வேண்டுமோ அங்கே பிடிக்க ஏதுவாக உள்ளது. இதனால் அல்ட்ரா சவுண்ட் உடலின் சரியான இடத்திற்கு சென்று குணப்படுத்தும், ஆகவே ஒலி அலைச் சக்தி சிறிது சிறிதாக அனுப்பப்படவும் முடியும். நோயாளிகளின் சிரமம் ஒழிக்கப்படவும் முடியும்!

இப்போது இரட்டிப்பு மகிழ்ச்சி அடையலாம் எல்லோரும். ஒலிக்குச் சக்தி உண்டு என்பதால் ஒரு புறம் மகிழ்ச்சி: தீராத வலி தொலைகிறது என்பதால் இன்னொருபுறம் மகிழ்ச்சி!

# பிரார்த்தனை என்ன தரும்?

## ஐஸன்ஹோவர் வாழ்க்கையில்....

பிரசித்தி பெற்ற முன்னாள் அமெரிக்க ஜனாதிபதியான ஐஸன்ஹோவரின் வாழ்க்கையில் நடந்த சம்பவம் இது:

அவர் இளமைப் பருவத்தில் ஒருநாள்கீழே விழுந்து, இடது முழங்காலில் அடிபட்டது. கால் வீங்க ஆரம்பித்து விஷம் பரவ ஆரம்பித்தது. பயந்து போன அவரது பெற்றோர் குடும்ப டாக்டரான டாக்டர் காங்க்லினை அழைத்தனர். விஷம் ஏறி நிறமே மாறி விட்டிருந்த காலைப் பரிசோதித்த டாக்டர் உடனே அறுவை சிகிச்சை மூலம் காலை வெட்டி எடுத்து விட வேண்டும் என்று அறிவுறுத்தினார். இல்லையேல் உயிருக்கே அபாயம் ஏற்படும் என்றும் எச்சரித்தார்.



பதினாலே வயது ஆன ஐஸன் ஹோவர், "ஐயையோ! காலை இழப்பதா! மாட்டவே மாட்டேன். அதற்கு என் உயிர் போனாலும் பரவாயில்லை" என்ற அலறினார். தனது அண்ணன் எட்கரைக் கூப்பிட்டு,

"என்ன ஆனாலும் சரி, இனி டாக்டரை என் அறைக்கு உள்ளே விடாதே" என்று கூறி அறைக்கு வெளியே 24 மணி நேரமும் இருக்குமாறு கேட்டுக் கொண்டார். அடுத்ததாகத் தனது தாத்தா பிரார்த்தனை மீது கொண்டுள்ள நம்பிக்கையையும், அது ஆற்றும் அற்புதங்களையும் நினைவு கூர்ந்தார்.

உடனே தனது பிரார்த்தனையைத் தொடங்கினார். கூடவே படுக்கை அருகிலேயே அவரது அம்மாவும், அப்பாவும் பிரார்த்தனையை ஆரம்பித்தனர். சற்று நேரத்தில் மற்ற நான்கு சகோதரர்களும் படுக்கை அருகே மண்டியிட்டு தொடர் பிரார்த்தனை செய்யலாயினர். அடுத்த நாள் காலை டாக்டர் காங்க்லின் அவரது காலைப் பரிசோதித்தார். விஷம் இறங்கி இருந்ததைக் காலின் நிறம் காண்பித்தது! வீக்கம் முற்றிலுமாக வற்றிவிட்டது. ஐஸன்ஹோவர் நன்கு உறங்க ஆரம்பித்தார்.

இரண்டே வாரங்களில் பூரண குணமாகி நடக்க ஆரம்பித்தார்.

தான் இறப்பதற்கு முன்னால் இந்தச் சம்பவத்தைத் தானே எழுதி உலகிற்குப் பிரகடனம் செய்த அவர், இரண்டாம் உலகப் போரின் போது ஜெனரலாக அவர் இருந்து பணியாற்றிய சமயம் பிரார்த்தனை எப்படியெல்லாம் அவரைக் காப்பாற்றியது என்பதையும் விவரித்தார்.

"வேறு யாரையும் அணுக முடியாத நிலையில் இறைவன் பக்கமே திரும்பினேன். இரண்டு முக்கியமான நெருக்கடி நிலைகளில் நமது பாராட்ருப்பர்கள் மாட்டிக்

கொண்டனர். சிசிலி படையெடுப்பின் போது அமெரிக்க விமானம் தனது பாதையிலிருந்து விலகிச் சென்று விட்டது. ஆயிரக்கணக்கான வீரர்கள் கடலிலே விழும் அபாயம் ஏற்படும் என்று எனக்கு அறிவிக்கப்பட்டது. உடனே பிரார்த்தனை புரிய ஆரம்பித்தேன்.

"இறைவனே, அவர்களைக் காப்பாற்றி உரிய இடத்தில் இறக்கு. அவர்கள் சர்வசக்திவாய்ந்த உன் கையில் இருக்கிறார்கள்" என்று பிரார்த்தனை புரிந்தேன். ஆச்சரியப்படத்தக்க விதத்தில் விமானம் சீராகி தன் சரியான பாதையில் சென்று வீரர்களை உரிய இடத்தில் இறக்கியது" என்று ஐஸன்ஹோவர் எழுதியுள்ளார்.

## அலெக்ஸி காரலின் அற்புதக் கட்டுரை...

பிரார்த்தனையின் மகிமையைப் பற்றி பகுத்தறிவு வாதிகளும், விஞ்ஞானிகளும் எள்ளி நகையாடி வந்த நிலையில் நோபல் பரிசு பெற்ற பிரபல விஞ்ஞானியும் மருத்துவ மேதையுமான அலெக்ஸி காரலின் அற்புதமான ஒரு கட்டுரை அறிவுலகையே ஒரு கலக்குக் கலக்கி விட்டது.

"புவி ஈர்ப்பு இசை போல பிரார்த்தனையும் ஒரு வலிமை வாய்ந்த சக்தி! மருத்துவன் என்ற முறையில் மற்ற எல்லா வழிகளும் தோல்வியால் அடைபட்டு மூடிக் கிடக்கும் போது, உண்மையான பிரார்த்தனை மூலம் தங்கள் நோய் நீங்கி நலம் பெற்றோரை நான் பார்த்திருக்கிறேன்!

'இயற்கையின் நியதிகள்' என்று சொல்லப்படுபவற்றை உலகில் மீறக் கூடிய ஒரே சக்தி பிரார்த்தனைதான்!''

பிரார்த்தனை அதிசயிக்கத்தக்க விதத்தில் செயல்பட்டு, நல்லவை நடக்கும் போது அவற்றை "அற்புதங்கள்'' என்கிறோம். ஆனால் பிரார்த்தனை மூலம் தினசரி வாழ்க்கைக்கு வற்றிடாத ஜீவசக்தி கிடைக்கிறது. இதை உணர்ந்த ஆண்களும், பெண்களும் நிலையான, அமைதியான அற்புதத்தை ஒவ்வொரு மணி நேரமும் அனுபவிக்கிறார்கள்'' என்கிறார் அவர்.

"பிரார்த்தனை என்பது வெறும் வழிபாடு மட்டுமில்லை. மனிதன் வழிபடும் சக்தியின் கண்ணுக்குத் தெரியாத வெளிப்பாடு அது. மனிதன் உருவாக்கக்கூடிய வலிமை வாய்ந்த சக்தி அது'' என்று இவ்வாறு பிரார்த்தனையின மகிமை பற்றி அலெக்ஸி காரல் விளக்கிய கட்டுரையை ஒவ்வொருவரும் தன் குடும்ப இலக்கியமாக ஆக்கிக் கொள்ள வேண்டும்.

அலெக்ஸி காரலின் அறைகூவலால் விழித்துக் கொண்ட விஞ்ஞானிகள் சந்தேகக் கண்ணோடு ஆனால் திறந்த மனத்தோடு பிரார்த்தனை பற்றி ஆராய ஆரம்பித்தனர். ஆய்வு மூலம் அவர்கள் கண்டுபிடித்த அறிவியல் முடிவுகளை அவர்களாலேயே நம்ப முடியவில்லை.

## அறிவியல் விளக்கும் பிரார்த்தனை பலன்கள்:

லூதர் பர்பாங் என்னும் அமெரிக்க விஞ்ஞானி பிரார்த்தனை மூலம் சாதாரண பயிர் ரகங்களை வீரியம் வாய்ந்த பயிர்களாக மாற்றினார். அந்தப் பயிர்களின் அருகில் இருந்து பிரார்த்தனை புரிந்து அவற்றின் விளைச்சலை அதிகப்படுத்தினார்!

டாக்டர் கர்னல் கிரிபால் சிங் என்ற பிரபல மூளை இயல் நிபுணர் தனது 600 மூளை நோயாளிகளை பிரார்த்தனை நல்ல முறையில் குணமாக்கியது என்று கூறி உள்ளார். (Medical Times Vol XIII No 2 Feb 1983)

பரபரப்பும், வேகமும், மன இறுக்கமும் அதிக நிலையில் உள்ள இந்த யுகத்தில், "பிரார்த்தனை மிக மிக அதிக அளவில் நரம்பு மண்டல பாதிப்புகளைத் தவிர்த்து மனநலத்தைத் தரும் சக்தியாக இருக்கிறது" என்று அவர் கூறி இருக்கிறார்.

டான்பிலேயகர் என்னும் பிரபல அறுவை சிகிச்சை நிபுணர், "என்னை முட்டாள் என்று வேண்டுமானாலும் கூறிக் கொள்ளுங்கள். எனது நோயாளிகளை தினமும் பிரார்த்தனை செய்யுமாறு நான் கூறுகிறனே். இது அறிவியல் ரீதியாக சரியோ இல்லையோ எனக்குத் தெரியாது. ஆனால் அனுபவ ரீதியாக பலன் தருகிறது" என்கிறார்.

உலகின் பிரபல மாத இதழான ரீடர்ஸ் டைஜஸ்ட் தொடர்ந்து தனது இதழ்களில் (மார்ச், டிசம்பர் 1998, நவம்பர் 1999) மருத்துவ உலகில் பிரார்த்தனை புரியும் புரட்சிகளை

அறிவியல் ஆய்வு முடிவுகளை ஆதாரங்களுடன் விளக்கி உள்ளது.

ஹார்வர்ட் மெடிகல் அசோசியேட் புரபஸர் டாக்டர் ஹெர்பர்ட் பென்ஸன் "அடிக்கடி பிரார்த்தனை செய்வதால் சுவாசமும், இதயத் துடிப்பும் சீராக இயங்குகிறது'' என்கிறார். ட்யூக் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர் கோனிக் ஒரே வியாதியால் பீடிக்கப்பட்டவர்கள் 455 பேர்களில் தினமும் பிரார்த்தனை செய்தோர் விரைவில் நலம் அடைந்து வீடு திரும்பியதையும், பிரார்த்தனை புரியாதோர் தொடர்ந்து கூடுதலாக சிகிச்சையைத் தொடர வேண்டி இருந்தது என்றும் விளக்கியுள்ளார்.

இது ஒருபுறம் இருக்க பிரபல இதய நோய் நிபுணர் லாரி டோஸியின் அனுபவமோ வேறாக இருந்தது. டெக்ஸாஸ் ஆஸ்பத்திரி ஒன்றில் நுரையீரலில் இரு பகுதிகளிலும் கானசரால் பீடிக்கப்பட்ட ஒரு நோயாளி சீக்கிரமே மரணம் அடைவது நிச்சயம் என்று தன் மருத்துவ அறிவு மூலம் முடிவுக்கு வந்தார் அவர்.

இந்த நிலையில் வேறு ஒரு இடத்திற்குப் பணி மாற்றம் செய்யப்பட்ட அவர் மீண்டும் ஒரு வருடம் கழித்து அதே ஆஸ்பத்திரிக்கு வந்தார். மரணம் அடைவார் என்று தான் குறிப்பிட்ட நோயாளி பூரண குணம் அடைந்து அங்கிருப்பதைப் பார்த்து ஆச்சரியப்பட்ட அவர் இடைவிடாத அவரின் பிரார்த்தனையே அவரைக் குணமாக்கியது என்று அறிந்து ஆச்சரியப்பட்டார். இது அவரின் வாழ்க்கைப் பாதையையே மாற்றி விட்டது. பிரார்த்தனையின் சக்தியைப்

பற்றி ஆராய ஆரம்பித்தார். விளக்க முடியாத பெரும் நன்மைகளை பிரார்த்தனை தருவதைப் பார்த்த அவர் உலக பிரார்த்தனை இயக்கத்தின் முக்கியப் புள்ளியாக இன்று மாறி பல புத்தகங்களை எழுதியுள்ளார்.

## உலக முடிவு வந்தால்....

உலகின் முடிவு – அதாவது பூமியின் அழிவு ஐந்து விதங்களில் இருக்கும் (பயப்பட வேண்டாம்; பல்லாயிரம் ஆண்டுகளுக்கப் பின்தான்!) என்று ஆராய்ந்த விஞ்ஞானிகள் நியூயார்க் பிளானிடோரியத்தில் 1949ம் ஆண்டு ஜூலை மாதம் 30 ம் தேதி அதை நேரடியாக விளக்கிக் காண்பிக்க, தேர்ந்தெடுக்கப்பட்ட பிரபல புள்ளிகளை அழைத்தனர். அதிக குளிர், அதிக உஷ்ணம் என்ற பல்வேறு நிலைகளை அங்கே உடல் ரீதியாக அனுபவிக்கும்படி ஏற்பாடு செய்யப்பட்ட அந்த நிகழ்ச்சி ஆரம்பமாகும் முன்னர்.

“இன்னும் சில நிமிடங்களில் உலகம் அழிந்து விடப் போகிறது என்ற நிலையில் நீங்கள் என்ன செய்வீர்கள்” என்ற கேள்வி கேட்கப்பட்டது. அனைவருமே “பிரார்த்தனை புரிவோம்” என்ற ஒரே பதிலையே கூறினர்!

பிரார்த்தனையை மிகச் சுலபமாக விளக்கி விட்டது இந்த நிகழ்ச்சி!

ஆமாம், நமது சக்திக்கு மீறிய சூழ்நிலை உருவாகும் போது நம்மைக் காக்க வல்லது பிரார்த்தனை ஒன்றுதான்!

## காந்திஜி வாழ்க்கையில்

மகாத்மா காந்தி தனது வாழ்க்கையின் ஆதாரமாக பிரார்த்தனையையே நம்பினார். “பேரறிவு படைத்தவன் என்று என்னை நான் கூறிக்கொள்ளப் போவதில்லை. ஆனால் பிரார்த்தனை மீது நம்பிக்கை உள்ளவன் என்று என்னை நிச்சயமாகக் கூறிக் கொள்ள முடியும்'' என்று ஆணித்தரமாக அடித்துக் கூறிய அவர், பிரார்த்தனை பற்றிய அற்புதமான கட்டுரைகளை 'யங் இந்தியா', 'ஹரிஜன்' ஆகிய பத்திரிகைகயில் 1926 முதல் 1938 வரை எழுதியிருக்கிறார். பிரார்த்தனையால் பலன் உண்டா என்று பலரும் காந்திஜியைக் கேட்டதற்கான சந்தேக விளக்கமே இந்தக் கட்டுரைகளாக மலர்ந்தன.

“வாழ்க்கையில் நான் செய்த குறிப்பிடத் தகுந்த காரியம் எதுவாயினும் அதை நான் பகுத்தறிவால் தூண்டப்பட்டு செய்யவில்லை; உள்ளுணர்வால் துாண்டப்பட்டே செய்தேன்! அந்த உணர்வை கடவுள் என்றே கூறுவேன்'' என்று விளக்கிய அவர், தினசரி பிரார்த்தனை மூலம் கடவுளுடன் பேசுவதற்கான ஒரு பாலத்தை அமைத்துக் கொண்டார்.

தென் ஆப்பிரிக்காவில் கொடுமைகளுக்கு ஆளாகி மீண்டதிலிருந்து கடைசி வரை பல்வேறு பிரச்சினைகளை எதிர்கொண்டு அவைகளுக்குத் தீர்வு காண வலிமை தந்தது பிரார்த்தனையே என்றார்.

“என்னைக் காத்து வருவது பிரார்த்தனையே! இது இல்லாவிடில் நான் பைத்தியக்காரனாகி வெகு காலம் ஆகி இருக்கும்'' என்றும் தெளிவுபட எழுதினார்.

## அனைத்து மதங்களும் வலியுறுத்தும் பிரார்த்தனை!

"சொர்க்கத்தின் திறவுகோல் பிரார்த்தனை" என்கிறார் நபிகள் நாயகம்!

"கேளுங்கள் கொடுக்கப்படும்; தட்டுங்கள் திறக்கப்படும்" என்கிறார் ஏசு பிரான்!

"மாம் அனுஸ்மர!" என்றும், "யோக க்ஷேமம் வஹாம்யஹம்" என்றும் கூறுகிறார் கிருஷ்ணபரமாத்மா!

ஸ்மரணம் என்றால் நினைப்பது. அனுஸ்மரணம் என்றால் இடைவிடாமல் நினைப்பது. அப்படி நினைப்பவரின் யோக க்ஷோமத்திற்குத் தானே பொறுப்பு என்பது அவர் கீதையில் கூறி இருக்கும் சத்திய வாக்கு!

## பிராத்தனை என்ன தரும்?

பிராத்தனை மூலம் என்னென்ன பெறலாம்?

பிராத்தனை பற்றி அனைத்தும் அறிந்த ஒரே மகா புருஷர் என்று போற்றப்படுபவர் தேவ ரிஷி நாரதரே! அவர், பிராத்தனை புரிவதால் ஒருவர்

1. சித்தோ பவதி
2. அம்ருதோ பவதி
3. த்ருப்தோ பவதி என்கிறார்

அதாவது பிராத்தனை மூலம் ஒருவர்

1. சித்தர் ஆகிறார் (சித்தர் என்றால் பூரண நிலை எய்தியவர் என்று பொருள்)

2. தெய்வீக நிலையை அடைகிறார்.

3. திருப்தி அடைகிறார்.

இந்த மூன்றுமே பிரார்த்தனை தரும் இறுதிப் பயன்கள்!

## எண்ண சக்தி என்ன செய்யும்?

எண்ணத்திற்கு ஆற்றல் உண்டா? எண்ண சக்தி என்ன செய்யும் என்பதை அறிவதில் விஞ்ஞானிகள் அறிவு பூர்வமான விஞ்ஞானம் ஆரம்பமானதிலிருந்தே ஆர்வம் காட்டி வருகின்றனர்.

1730ம் ஆண்டு தான் தொழிற்புரட்சி நடந்த இங்கிலாந்தில் மந்திரவாதிகளின் பில்லி சூன்ய ஏவல் மூலமாக ஆளை எரித்த கடைசி சம்பவம் நடைபெற்றது. தொடர்ந்து எழுந்த விஞ்ஞான யுகத்தில் இப்படிப்பட்ட ''மந்திரவாத'' வேலைகள் நின்றுவிட்டன!

ஆனால் 1778ல் ப்ரான்ஸ் மெஸ்மர் தனது ஆள்காட்டி விரலை நோயாளியை நோக்கிக் காட்டி அவர்களது தீராத வியாதியையெல்லாம் தீர்த்து விடுவதாக வந்த தகவல்களைத் தொடர்ந்து அறிவியல் உலகம் மிகவும் கவலைப்பட ஆரம்பித்தது.

ஆனால் இப்படி ஒரு வசிய சக்தி– மெஸ்மரிஸம் என்று பின்னால் பெயர் பெற்றது– இருப்பதை அனைவரும் அதிசயத்துடன் பார்த்தனர்.

தொடர்ந்து. எண்ணத்திற்கு சக்தி உண்டா, அதை சோதனைச் சாலையில் நிரூபிக்க முடியுமா என்ற

வினாக்கள் எழுந்தன. அறிவியல் சோதனைகளில் முன்னணியில் இருக்கும் அமெரிக்கா, ரஷியா போன்ற நாடுகள் போட்டி போட்டுக்கொண்டு டெலிபதி மற்றும் எண்ண சக்தி சோதனைகளில் இறங்கின!

சோதனைச்சாலையில் நடத்தப்பட்டு ஆதாரபூர்வமாகக் குறிக்கப்பட்ட சோதனை முடிவுகளை அமெரிக்காவில் நடத்தியவர் டீன் க்ராஃப்ட் (Dean Kraft) என்ற சைக்கிக் சிகிச்சை நிபுணர் ஆவார்.

சான்பிரான்ஸிஸ்கோ மெடிகல் ரிஸர்ச் இன்ஸ்டிடியூட்டில் 1975ம் ஆண்டு கிராப்ட் பல சோதனைகளை நடத்தினார். சோதனைச் சாலையில் உள்ள எலியின் இரத்த அழுத்தத்தையும், இதயத்துடிப்பையும் குறைக்க முடியுமா என்று அவர் சோதனை செய்து பார்க்க விரும்பினார். ப்ளெக்ஸிக்ளாஸ் (Plexiglas cage) கூடு என்ற கூண்டில் சோதனைக்கான எலி வைக்கப்பட்டது.

சோதனையை க்ராப்ட் ஓரிடத்தில் நடத்த பார்வையாளர்கள் இன்னொரு இடத்தில் இருந்தவாறே ஆரம்பத்திலிருந்து முடிவு வரை இருபது நிமிடங்கள் சோதனையைப் பார்த்தனர். எலியின் இதயத் துடிப்பைப் பதிவு செய்வதே இவர்கள் தாம்! கொஞ்சம் கொஞ்சமாக எலியின் இதயத்துடிப்பு குறைந்து கொண்டே வந்து இறுதியில் பூஜ்யத்திற்கு வந்து நின்றது.

"க்ராப்ட், நீங்கள் எலியைக் கொன்று விட்டீர்கள்" என்று பார்வையாளர்கள் கூவினர்.

க்ராப்ட், தான் எலியைக் கொன்று விட்டதை ஒப்புக்கொண்டார். என்றாலும் உரிய நேரத்தில் எலியின் இதயத் துடிப்பின் அளவைக் கூறி இருந்தால் அதைக் காப்பாற்றி உயிர் பிழைக்க வைத்திருப்பேனே என்று கூறி வருத்தப்பட்டார். ஆமாம், சோதனையை பார்வையிட்டோர் க்ராப்டுக்கு சோதனைகளின் பதிவுகளைக் கூறாமலே இருந்து விட்டனர்.

எண்ண ஆற்றலைச் செலுத்தி எலியை அமெரிக்க சைக்கிக் நிபுணர் "கொன்று விட்டதைப்" போன்ற சோதனைகளை ரஷ்யாவும் மிக்க ஆர்வத்துடன் நடத்தி வருகிறது. இந்தத் துறையில் மிக்க பிரபலம் அடைந்து விட்ட நிபுணர் வாஸிலியவ் என்னும் விஞ்ஞானி ஆவார்.

'இன்ஸ்டிடியூட் ஃபார் ப்ரெயின் ரிஸர்ச்' என்ற தனது சோதனைக் கூடத்தில் வாஸிலியவ் நூற்றுக் கணக்கான சோதனைகளைச் செய்துள்ளார்.

சோதனைக்கு உட்படுத்தப்படுவோர் பல அறைகள் தள்ளி உள்ள இடத்தில் இருப்பர். வாஸிலியவ் மின் பாதுகாப்பு கூடில் (Electrically shielded enclosure) தன்னை அடைத்துக் கொள்வார்.

சோதனைக்கு உட்படுபவரைத் தனது அறையிலிருந்து எண்ண சக்தியை அனுப்பித் தூங்கச் செய்வதே சோதனையின் நோக்கம்!

எலக்ட்ரோ மாக்னடிக் ரேடியேஷன் எனப்படும் மின்காந்த அலைகள் மூலம் சோதனைக்கு குந்தகம்

விளையக் கூடாது என்பதற்காகவே ஒரு விசேஷமான கூட்டை 1930களில் வாஸிலியவ் தயார் செய்தார்.

பற்றவைப்பு (Welding) மூலமாக இரும்புத் தகடுகள் கீழ்ப்புறம் மற்றும் பக்க வாட்டுகளில் இணைக்கப்படும். கூண்டின் மேல் பாதி மட்டும் மேலே கூரையில் பொருத்தப்பட்டு இயங்கும் புல்லி (Pully) மூலமாக தூக்கப்படவும் தாழ்த்தப்படவும் ஏதுவான முறையில் அமைக்கப்பட்டிருக்கும். சோதனை செய்பவர் அதற்குள் சென்று அமர்ந்தவுடன் கூண்டின் மேல் பகுதி, கீழ் பகுதியுடன் நன்கு பொருத்தப்பட்டு வேறு எந்த புற அலைகளாலும் சோதனை ஆக்கிரமிக்கப்படாது என்று உறுதி செய்யும். மேலே உள்ள பகுதியில் மெர்க்குரி நிரப்பட்ட தொட்டி ஒன்றும் இணைக்கப்பட்டிருக்கும். இதனால் மேற்பகுதி கீழ்ப்பகுதியுடன் நன்கு இணைக்கப்பட்டிருப்பதை மேலும் நன்கு உறுதி செய்து கொள்ள முடியும்.

சோதனைக் கூடு ஒளி மற்றும் அழுத்தம் புக முடியாத படி (light and pressure tight) இருந்தது. மின் அலைகளும் உள்ளேயோ வெளியேயோ போக முடியாது.

இப்படிப்பட்ட ஒரு கூட்டினில் மூச்சுத் திணறாமல் வாஸிலியவ் எப்படித் தன் சோதனைகளைச் செய்தார் என்பதே ஒரு ஆச்சரியமான விஷயம் தான்!

இன்னொரு அறையில் உள்ள "சோதனைக்கு உட்படுத்தப் பட்டவர்" கையில் ஒரு ரப்பர் பலூன் கொடுக்கப்படும்.

அதை அவர் சீராக அழுத்திக் கொண்டே இருக்க வேண்டும். இந்த பலூன் காற்று மூலமாக இயங்கும் ஒரு அட்டவணைப் பதிவுக்கருவியில் சோதனை நடப்பதைப் பதிந்து கொண்டே இருக்கும்!

முன்பே நிர்ணயிக்கப்பட்ட ஒரு நேரத்தில் கூண்டில் இருப்பவர் கூண்டில் உள்ள ஒரு ஸ்விட்சை அழுத்துவார். அதே கணம் சோதனைக்கு உட்பட்டவரின் அட்ட வணையிலும் பதிவு ஏற்பட்டு சோதனை ஆரம்பமாவது குறிக்கப்படும். சோதனை மூலம் எண்ண அலைகள் அனுப்பப்படும். சோதனைக்கு உட்பட்டவர் தூங்க ஆரம்பித்தவுடன் அவரால் பலூனை அழுத்த முடியாது. சோதனையின் வெற்றியை இப்படி உறுதிப்படுத்த முடிந்தது! சிறிது நேரம் கழித்து "தூக்க நிலையிலிருந்து" அவர் விடுவிக்கப் படுவார்.

தூக்கத்திலிருந்து விழித்தவுடன் பலூனை உடனே அவர் அழுத்தத் தொடங்குவார். இவருக்குத் தான் தூங்கச் செய்யப்படுவதோ அல்லது விழிக்க வைக்கப்படுவதோ தெரியாது!

சோதனை முடிந்தவுடன் அட்டவணைப் பதிவுகள் வெளியிடப்படும். சாதாரணமாக இரண்டு அல்லது மூன்று நிமிடங்கள் மனக் குவிப்பிற்கு (Concentration) பிறகு சோதனைக்கு உட்பட்டவர் தூங்க ஆரம்பித்து விடுவது தெரிய வந்தது!

தூரத்திற்கும் எண்ண சக்திக்கும் ஏதேனும் சம்பந்தம் உண்டா என்று அடுத்து தன் சோதனையை விரிவு படுத்தினார் வாஸிலியவ்.

லெனின்கிராடுக்கும் செவாஸ்டோபால் என்ற நகரத்திற்கும் இடையே உள்ள தூரம் 1700 கிலோமீட்டர்! இரண்டு சோதனைகள் திட்டமிடப்பட்டன.

ஆனால் முதல் சோதனையில் சோதனையாளருக்கு உடல் நலமில்லாததைத் தொடர்ந்து சோதனை நடைபெறவில்லை.

இரண்டாவது சோதனை வெற்றிகரமாக நடைபெற்றது. சோதனையாளரின் முயற்சிக்குத் தக்கபடி சோதனைக்கு உட்பட்டவர் தூங்குவதும் விழிப்பதும் நன்கு பதிவு செய்யப்பட்டது!

மின்காந்த அலைகளோ, இடைப்பட்ட தூரமோ எண்ண சக்திக்கு தடையாக இல்லை என்பதை வாஸிலிவ் அறிவியல் சோதனை பூர்வமாக நிரூபித்தார்.

மன யோசனைகள் (Mental suggestions) அல்லது மனத்தில் எழும் எண்ண அலைகளுக்கு ஆற்றல் உண்டு என்பதை அவர் சோதனைகள் நிரூபித்ததைத் தொடர்ந்து ஆழ்கடலில் நீர் மூழ்கி கப்பலில் உள்ளவர்களிடையே இந்த சோதனை நடத்தப்பட்டு அதுவும் வெற்றி பெற்றது. விண்வெளியில் செல்லும் வீரர்களுக்கு உரிய நேரத்தில் கட்டளைகளைப் பிறப்பிக்க எண்ண அலை சக்தி உதவுமா என்பதே இன்றைய விஞ்ஞானிகளின் கேள்வியாக இருக்கிறது.

மனத்திலிருந்து எழும் எண்ணங்களை இன்னொருவருக்குச் செலுத்தி நல்லது செய்ய முடியும் என்று

நிரூபிக்கப்பட்டதே பிரார்த்தனை மூலம் எழும் எண்ணங்களுக்கு சக்தி உண்டு என்பதை நிரூபிக்கப் போதுமானதாக இருக்கிறது. இந்த முடிவுகள் மூலம் உடன் மறை அல்லது பாஸிடிவ் எண்ணங்களுக்கு சக்தி உண்டு என்றும் எடுத்துக் கொள்ளலாம்.

ஆகவே தான் நம் முன்னோர்கள் பிரார்த்தனை மூலம் நல்ல எண்ணங்களை வெளிப்படுத்தும் வழிமுறைகளை வற்புறுத்தினார்கள் போலும்!

# காயத்ரி மந்திரம் பெண்களும் கூறலாம்!

**வேதமாதா:**



அநேக ரகசியங்களைத் தன்னுள் அடக்கி வைத்திருக்கும் அபூர்வ மந்திரம் காயத்ரி!

காயத்ரி 'வேதமாதா' என்று கூறப்படுகிறது! எந்த மந்திரத்தை உச்சரித்தாலும் சரி, தாந்த்ரீக மார்க்க உபாசனையாக இருந்தாலும் சரி, காயத்ரி மந்திரத்தை உச்சரிப்பதால் மட்டுமே சாதனை பூர்த்தியாகும் என்று சாஸ்திரங்கள் அறுதியிட்டு உறுதி கூறுகின்றன!

**சரணதாஸர்:**

நாதிர் ஷாவிற்கு டெல்லி மீது ஒரு கண் விழுந்தது. பேராசை கொண்ட அவன் பெரும் படையைத் திரட்டிக் கொண்டு வந்து, டெல்லி மீது படை எடுத்தான். அப்போது டெல்லியை ஆண்டு வந்த முகம்மது ஷா, தன் படைகள் மூலம் நாதிர் ஷாவிற்குச் சரியான பாடம் கற்பித்து அவனைத் தோல்வியுறச் செய்தான். மீரட்டிற்கு ஓடி வந்த நாதிர்ஷா பிறகு ஈரானுக்குத் திரும்பி விட்டான்.

ஆனால் அவனுக்கு எப்படி முகம்மது ஷா இவ்வளவு தீவிரமாகத் தனக்குப் பதிலடி கொடுக்க முடிந்தது என்பது ஆச்சரியமாக இருந்தது. முகம்மது ஷா, நாதிர் ஷாவிற்கு ஒரு கடிதம் அனுப்பினான்.

அதில், 'நீங்கள் படை எடுத்து வருவீர்கள் என்பதை ஆறு மாதத்திற்கு முன்னாலேயே எங்கள் நாட்டில் உள்ள முனிவரான சரணதாஸர் எனக்குக் கடிதம் மூலம் விளக்கித் தகுந்த முன்னேற்பாடுடன் இருக்குமாறு அறிவுறுத்தினார். அவரது கூற்றுப்படியே நானும் முன்னெச்சரிக்கையுடன் இருந்து வெற்றி பெற்றேன்'' என்று எழுதி சரணதாஸர் தனக்கு ஆறு மாதத்திற்கு முன் எழுதிய கடிதத்தையும் இணைத்து அனுப்பினான்.

நாதிர் ஷாவிற்கு வியப்புத் தாள முடியவில்லை. ஆறு மாதத்திற்கு முன்பு தன் மனதில் டெல்லி மீது படை எடுக்க வேண்டும் என்ற எண்ணமே ஏற்படவில்லையே, அப்படி இருக்க எப்படி சரணதாஸரால் இப்படி ஒரு கடிதம் அனுப்ப முடிந்தது என்று வியந்தான். நேரடியாகச் சரணதாஸரைச் சந்தித்து வணங்கி, அவரது ஆசிகளையும் பெற்றான்.

ராஜஸ்தான் மாநிலத்தில் ஆள்வார் மாவட்டத்தில் டெஹ்ரா என்ற கிராமத்தில் எளிய அந்தணர் குலத்தில் பிறந்தவர் சரணதாஸர். தாயார் குஞ்சு பாயும், தந்தை முரளீ தரரும் அவரை தெய்வ வழிபாட்டில் ஈடுபடுத்தினர். காயத்ரியை உச்சரிக்க ஆரம்பித்தார் சரணதாஸர், ஒருநாள் இரவு மகரிஷி சுகர் அவரது கனவில் தரிசனம் தந்து காயத்ரி உபாசனையை விளக்கினார். நர்மதை நதிக்கரையில் அமர்ந்து நெடுங்காலம் காயத்ரியை வழிபட்ட சரணதாஸர் அங்கிருந்து கிளம்பி முஸாபிர் நகரில் உள்ள சுக்ரதலம் என்ற கிராமத்திற்கு வந்தார். அங்கே பகவதி ரூபமாக காயத்ரி அவருக்குத் தரிசனம் தந்தாள்.

சரணதாஸர் மனிதகுல நன்மைக்காக முகம்மது ஷாவை எச்சரிக்க, அதனால் மகிழ்ந்த அவன் பல கிராமங்களை மானியமாக அளிக்க முன்வந்தான். அதை ஏற்க மறுத்து அவர் பல கல்விச் சாலைகளையும், அற நிலையங்களையும் நிறுவுமாறு அவனுக்கு அறிவுறுத்தினார்.

இன்றும் சுக்ரதல கிராமத்தில் வருடம் தோறும் அவர் நினைவாக காயத்ரி மகோற்சவம் நடைபெற்று வருகிறது!

**வித்யாரண்யர்:**

இதே போல காயத்ரியை வழிபட்ட மகாமுனிவர் வித்யாரண்யர் ஆவார். 24 மகாபுரச்சரணம் அளவு காயத்ரி மந்திர உச்சாடனம் செய்த அவர் காயத்ரி தேவியின் தரிசனத்திற்காக ஏங்கினார். இவ்வளவு முறை உச்சரித்தும் தரிசனம் கிடைக்காத நிலையில் அவர் சந்யாசியானார்

அர்ப்பண மனோபாவ நிலையில் காயத்ரி வழிபாட்டைத் தொடர்ந்த அவருக்குத் திடீரென்று ஒரு நாள் காயத்ரி தரிசனம் கிடைத்தது!

புளகாங்கிதம் அடைந்த வித்யாரண்யார் ஆச்சரியம் அடைந்தார்.

"ஹே, தேவியே! 24 மகா புரச்சரணம் செய்து நான் ஏங்கிய போது தரிசனம் தராத நீ. திடீரென்று இன்று தரிசனம் தந்தது எப்படி?" என்று வியந்து கேட்டார்.

"அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு" என்று கூறிய தேவி அதை விளக்கி அருளினாள்.

"முதலாவதாக, 24 மகா புரச்சரணம் செய்து உனது பூர்வ ஜென்மங்களில் செய்த 24 மகா பாவங்களைத் தீர்த்துக் கொண்டாய். அப்போது என்னைத் தரிசிக்கும் தகுதி உனக்கு ஏற்பட்டது. என்றாலும் இரண்டாவது காரணம் என் தரிசனத்தைத் தடுத்தது. அனைத்து ஆசைகளையும் துறந்தவனே என்னைக் காண முடியும். என்னைத் தரிசிக்க வேண்டும் என்பது எவ்வளவு நல்ல தெய்வீக ஆசையாக இருந்தாலும் அது உன்னிடம் இருந்ததால் நான் தோன்றவில்லை. எந்தக் கணம் அந்த ஆசையையும் நீ துறந்தாயோ அந்தக் கணமே நான் உன் முன்னர் தோன்றி விட்டேன். உனக்கு என்ன வரம் வேண்டுமோ அதைக் கேள்" என்றாள் தேவி.

"உனது தரிசனம் கிடைத்த பிறகு எனக்கு வேறு என்ன வேண்டும்" என்று வணங்கினார் வித்யாரண்யர். மக்களின் நன்மைக்காக ரிக், யஜுர், சாம வேதங்களுக்கான

உரைகளையும், இன்னும் ஏராளமான நூல்களையும் எழுதி அருளினார். அப்போது அவரை அணுகிய இரண்டு ராஜகுமாரர்கள் தங்களுக்கு ஒரு அரசு அமைத்துத் தர அவரை வேண்டினர். வித்யாரண்யர் விஜய நகர அரசை ஸ்தாபித்துத் தந்தார்.

## நலம் நல்கும் மந்திரம்

*காயத்ரி மந்திரத்தால் ஏற்படாத நலன்களே இல்லை.*

*"ஓம் பூர் புவ ஸுவ:*

*தத் ஸவிர்துர்வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹீ*

*தியோயோன : ப்ரசோதயாத்". இதுவே காயத்ரி மந்திரம்.*

*"செங்கதிர்த் தேவன் சிறந்த ஒளியினைத் தேர்கின்றோம்.*

அவன் எங்கள் அறிவினைத் தூண்டி நடத்துக" என்று இவ்வாறு மகாகவி பாரதியார் காயத்ரியை மொழி பெயர்த்துள்ளார்.

காயத்ரி மந்திரத்தை உச்சரிப்பதால் என்னென்ன பயன்கள் ஏற்படும்?

1. வியாதிகள் நீங்கும்
2. விஷம் இறங்கும்.
3. புத்தி கூர்மை அதிகரிக்கும்
4. அரசு அலுவல்கள் நிறைவேறும்
5. தரித்திரம் தொலையும்; செல்வம் சேரும்
6. நல்ல குழந்தைகள் பிறக்கும்
7. எதிரிகள் ஒழிவர்

8. பைத்தியம், பிசாசு பிடித்தல் நீங்கும்
9. மற்றவருக்கு நலன் ஏற்படுத்தும் சக்தி உண்டாகும்.
10. அனைத்து விபத்திலிருந்து காக்கும் ரக்ஷ கவசம் சூழும்
11. கஷ்டங்கள் அனைத்தும் மறையும்.
12. அப சகுனங்கள் மறைந்து, சுப சகுனங்கள் தோன்றி, காரியங்கள் நிறைவேறும்.
13. கெட்ட கனவுகள் நீங்கும்.

இப்படி ஏராளமான பயன்களைத் தரவல்ல மகா மந்திரம் காயத்ரி. இதன் ஒவ்வொரு எழுத்தும் ஒரு நன்மையைச் செய்கிறது! அனைத்து அட்சரங்களும் சேர்த்துச் சொல்லப்படும் போது ஏற்படும் மகிமையை முழுதுமாக உரைக்க யாராலும் முடியாது!

## பெண்களும் கூறலாம்

இப்படிப்பட்ட அற்புத மந்திரத்தைப் பெண்களும் கூறலாம். வீட்டில் கேசட் ஒலிக்கக் கேட்கலாம். உச்சரிப்பு முக்கியம் என்பதால் நன்கு அறிந்தவர் மூலம் இதைக் கற்க வேண்டும். காயத்ரி தேவி வழிபாடே பெண் வழிபாடுதான்!

வேத காலத்தில் பல் ரிஷி பத்தினிகள் மந்திரங்களைக் கண்டறிந்தவர்களாக இருந்தனர்.

ஆனால் அவர்கள் கடும் சாதனை இயற்றி, சுத்தமுடையவர்களாகவும், பிறகுக்காக வாழ்பவர்களாகவும் இருந்தனர். இந்த நவீன யுகத்தில் சுத்தமான மனதுடன் (வீட்டு விலக்கு நாட்களைத் தவிர மற்ற நாட்களில்),

சுத்தமாக இருந்து காயத்ரியை உச்சரிப்பது குடும்பத்திற்கே நலம் பயக்கும். விவாகத்தை எதிர்நோக்கி இருக்கும் கன்னியர் நல்ல கணவனைப் பெறவும் நல்ல குழந்தைகளைப் பெறவும், காயத்ரியை வழிபடுவது அவசியம்.

வேத ஒலி முறையிலான உச்சரிப்பில் அல்லாது சாதாரண மந்திரமாக இதைப் பெண்கள் எப்போதும் கூறலாம். முழுதுமாக கூற முடியாதவர்கள் 'ஓம் பூர் புவ ஸுவ!' என்பதை மட்டும் கூறினாலும் நற்பயன்கள் ஏற்படும். காயத்ரி மந்திர மகிமையை ஆயிரக்கணக்கான சுலோகங்கள் மூலம் இதிஹாஸங்களும், பதினெட்டு புராணங்களும் கூறி உள்ளன!

சென்ற நூற்றாண்டில் மகரிஷி ரமணர், சுவாமி விவேகானந்தர், மகாத்மா காந்தி, அரவிந்தர், தாகூர் உட்பட ஆயிரக்கணக்கானோர் இதன் பெருமையையும், மகிமையையும் ஒரு பக்கம் விளக்கி இருக்க, பல ஆயிரம் பக்கங்கள் மூலம் பல நூறு சம்பவங்களையும், ஏராளமான சுலோக விளக்கங்களையும் அளித்து இதன் பெருமையைப் பரப்பியவர் ஸ்ரீ ராமசர்மா ஆசார்யர் ஆவார்.

உத்வேகமூட்டும் காயத்ரியை ஆண்களும், பெண்களும் கூறும்போதே நல்ல பலன்கள் ஏற்படும்; அதை நாம் பெறும்போதே நம் அறநூல்களின் கூற்றின் உண்மை வெளிப்படும்!

# உதவத் துடிக்கும் தேவதைகள்!

"நக்க பிரான் அருளால் இங்கு
நடைபெறும் உலகங்கள் கணக்கிலவாம்!
தொக்கன அண்டங்கள்– வளர்
தொகை பல கோடிபல் கோடிகளாம்"

– மகாகவி பாரதியார்

## மறைந்திருக்கும் சக்திகள்



லாரிஸா விலன்ஸ்கயா என்ற ரஷியப் பெண்மணி இரும்புத்திரை நாடாக இருந்த ரஷியாவில் நடந்த சைக்கிக் சோதனைகளை வெளி உலகிற்கு எடுத்துக்கூறினார். இவரது சிநேகிதி ஒருவர் கையால் தொட்டாலேயே கைப்பைக்குள் ஒளித்து வைக்கப்பட்டிருக்கும் பந்துகளின் நிறங்களைச் சரியாகச் சொல்லிவிடுவார். "தோல் பார்வை" எனப்படும் இந்தச் சக்தி அபூர்வமானது!

"கண்கள் இல்லாத பார்வை" (eyeless sight) பற்றி விரிவான ஆராய்ச்சிகளை நடத்திய டாக்டர் ரஜ்ரன், ரோஸா என்ற பெண்மணியின் கண்களைக் கட்டி வெவ்வேறு வண்ணங்களுடைய ஒளிக்கற்றைகளைக் காட்டி நிறத்தைச் சொல்லச் சொன்னார், ரோஸா அவற்றைச் சரியாகச் சொன்னதோடு மேஜையின் மேலிருந்த அச்சிடப்பட்ட சிறிய எழுத்துக்களையும் படித்தார்! இதை நேரில் ஆராய வந்த

'லைஃப்' பத்திரிகை நிருபர் தன் விசிட்டிங் கார்டைக் காட்ட அதையும் அப்படியே பார்க்காமல் படித்துச் சொன்னார். இதை "எக்ஸ் எனர்ஜி" என்று விஞ்ஞானிகள் பெயர் சூட்டினர்,

இப்படிப்பட்ட "மறைமுக சத்திகள்" எவ்வளவோ உள்ளன என்று விஞ்ஞானிகள் இப்போது கூறுவதோடு சோதனைகள் மூலம் நிருபித்தும் வருகின்றனர்.

உடலைச் சுற்றிய சக்திப் படலத்தை விஞ்ஞானிகள் ஒப்புக் கொள்வதோடு அதிர்வுகள் மூலம் ஏற்படும் ஆற்றலை ஆராயும் நூற்றுக்கணக்கான சோதனைகளையும் நடத்தி முடிவுகளைக் கண்டு பிரமித்துள்ளனர்,

டாக்டர் ராவிட்ஜ், சூரியனும், சந்திரனும் மனிதனின் சக்தி களங்களை மாற்றும் ஆற்றல் படைத்தவையாக உள்ளன என்று நிருபித்து அறிவியல் பத்திரிகைகளில் கட்டுரைகள் எழுதியுள்ளார்,

இப்படி எண்ணற்ற சக்திகள் என், எப்படி ஏற்படுகின்றன என்பதை அவர்களால் இதுவரை கண்டுபிடிக்க முடியவில்லை. டாக்டர் வியாசெஸ்லாவ் ஜெய்ட்செவ் இந்திய யோகிகளையும் ராமாயண, மகாபாரத இதிகாசங்களையும் குறிப்பிட்டு, "வானத்து தேவதைகள்" இங்கு வந்திருப்பதோடு இனியும் வருவார்கள் என்று அடித்துக் கூறுகிறார்.

இந்த விஞ்ஞானியின் ஆய்வுபூர்வமான உண்மைக்கு விஞ்ஞானிகள் மத்தியில் வரவேற்பு உள்ளது.

ஸ்டான்போர்ட் ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட்டில் விஞ்ஞானிகள் ரஸ்ஸல் டார்க்கும் கெய்த் ஹராரியும் ரிமோட் வியூயிங் எனப்படும் தொலைதூரக் காட்சிகளை மனம் மூலம் அனுப்பி பல மைல்களுக்கு அப்பால் உள்ள ஒருவரை வரைபடமாக வரையச் செய்து பல சோதனைகளை வெற்றிகரமாக நடத்தியுள்ளனர். மனிதன் அறியாத பல்வேறு ஆற்றல் பற்றி இன்று அனைவரும் நாடும் சோதனைச்சாலையாக இந்த ஸ்டான்போர்ட் ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட் (SRI-Standford Research Institute) ஆகிவிட்டது.

கண்ணுக்குப் புலனாவதே உண்மை. ஐம்புலன்களால் அறியப்படுவதை மட்டுமே அங்கீகரிக்க முடியும் என்ற அறிவியலின் பழைய கொள்கை மாறி, "மறைந்திருக்கும் உலகங்கள்" பற்றியும், அங்குள்ள தேவதைகள் பற்றியும், அபூர்வ சக்திகள் பற்றியும் விஞ்ஞான உலகம் அரை மனதோடு பார்க்க ஆரம்பித்திருக்கிறது.

## எண்ணற்ற காவல் தேவதைகள்

ஜியாஃப்ரி ஹாட்சன் என்னும் உலகின் பிரபலமான கண்ணுக்குப் புலனாகாத சக்தி பற்றி ஆராயும் நிபுணர் "The Kingdom of Gods" என்ற தன்னுடைய நூலில் ஒவ்வொரு இடத்திற்கும் ஒரு அதிதேவதை உண்டு என்கிறார். சமுத்திரம், மலை, நதி, நாடு, நகர் இவற்றைக் காக்கும் தேவதைகளை அவர் வண்ணப்படமாகத் தன் நூலில் சித்திரித்திருக்கிறார்.

வால்மீகி ராமாயணத்தில் இலங்கையைக் காக்கும் தேவதைளை அனுமார் சந்தித்ததையும், அர்ஜுனன் சுவர்க்கம் செல்வதற்கு முன் தனக்குத் தவம் செய்ய இடம் அளித்த மலைக்கு நன்றி கூறி விடைபெற்றதையும் நாம் பார்த்தால் இப்படிப்பட்ட ஆதாரங்கள் நம் நூல்களில் ஏராளமாக இருப்பது தெரியவரும்.

மதுரையில் வசிப்போர் மங்கல காரியம் தொடங்குவதற்கு முன்னர் மீனாட்சி அம்மன் கோவில் வடக்குக் கோபுர முனியாண்டிக்குக் காணிக்கை செலுத்திய பின்னரே காரியம் தொடங்குவது போல ஊருக்கு ஊர் காவல் தெய்வ வழிபாடு செய்யாது முன்னோர் ஒரு காரியத்தையும் செய்ய மாட்டார்கள்.

இந்து மதம் "தேவர்கள்" என்றும் (பிரகாசிப்பவர்கள் என்று பொருள்), கிறிஸ்தவம் "ஏஞ்சல்ஸ்" என்றும், எகிப்திய மதம் "லிபிகாஸ்" (திக் தேவதைகள்) என்றும் யூத மதம் "செபிராக்கள்" என்றும் இவர்களைக் கூறும். உலகின் அனைத்து மதங்களும் நமக்கு உதவத் துடிக்கும் தேவதைகளைக் குறிப்பிடுகின்றன.

**மறைந்திருக்கும் உலகங்கள்**

இப்படி தேவதைகள் ஒருபுறம் இருக்க, மறைந்திருக்கும் உலகங்களும் ஏராளம் என்கின்றனர் யோகிகள்! Our Sixth Sense என்ற நூலை எழுதிய ரிச்சட் "உண்மையில் நாம் காணும் பௌதிக உலகம் நம்மைச் சுற்றி அதிர்வுகளை அனுப்புகிறது. அவற்றில் சிலவற்றையே நம் புலன்கள் உணர்கின்றன. சிலவற்றை அறிவியல்

உபகரணங்களை உபயோகித்தும் கூட உணரமுடியவில்லை. ஆனால் சில மனித மனங்கள் மட்டும் அந்தப் பெரிய உண்மையின் சிறிய திவலைகளை அறிந்து அதன்படி செயலாற்றுகின்றனர்'' என்கிறார்.

நாம் காணும் உலகத்தை விட நாம் காணாத உலகங்களை ரிஷிகள், முனிவர்கள், ஞானிகள், யோகிகள் அறிகின்றனர். பராசர முனிவர் ஐந்து வயதில் பிரம்ம லோகம் சென்றிருக்கிறார்.

அர்ஜுனன் இந்திரனின் சாரதியான மாதலியுடன் ரதத்தில் ஏறி ''ஸுர வீதியில்'' நட்சத்திரங்கள் ஜொலிக்க பல உலகங்களைக் கண்டு வியக்கின்றான். மாதலியிடம் அவன் கேட்டபோது, ''தாமாகவே பிரகாசிக்கும் லோகங்கள் இவை'' என்று அவன் பதில் கூறுகிறான். ஆயிரக்கணக்கான யோகிகள், கந்தர்வர்கள் ஜொலிப்பதைப் பார்த்த அவனிடம் மாதலி, '' இவர்களையே பூமியிலிருந்து நட்சத்திரங்களாகப் பார்க்கிறாய்'' என்று கூறுகிறான். பிறகு சுவர்க்க லோகத்தை அர்ஜுனன் பார்த்ததை வனபர்வம் 42, 43ம் அத்தியாயங்கள் விவரிப்பதைப் படிப்பதே ஒரு சுகமான அனுபவம்!

## உதவத் துடிக்கும் தேவதைகள்

உண்மையில் மறைந்திருக்கும் இந்த உலகங்களில் உள்ள நல்ல சக்திகளுடன் கூடிய தேவதைகள் அனைத்தும் மனிதனுக்கு உதவத் துடிக்கின்றன. ரிக் வேதத்தில் வியாதிகளைப் போக்கவல்ல மந்திரமான ''உதயந் அத்ய''

என்ற மந்திரம் சூரியனை "மித்ரன்" (நண்பன்) என்று குறிப்பிட்டு உடல் நோய்களைப் போக்க வேண்டுகிறது.

ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்தச்ரவா:
(இந்திரன் நமக்கு மங்களம் நல்குவானாகுக)

ஸ்வஸ்தி ந: பூஷா விச்வவேதா:
(எல்லாமறிந்த பூஷா என்ற சூரியன்
நமக்கு மங்களம் நல்குவானாகுக)

ஸ்வஸ்தி நஸ்தார்க்ஷ்யோ அரிஷ்ட நேமி:
(பழுதடையா தேர்ச்சக்கர உருளையோடு என்றும் தடைபடாத சஞ்சாரத்தை உடைய கருடபகவான் நமக்கு மங்களம் நல்குவானாகுக)

என்று தேவர்கள் அனைவரும் நமக்கு நலம் தரட்டும் என்று வேண்டும் மந்திரம் அர்த்தமுள்ள மந்திரமாக இருக்கிறது. இதைப்போன்ற நூற்றுக்கணக்கான மந்திரங்கள், உதவுவதற்காக உள்ள தேவதைகளை நாம் அணுக வேண்டிய முறைகளைத் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

ரிக் வேதம் முதல் மண்டலம் 17வது அனுவாகம் அச்வினி தேவர்களைப் பற்றிய கதைகளைக் கூறுகிறது. இவை மனிதர்களுக்கு வலிய வந்து உதவி செய்யத் துடிக்கின்றன!

யஜுர் வேதமும் பல தேவதைகளும் நமக்கு உதவி செய்யத் துடிப்பதை எடுத்துக் கூறுகிறது.

கீதையில் (அத்தியாயம் 3: சுலோகம் 11, 12) கிருஷ்ண பரமாத்மா, "தேவர்களை நீங்கள் ஆராதியுங்கள்; அவர்கள் உங்களுக்கு இஷ்டப்பட்ட போகங்களை அளிப்பார்கள்" (பரஸ்பரம் பாவயந்த ! இஷ்டான் போகான் தாஸயந்த !) என்று அறிவுறுத்துகிறார்.

## ஏற்றம் பெற ஏற்ற வழிபாடு

எண்ணற்ற சக்திகளுடன் தேவதைகள் தயாராக இருக்க நாம் செல்வம் வேண்டுமெனில் ஸ்ரீ சூக்தத்தையும் எதிரிகளைச் செயல்படாமல் இருக்கவோ அல்லது அவர்களின் செயல்கள் நம் மீது பயனில்லாமல் போகச் செய்யவோ துர்க்கா சூக்தத்தையும் நமக்கு நல்ல புத்திக்கூர்மையும் ஞாபகசக்தி மற்றும் மேதா சக்தி வளர மேதா சூக்தத்தையும் சொல்லி வழிபடலாம். விநாயக வழிபாடு தீரம், ஞானம், தமிழ்ப்புலமை தரவும் வழி செய்யும். சிவ, விஷ்ணு வழிபாடு இகம் மற்றும் பரம் இரண்டிலும் நலம் தரும் என்று அனுபவித்து உணர்ந்த ரிஷிகள் கூறி உள்ளனர்.

## நாமும் உதவி பெறலாம்!

ஆனால் காணமுடியா உலகில் உள்ள தேவதைகள் எனக்கு உதவி செய்ய வரவில்லையே என்று அங்கலாய்ப்பவருக்கு ரமண மகரிஷி வாழ்வில் நடந்த சம்பவம் விளக்கம் தரும்!

ரமண மகரிஷியை அணுகிய அவரது அணுக்கத் தொண்டர் ஒருவர், "மகரிஷியே! கடவுள் உண்மையிலேயே கருணை உள்ளவர்தானா?" என்றார். "ஆம்" என்றார்

மகரிஷி! "அவர் கருணை மழை எல்லோரிடமும் பொழிகிறதா" என்று மீண்டும் வினவினார் அவர். " ஆம்" என்றார் மகரிஷி! "அப்படியானால் எனக்கு மட்டும் அவர் கருணை மழை பொழிவது ஏன் தெரியவில்லை" என்று கேட்டார் அவர்.

"அப்பனே!, நீ பாத்திரத்தைக் கவிழ்த்து வைத்திருக்கிறாயே! அதனால் அல்லவா உன்னால் கருணையை உணர முடியவில்லை! பாத்திரத்தை நிமிர்த்தி வை" என்று பதிலிறுத்தார் ரமணர்!

தேவதைகளின் கருணை மழையை ஏற்க நம் தூய மனம் என்னும் பாத்திரத்தைத் திறந்து வைப்பதே அதைப் பெற்று அனுபவிப்பதற்கான ஒரே வழி!

"வேண்டிடில் மேலுலகும் எளிதாகும்" என்பது ஆழ்வாரின் அருள்வாக்கு!

# அமெரிக்க டாலரின் மர்மங்கள்

## பிரமிடில் நெப்போலியன்:

மாவீரன் நெப்போலியனது வாழ்வில் நடந்த சம்பவம் இது! பிரமிடின் மகிமையைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த அவன் 'க்ரேட் ப்ரமிட்' எனப்படும் பெரிய பிரமிடை அடைந்தான். அதன் முக்கிய உள்ளறையில் (மெயின் சேம்பர்) பல வருடங்கள் பயிற்சி பெற்ற சீடர்களே அனுமதிக்கப்படுவர் என்றும் தியானம் மற்றும் ரகசிய சித்திகளில் பயிற்சி பெறுபவர் அந்த உள்ளறையில் ஒரு இரவு முழுதும் தங்கி

இருந்து உள்ளொளி பெறுவர் என்றும் அவன் கேள்விப்பட்டிருந்தான்.

அற்புதமான நுணுக்கமான கணிதம் மூலம், இடம், திசை, ஒழுங்கு,நேர்த்தி ஆகியவற்றைப் பரிசீலித்து அமைக்கப்பட்டிருந்த அந்த அறை பிரமாதமான 'சக்தி கேந்திரம்' என்று அறிந்திருந்த அவன் அந்த அறையில் ஒரு நாள் இரவு முழுதும் தங்கினான்.

மறுநாள் காலை அதிசயம் மற்றும் ஆச்சரியத்தைக் காட்டும் வெளிறிய முகத்துடன் வெளியே வந்த அவனை நோக்கி, 'என்ன நடந்தது' என்று கேட்டனர். தனது சக்தி மயமான அனுபவங்களை வெளியே சொல்லத் தயங்கிய அவன், "நான் நடந்ததைச் சொன்னால் நீங்கள் நம்ப மாட்டீர்கள்" (You won't believe me, if I tell you) என்றான்.

நெப்போலியன் மட்டுமுல்ல, அவனுக்கு முன்னாலும், பின்னால் இன்றுவரையும் லட்சக்கணக்கான ஆண்களும் பெண்களும் பிரமிட் தரும் பிரமிப்பூட்டும் பலன்களை அனுபவித்து வருகின்றனர்!

## பிரமிட் ஓர் அதிசயம்

'பைரா' என்றால் நெருப்பு என்று பொருள் 'மிட்' என்றால் நடுவே என்று பொருள். ஆனால் சாதாரணமாக ஆங்கிலேயரால் செய்யப்பட்ட இந்த மொழிபெயர்ப்பு இதற்கான சரியான அர்த்தத்தைத் தரவில்லை என்று ஜெரால்ட் மாசே (Gerald Massey) தனது 'ஏன்ஷியன்ண்ட் ஈஜிப்ட்: தி லைட் ஆஃப் தி வோர்ல்ட்' என்ற புத்தகத்தில் கூறுகிறார். 'பைர்' என்றால் அக்னி என்றும் 'மெட்' என்று

உச்சரிக்கப்பட வேண்டிய அடுத்த வார்த்தை பத்து மடங்கு என்ற பொருளைத் தரும் என்றும் அவர் கூறுவதோடு, பிரமிட் அக்னியின் பத்து வித அபூர்வ சக்திகளைத் தருகிறது என்கிறார். பிரமிட், 'புனிதமான சக்திகளைத் தன்னுள்ளே தக்க வைக்கும் ஊற்று' என்கிறார் அவர்

## பிரமிட் கட்டிய விந்தைகள்

'கிரேட் பிரமிட்' என்று அழைக்கப்படும் பெரிய பிரமிட் 13 ஏக்கர் பரப்பில் அமைக்கப்பட்டுள்ளது. இவ்வளவு பெரிய பரப்பின் மேல் மட்டம் அதிசயப்படும் அளவு சமதளமாக இருக்கிறது.

23 லட்சம் கற்களால் அமைக்கப்பட்டுள்ளது பிரமிட்! அதன் ஒவ்வொரு கல்லின் எடையும் 2 டன் முதல் 50 டன் வரை இருக்கிறது. இந்தக் கற்கள் ஒன்றுடன் ஒன்று இணைக்கப்பட்ட இடம் மயிரிழை அளவு கூட இடைவெளி இன்றி செய்யப்பட்டுள்ளது! இந்த பிரமிடில் உபயோகப்படுத்தப்பட்டுள்ள கற்களைக் கொண்டு அமெரிக்காவில் உள்ள வானளாவிய கட்டிடமான எம்பயர் ஸ்டேட் கட்டிடம் முப்பது கட்டிடங்கள் கட்டலாம்!

## நாஸாவின் வியப்பு:

இது மட்டுமல்ல; பிரபஞ்சத்திற்கும் பிரமிடுக்கும் பெரிய அளவில் தொடர்பு உள்ளது.

செவ்வாய் கிரகத்தை ஆராய அனுப்பப் பட்ட 'மரைனர்9' என்ற விண்கலம் செவ்வாய் கிரகத்தில் உள்ள

பிரமிட் அமைப்பிலுள்ள பகுதிகளைப் படம் பிடித்துள்ளது. இதன் அடிப்பக்கம் மூன்று மைல் நீளமும் உயரம் 4800 அடியும் இருப்தாக அமெரிக்க விண்வெளி ஆய்வு மையமான நாஸாவின் அறிக்கை தெரிவிக்கிறது. இந்த அளவுகள் மிகத் துல்லியமாக அமைந்திருப்பதால் இது திட்டமிட்டு உருவாக்கப்பட்டது போலவே இருக்கிறது என்றும் தற்செயலான இயற்கை அமைப்பாக இல்லை என்றும் அது வியப்புடன் கூறுகிறது!

பிரமிட் பூமியின் 'ஸ்கேல் மாடலாக' இருப்பது இன்னொரு வியப்பூட்டும் விஷயம்! அதனுடைய லாடிட்யூட் மற்றும் லாங்கிட்யூட் ஆகிய இரண்டும் வெட்டிக் கொள்ளும் இடம் 30 டிகிரி வடக்கு மற்றும் 31 டிகிரி கிழக்கு! இந்த ரேகை மற்ற எல்லா ரேகைகளையும் விட அதிகமான பூமிப் பரப்பின் வழியே செல்கிறது என்பது ஒரு அதிசய விஷயம்.

பிரமிடின் மொத்தக் கற்களின் எடையான ஐம்பத்தி மூன்று லட்சம் டன்னை 1,000,000,000,000,000 (Ten to the power of 15) என்ற எண்ணால் பெருக்கினால் வெவ்வேறு அளவுகளின் விகிதாசாரங்கள் 'பை' எனப்படும் 3.142 என்ற அளவையும் ' தங்க விகிதம்' எனப்படும் 1.618 என்ற அளவையும் ஆங்காங்கே காண்பிக்கிறது!

பிரமிடில் உள்ள கிங் சேம்பரின் தெற்கு மற்றும் வடக்கு முனைகள் முறையே ஜீடா ஓரியன் நட்சத்திரத்தையும் ஆல்ஃபா ட்ராகோனிஸ் நட்சத்திரத்தையும் க்வீன் சேம்பரின் தெற்கு மற்றும் வடக்கு முனைகள் முறையே சிரியன் நட்சத்திரத்தையும் ஓரியன் நட்சத்திரத்தையும் நோக்கி

இருக்கின்றன. நமது புராணங்கள் பெரிதும் போற்றும் விஸ்வாமித்திர நட்சத்திரமே சிரியஸ்! இது பெரும் மர்மங்களைத் தன்னுள்ளே அடக்கி உள்ளது!

## பிரமிடின் அளவுகள்:

பிரமிடின் சரியான அளவுகளே அதற்குச் சக்தியைத் தருவதாக விஞ்ஞானிகள் தங்கள் சோதனை மூலம் கண்டுபிடித்துள்ளனர்.

ஷீலா ஆஸ்ட்ராண்டர் என்ற கனடிய பெண்மணியும் லின் ஷ்ரொடர் என்ற அமெரிக்கப் பெண்மணியும் எழுதிய 'சைக்கிக் ரிஸர்ச் பிஹைண்ட் தி அயர்ன் கர்டன்' என்ற நூல் உலகம் முழுதும் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. அதில் ஒரு பகுதி பிரமிடின் மர்மங்களை விளக்குகிறது.

போவிஸ் என்ற பிரெஞ்சுக்காரர் பிரமிடைப் பார்க்கச் சென்ற போது பூனைகளும் மற்ற சிறு மிருகங்களும் வழி தவறி ஆங்காங்கே செத்துக் கிடப்பதைப் பார்த்தார். மீண்டும் பல மணி நேரம் கழித்து தான் வந்த வழியில் திரும்புகையில் அவை அழுகி நாற்றம் எடுக்காமல் இருந்ததைப் பார்த்து வியந்தார். உடனே பிரமிடின் ஸ்கேல் மாடலைத் தயார் செய்து அதில் பல்வேறு பதார்த்தங்களை வைத்துச் சோதனை செய்தார். அவை கெடவே இல்லை.

தொடர்ந்து செக்கோஸ்லோவிகியாவைச் சேர்ந்த டாக்டர் காரெல் ட்ரெபெல் பிரமிடின் சிறிய ஸ்கேல் மாடலில் ஒரு பிளேடைத் தெற்கு வடக்காக காம்பஸின் உதவி கொண்டு வைத்தார். பிளேடின் கூர்மையான பகுதிகள்

கிழக்கு மற்றும் மேற்கு நோக்கி இருந்தன. இதை பிரமிடின் உயரத்தில் மூன்றில் ஒரு பங்கு உயரம் இருக்குமாறு வைத்தார். ஆறு நாட்களுக்கப் பிறகு பிளேடின் மழுங்கிய முனைகள் கூர்மையுடையதாக ஆகியிருந்தன.

கடைகளிலும் பிளாட்பார ஓரங்களிலும் விற்கும் பிரமிடுகளை வைத்து பிரமிட் சக்தி பற்றி ஐயம் தெரிவிப்பவர்கள் சரியான அளவுடன் பிரமிட் இருக்கிறதா என்று சோதனை செய்ய வேண்டும். இந்த அளவுகளைக் கண்டுபிடிக்க ஒரு சிறிய ஃபார்முலா இருக்கிறது. பிரமிடின் ஒவ்வொரு அலகு (Unit) உயரத்திற்கும் அதன் அடிப்பக்கம் 1.5708 மடங்காக இருக்க வேண்டும். அதன் பக்க அளவு 1.4945 மடங்காக இருக்க வேண்டும். உதாரணமாக ஐந்து அங்குலம் உயரம் உள்ள பிரமிடின் அடிப்பக்கம் 7.85 அங்குலமாகவும் பக்கம் 7.47 அங்குலமாகவும் இருக்க வேண்டும்.

## நீங்களே சோதிக்கலாம்!

பிரமிட் சக்தியை நீங்களே சோதனை செய்து பார்க்கலாம். நான்கு முக்கோணங்களை கார்ட்போர்டில் வெட்டிக் கொள்ளுங்கள். இதன் அடிப்பக்க அளவு 9 3/8 அங்குலமாகவும் இரு பக்கங்களின் அளவு 8 7/8 அங்குலமாகவும் இருக்க வேண்டும். நான்கு முக்கோணங்களையும் டேப் வைத்து ஒட்டி விட்டால் பிரமிடின் உயரம் சரியாக ஆறு அங்குலம் இருக்கும். இதில் வடக்கு தெற்கு திசைகளை காம்பஸ் உதவியுடன்

நிர்ணயித்து இரண்டு அங்குல உயரத்தில் ஒரு கட்டையின் மீது பிளேடின் நுனிகளை தெற்கு வடக்காக வைக்க வேண்டும். இப்போது பிளேடின் கூர்மையான பகுதிகள் கிழக்கு மேற்காக இருக்கம். ஆறு முதல் பத்து நாட்கள் கழித்து பிளேடை எடுத்துப் பார்த்தால் மழுங்கிய முனைகள் கூர்மைபாகி இருக்கும். குறைந்த பட்சம் ஐம்பது முறைகள் இதைக் கூர்மையாக்கி உபயோகிக்கலாம்.

தலைவலி உள்ளவர்கள் பிரமிட் தொப்பியை மாட்டிக் கொண்டால் தலைவலி தீருவதாக ட்ரெபெல் தன்னிடம் கூறியதாக ஷீலா குறிப்பிடுகிறார். இதை அணிந்து உலகில் ஏராளமானோர் பயனடைந்துள்ளனர். பிரமிடின் உள்ளே காய்கறிகள், முட்டை வைத்தால் கெடாது.

இதன் உள்ளே வைக்கப்பட்ட பால் மற்றும் தண்ணீர் சக்தி ஊட்டப்பட்டதாக ஆகிறது. பெரிய அளவில் (கார்ட்போர்டில் கூட) உருவாக்கப்பட்ட பிரமிடில் அமர்ந்து படிக்கும் மாணவ மாணவியரின் அறிவுத் திறன் கூடுகிறது. ஞாபக சக்தி கூடுகிறது. பிரமிடில் தியானம் செய்தால் சாந்தி ஏற்படுகிறது. இப்படிப் பல்வேறு பயன்களைத் தருவதாக பல நூறு புத்தகங்கள் விளக்குகின்றன. பிரமிடாலஜி என்ற பிரமிட் பற்றி தனி இயல் உருவாகி இருப்பதோடு பிரமிட் என்சைக்ளோபீடியாவும் புத்தகச் சந்தைக்கு வந்து விட்டது.

பில் ஷுல் மற்றும் எட் பெடிட் இணைந்து எழுதி 'தி சீக்ரட் பவர் ஆஃப் பிரமிட்ஸ்' என்ற புத்தகம் பிரமிடின் அபூர்வ சக்திகளை விரிவாக விளக்குகிறது. மாக்ஸ் டாத்

மற்றும் க்ரெக் நியல்ஸன் இணைந்து எழுதிய 'பிரமிட் பவர்' என்ற புத்தகம் பிரமிடின் உள்ளே வைக்கப்படும் விதைகள் வீரிய விதைகளாக மாறுவதாகக் குறிப்பிடுகிறது!

## அமெரிக்க டாலரில் பிரமிட்:

இது ஒருபுறமிருக்க, உலகையே தங்கத்திற்கு நிகராக ஆட்டிப் படைக்கும் அமெரிக்க டாலர் பெரும் மர்மங்களைத் தன்னுள்ளே அடக்கி சக்தி வாய்ந்ததாகத் திகழ்கிறது! பதிமூன்று என்ற எண்ணையே வெறுக்கும் மேலை உலகம் ஹோட்டல்களில் கூட பன்னிரெண்டாம் நம்பருக்கு அடுத்தாற்போல பதினான்கை தங்கள் அறைகளுக்கும் மாடிகளுக்கும் தந்து பதிமூன்றாம் எண்ணைத் தவிர்க்கிறது.




ஆனால் அமெரிக்க டாலரில் எல்லாமே பதிமூன்று மயம்தான்! இது வியப்பூட்டும் விஷயம்! 13 ஒரிஜினல் காலனிகள், சுதந்திர பிரகடனத்தில் கையெழுத்திட்டோர் 13 பேர், அமெரிக்கக் கொடியில் 13 கோடுகள், டாலர் நோட்டில் உள்ள பிரமிடில் 13 படிகள், மேலே லத்தீனில் 13 எழுத்துக்கள், 'E Pluribus Unum' என்பதில் 13 எழுத்துக்கள், கழுகுக்கு மேலாக 13 நட்சத்திரங்கள், கழுகின் இறக்கைகள் ஒவ்வொன்றிலும் 13 சிறகுகள், ஷீல்டில் 13 பட்டைகள்,




ஆலிவ் மரக் கிளையில் 13 இலைகள், 13 பழங்கள், 13 அம்புகள்! இப்படி அமெரிக்க டாலரில் எல்லமே 13 தான்!

டாலர் மறைமுக ஆற்றலைக் (அக்கல்ட்பவரை) கொண்டதாக அமைக்கப்பட்டுள்ளதாகக் கருதப்படுகிறது. அமெரிக்க டாலரின் செல்வாக்கிற்குக் காரணம் அதில் உள்ள பிரமிடே! அதில் உள்ள பூர்த்தியாகாத பிரமிட் அமெரிக்கா எப்போதும் வளர்ந்து கொண்டே இருக்கும்




பிளேடு நடுவே வைக்கப்பட வேண்டும். பிரமிட் உயரம் 6"
ஆகவே பிளேடு 2" உயரத்தில் இருக்க வேண்டும்

என்பதை உணர்த்துகிறது. பிரமிடின் மேலே உள்ள 'எதையும் ஊடுருவும் கண்' அமெரிக்காவிற்கு தெய்வீக வழிகாட்டுதல் கிடைப்பதற்காக அமைக்கப்பட்டுள்ளது. அதில் உள்ள Annuit Coeptis என்ற எழுத்துக்கள் 'இறைவன் அமெரிக்காவின் பணிகளுக்கு ஆதரவளிப்பதைக்' குறிக்கிறது.

அதில் உள்ள Novus Ord O Seclorem என்பது 'உலக ஏடுகளில் ஒரு புதிய அத்தியாயம்' என்ற பொருளில் அமெரிக்க சகாப்தத்தைக் குறிக்கிறது. பிரமிடைத் தன் டாலரில் கொண்ட அமெரிக்கா பொருளாதாரத்தில் தலைசிறந்து விளங்கும். செல்வச் செழிப்பில் திகழும்.

## ஸ்ரீ சக்கரமும் பிரமிடும்

பிரமிடில் உள்ள முக்கோணங்கள் சக்தியைத் தருபவை. மறைமுகமான ஆற்றலைத் தரும் இது நமது ஸ்ரீ



ஸ்ரீ சக்ர யந்திரம் மூலதிரிகோணம் 43 சதுஷ்கோணம் 16 மேலும், கீழும் உள்ள கோணங்களையும் சேர்த்து வருவது 108.

சக்கரத்தை– ஸ்ரீ யந்திரத்திரத்தை நினைவுபடுத்துகிறது. ஸ்ரீ சக்கரத்தின் மூலமான முக்கோணங்கள் 43. அதில் உள்ள கோடுகள் வெட்டிக் கொள்வதால் ஏற்படும் மற்ற கோணங்களையும் சேர்த்தால் மொத்தம் வருவது 108. அகவே ஸ்ரீ சக்கரம் பிரமிடைப் போல 108 மடங்கு அதிக சக்தி தருவதாக உள்ளது. ஸ்ரீ சக்கரத்திற்கும் பிரமிடிற்கும் ஏராளமான ஒற்றுமைகள் உள்ளன.

## ஆலயங்களில் பிரமிட் அமைப்புகள்

இதை உணர்ந்துதான் பிரமிட் அமைப்பை கோபுரங்களிலும் கலசங்களிலும் ஆங்காங்கே தேவையான முறையில் நம் முன்னோர்கள் அமைத்துள்ளனர். பலன் தரும் யாக குண்டங்கள் கூட பிரமிட் வடிவத்தில் அமைக்கப்படுகின்றன. மகாபலிபுரத்தில் உள்ள கடற்கரைக் கோவில் பிரமிட் அமைப்பில் உள்ளது. கோவையில் உள்ள பிரமிட் சென்டரில் ஆரம்பித்து அமெரிக்காவில் டெக்ஸாஸ் மாநிலத்தில் வடக்கு தெற்கு அச்சில் 9206 சதுர அடி பரப்பில் 89 அடியை அடிப்பக்கத்திலும் 63 அடியை உயரத்திலும் கொண்டு அமைக்கப்பட்டுள்ள பிரமிட் சர்ச் முடிய உலகில் ஏராளமாக பிரமிட் கட்டிடங்கள் உருவாக்கப்பட்டு மக்களுக்குப் பலன் அளித்து வருகின்றன.

பிரமிட் தரும் பிரமிப்பூட்டும் பலன்களை அவரவர் தம் தம் பிரச்சினைகளுக்கு உரிய தீர்வுகளைப் பெறுவதன் மூலம் அனுபவத்தில் உணரலாம் என்பதே இன்றைய உலகம் உணரும் உண்மை!

# ருத்ராக்ஷம் பெண்களும் அணியலாம்

## அறிவியல் சோதனையில் ருத்ராக்ஷம்



சுபாஷ் ராய் என்ற காசி பல்கலைக் கழகத்தினைச் சேர்ந்த பேராசிரியர் புராதன ரகசிய அறிவை நவீன அறிவியலால் உரசிப் பார்த்து அவற்றின் உண்மைகளை அறிய முயன்றார்.

ருத்ராக்ஷம் பற்றி சிவ புராணம், பத்ம புராணம் போன்ற நூல்கள் மிக்க ஆன்மிக உயர்வு, மருத்துவ குணநலன்கள் ஆகியவற்றைத் தரும் என மேன்மையாகக் கூறியதை நவீன அறிவியல் உபகரணங்களைக் கொண்டு ஆராய ஆரம்பித்தார். விளைவு– ருத்ராக்ஷம் உடலில் படும் போது டை–எலக்ட்ரிக் பொருளாகப் பயன்பட்டு வெவ்வேறு முகங்களுடைய ருத்ராக்ஷங்கள் வெவ்வேறு விதமான 'கபாசிடர்' களாக இயங்கி புராணங்கள் கூறும் பயன்களைத் தருவதைக் கண்டுபிடித்தார்!

கட்டை விரலையும், ஆள்காட்டி விரலையும் இணைய வைத்து இடையில் ருத்ராக்ஷ மாலை உபயோகப் படுத்தப்படும் போது மனம் ஒருமுகப் படுத்தப்பட்டு மூளை அலைகள் சமன் படுத்தப்படுகின்றன என்பது அவரது ஆய்வின் முடிவில் தெரிந்தது. ஒவ்வொரு விரலுக்கான மின்சக்தியையும், அது கட்டை விரலுடன் இணையும் போது ஏற்படும் அற்புத ஆற்றலையும் விஞ்ஞான ரீதியான படங்களுடனும் புள்ளி விவரங்களுடனும், (Frequency ver-

sus inductance for Rudraksha) அவர் விளக்கும் போது அறிவியல் ரீதியாக ருத்ராக்ஷ மகிமையை உணர முடிகிறது.



## ருத்ராக்ஷத்தின் அர்த்தம்!

ருத்ர + அக்ஷ = ருத்ராக்ஷம்



அதாவது ருத்ரனின் கண்களிலிருந்து விழுந்த துளிகளே ருத்ராக்ஷமானது. சிவனின் கண்களுக்கு ப்ரீதியானது என்றும் சொல்வர்.



ருத்ராக்ஷம் மலைகளில் காணப்படும் ருத்ராக்ஷ மரங்களிலிருந்து கிடைக்கிறது. இதை ஆங்கிலத்தில் Elaco carpus seeds என்பர். ருத்ராக்ஷ பழங்கள் அல்லது விதைகள் சுத்தப்படுத்தப்பட்டு, நடுவிலே உள்ள துவாரங்களின் வழியே நூலால் இணைக்கப்பட்டு மாலையாக்கி அணிவது மரபு.



நேபாளத்தில் நல்ல வகை ருத்ராக்ஷங்கள் கிடைக்கின்றன. ருத்ராக்ஷத்தில் ஒரு முகம் என்பதிலிருந்து 28 முகங்கள் வரை இருப்பது காணப்படுகிறது–



முகம் என்றால் என்ன? ருத்ராக்ஷத்தில் உள்ள பிரிவு ஆகும். உதாரணமாக ஐந்து முகம் என்றால்

ஆரஞ்சு சுளைகள் போல ஐந்து பிரிவுகளை ஐந்து முக ருத்ராக்ஷம் கொண்டிருக்கும். இதே போல ஆறுமுகம் என்றால் ஆறு பிரிவுகளைக் காணலாம்.

சிவனுடைய உடுக்கையிலிருந்து எழுந்த ஒலிகள் அல்லது சப்தங்கள் அல்லது எழுத்துக்கள் 14. இவற்றிற்கும் ருத்ராக்ஷத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஆகவே 14 முகம் வரை உள்ள ருத்ராக்ஷங்களின் பலன்களைத் தெளிவாக நமது நூல்களில் காணலாம்.

## ருத்ராக்ஷத்தின் பலன்கள்

ருத்ராக்ஷ ஜாபால உபநிஷத்தில் தரப்பட்டுள்ள பலன்கள் வருமாறு:

**ஒரு முகம்** : இந்திரிய நலம் பெற்று பர தத்துவத்தில் லயிப்பர்.

**இரண்டு முகம்** : அர்த்தநாரீஸ்வர ஸ்வரூபம். இதை அணிபவரிடம் அர்த்த நாரீஸ்வரர் அருள் இருக்கும்.

**மூன்று முகம்** : மூன்று அக்னிகளின் ஸ்வரூபம். இதை அணிந்தால் அக்னி தேவனின் அருள் கிடைக்கும்.

**நான்கு முகம்:** பிரம்மாவின் வடிவம். இதை அணிந்தால் பிரம்ம பிரீதி.

**ஐந்து முகம்:** பஞ்ச பிரம்ம ஸ்வரூபம். பிரம்மஹத்தி பாவத்தைப் போக்க வல்லது.

**ஆறு முகம்:** கார்த்திகேயரை ஆதி தேவதையாக உடையது. இதை அணிந்தால் பெருஞ்செல்வமும், சிறந்த

ஆரோக்கியமும் ஏற்படும். நல்ல புத்தி, சிறந்த ஞானம், ஸம்பத்து தூய்மை அனைத்திற்கும் இடமானது. புத்திமான் இதை தரிக்க வேண்டும். விநாயகர் முதலிய தெய்வங்களும் அருள் புரிவர் என்று அறிஞர் கூறுகின்றனர்.

**ஏழு முகம்:** சப்த மாதாக்களை அதி தெய்வமாகக் கொண்டது. இதை தரிப்பதால் செல்வ வளம், உடல் நலம் சிறந்த ஞானம் ஏற்படும்.

**எட்டு முகம்:** எட்டு மாத்ருகா தேவிகளின் உறைவிடம். இதை தரிப்பவர்கள் ஸத்தியவாதிகளாவர். அஷ்ட மாதாக்களின் ப்ரீதியையும் அஷ்ட வசுக்களின் ப்ரீதியையும் கங்கா தேவியின் அருளையும் பெறுவர்.

**நவ முகம்:** நவசக்திகளின் உறைவிடம். இதை அணிவதால் நவசக்திகளின் அருள் ஏற்படும்.

**தச முகம்:** யமனை அதி தேவதையாக உடையது. இதை அணிவதால் நவகிரக தசைகளின் சாந்தி ஏற்படும்.

**11 முகம்:** ஏகாதச ருத்ரர்களை தெய்வமாக உடையது. எப்போதும் ஸௌபாக்கியத்தை வளர்க்கும்.

**12 முகம்:** மஹா விஷ்ணு ஸ்வருபம். 12 ஆதித்யர்களையும் தன்னுள் கொண்டது.

**13 முகம்:** விரும்பிய சுபசித்திகளை அளிப்பது. இதை அணிவதால் காமதேவன் அருள் ஏற்படும்.

**14 முகம்:** ருத்ர நேத்திரத்திலிருந்து தோன்றியது. எல்லா வியாதிகளையும் போக்கி எப்பொழுதும் ஆரோக்கியத்துடன் இருக்க செய்யும்.

இப்படி பதினான்கு முகம் வரை உபநிடதம் விளக்குகிறது.

இந்த அட்டவணையிலிருந்து படைப்பாற்றல் திறனை பெற விழைவோர் ஒரு முகத்தையும், பாலியல் சம்பந்தமான பிரச்னைகளை நீக்க விரும்புவோர் 13 முகத்தையும், செல்வ வளம் விரும்புவோர் 6 முகத்தையும், மரண பயம் நீங்க விரும்புவோர் 10 முகத்தையும் முக்தி பெற விரும்புவோர் ஏக முகத்தையும் அணிய வேண்டும் என்பது தெளிவு.

## நட்சத்திரங்களுக்குரிய முகங்கள்

27 நட்சத்திரங்ளில் ஒவ்வொன்றுக்கும் உரிய ருத்ராக்ஷங்களையும் ஜோதிட மற்றும் மந்திர சாஸ்திர நூல்கள் கூறுகின்றன.

ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் உரிய ருத்ராக்ஷம் பின்வருமாறு:

## நட்சத்திரத்திற்கான ருத்ராக்ஷங்கள்

| நட்சத்திரம் | அணிய வேண்டிய ருத்ராக்ஷம் |
|---|---|
| அசுவனி, மகம், மூலம் | நவமுகம் |
| பரணி, பூரம், பூராடம் | ஷண்முகம் |
| கார்த்திகை, உத்தரம், உத்திராடம் | ஏகமுகம், த்வாதச முகம் கௌரி சங்கர் |
| ரோஹிணி, ஹஸ்தம், திருவோணம் | த்வி முகம் |
| மிருகசீரிஷம், சித்திரை, அவிட்டம்ட | த்ரி முகம் |

| | |
|---|---|
| திருவாதிரை, சுவாதி, சதயம், | அஷ்ட முகம் |
| புனர்பூசம், விசாகம், பூரட்டாதி | பஞ்ச முகம் |
| பூசம், அனுஷம், உத்திரட்டாதி | சப்த முகம் |
| ஆயில்யம், கேட்டை, ரேவதி | சதுர் முகம் |

## வியாதி போக்கும் ருத்ராக்ஷம்

ஆயுர்வேத சாஸ்திரப்படி ருத்ராக்ஷம் அணிவதால் தாகம், கோழை, திரிதோஷம், விக்கல், பித்தத்தால் ஏற்படும் அனேக வியாதிகள் தீரும். 'கணீர்' என்ற குரல் வளம் வேண்டுவோர் மற்றும் இயற்கையாக அமைந்த குரல் வளத்தைப் பேணிக் காக்க விரும்புவோர் தொண்டையில் ருத்ராக்ஷம் படும்படி அதை அணிவது வழக்கம். ஓதுவார் ருத்ராக்ஷம் அணிந்தே தேவாரம் மற்றும் பாடல்களை ஓதுவது மரபு.

தேவி பாகவதம், சிவ புராணம், பத்ம புராணம், அக்ஷர மாலிகா உபநிஷத், ருத்ராக்ஷ ஜாபால உபநிஷத், மந்த்ர மஹார்ணவம், மகா கால சம்ஹிதா போன்ற எண்ணற்ற நூல்கள் தருகின்ற ருத்ராக்ஷ மகிமைகள் கணக்கற்றவை.

குறிப்பிட்ட புண்யத்தை ஒரு அலகு என்று வைத்துக் கொண்டோமானால் ருத்ராக்ஷத்தைப் பார்ப்பது லக்ஷம் புண்யம் என்றும், அதை ஸ்பரிசிப்பது கோடி புண்ணியம் என்றும், அதை அணிவது பத்துக் கோடி புண்யம் என்றும் இதை அணிந்து (இஷ்ட) நாமங்களை ஜபிப்பது நூறு லட்சம் கோடி மற்றும் ஆயிரம் லட்சம் கோடி புண்யம் என்றும் பத்ம புராணம் விவரிக்கிறது.

## பெண்களும் அணியலாம்!

ருத்ராக்ஷத்தைப் பெண்கள் அணியலாமா?

அணியலாம். (மாதவிலக்குக் காலம் தவிர) என்று புராணமே கட்டளை இடுகிறது.

சிவ புராணத்தில் (அத்தியாம் 25: சுலோகம் 47) சிவன் பார்வதியிடம் "அனைத்து ஜாதியைச் சேர்ந்தவர்களும் பெண்களும்" இதை அணியலாம் என்று உறுதிபடக் கூறி அருளுகிறார்.

## எப்படி வாங்குவது?

சந்தையில் ஐந்து முகங்களை உடைய ருத்ராக்ஷ மணிகளை நான்கு மற்றும் மூன்று முகங்களாக மாற்றி அதிக விலைக்கு விற்று விடுகின்றனர். ஒரே அச்சில் எடுக்கப்பட்ட போலி சிந்தடிக் ருத்ராக்ஷங்களைத் தந்து ஏமாற்றுகின்றனர். ஒரே மாதிரியாக இருந்தாலே அது அச்சில் வார்த்தது என்பதை உடனடியாகக் கண்டுபிடித்து விடலாம்.

ருத்ராக்ஷத்தின் ஸ்பெஸிபிக் கிராவிடி 1.1 முதல் 1.6 வரை உள்ளது. இரண்டு தாமிரக் காசுகளின் இடையே நல்ல ருத்ராக்ஷத்தை வைத்தால் அது சுழலும். இன்னொரு எளிய வழி, நல்ல ருத்ராக்ஷத்தைத் தண்ணீரில் போட்டால் அது மூழ்கி விடும். போலிகள் மிதக்கும். நல்ல ருத்ராக்ஷத்தை ஏமாறாமல் பரிசோதித்து உரிய விலையைக் கொடுத்து வாங்க வேண்டும். அது பெரிதாக இருக்க இருக்க நல்லது. ஏக முகம் கிடைப்பது அரிது.

ருத்ராக்ஷத்தை கோமூத்திரம் அல்லது கங்கா ஜலம் அல்லது பாலில் முதலில் நனைத்துப் பின்னரே அணிய வேண்டும். வியாழக்கிழமையும் புஷ்ய நட்சத்திரமும் கூடிய சுப நாளில் (வருடத்திற்கு சுமார் இரண்டு முறையே வரும்) ருத்ராக்ஷம் தரிப்பது மிக்க நலம் பயக்கும் என்று அற நூல்கள் கூறுகின்றன!

## ஜபமாலை ரகசியம்!

### ராதைக்குக் கிடைத்த மாலைகள்

தேவி பாகவதத்தில் அற்புதமான ஒரு காட்சி சித்தரிக்கப்படுகிறது.



ஒருமுறை கார்த்திகை மாதம் பௌர்ணமி தினத்தன்று ராதையை மகிழ்விப்பதற்காக கிருஷ்ணர் தன்னுடைய புல்லாங்குழலை இசைத்து மதுர த்வனியை எழச் செய்தார். அற்புதமான வேணுகானம் அனைத்து லோகங்களையும் ஊடுருவி அனைவரையும் இசையில் லயிக்கச் செய்து மெய்மறக்கச் செய்தது.

இந்த தெய்வீக இசை எங்கிருந்து வருகிறது என்று பார்ப்பதற்காக பிரம்மா, விஷ்ணு, சிவபிரான், மஹாலட்சுமி, தேவகணங்கள் என அனைவரும் கிளம்பி கிருஷ்ணரும், ராதையும் இருக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தனர். கிருஷ்ணர் புல்லாங்குழலை இசைக்கக் காரணமாக இருந்த

ராதைக்கு தங்கள் கழுத்திலிருந்த மாலைகளைக் கழற்றி மனமகிழ்ச்சியுடன் பரிசாக அளித்தனர்.

பிரம்மா ரத்னஹாரத்தையும், சிவன் மணி ஹாரத்தையும், விஷ்ணு வைஜயந்திமாலையையும், லட்சுமி கனக குண்டலத்தையும் தர கிருஷ்ணரோ தனது கௌஸ்துப மணிஹாரத்தை ராதைக்கு அணிவித்தார்.

## தெய்வங்களின் மாலைகள்!

மாலை இல்லாமல் ஜப சித்தியை எளிதாகப் பெறுதல் இயலாது. சரஸ்வதி, தட்சிணாமுர்த்தி ஆகியோரிடம் தூய அறிவைத் தூண்டும் ஸ்படிக மணி மாலை இருக்கிறது. தேவி கவசம் பகவதியை மாலாதாரி என்றே அழைக்கிறது.

அருளாளர்களும், மகான்களும், ருத்ராக்ஷ மாலை, துளசி மாலை, ஸ்படிக மணிமாலை என்று மாலை அணிவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

திரு ஆவினன்குடியில் அருணகிரிநாதருக்கு முருகப் பெருமான் ஜபமாலை தந்தருளினார். இதை அவரே "ஜபமாலை தந்த சற்குரு நாதா" என்று திருப்புகழில் உறுதிப்படுத்தியுள்ளார்.

சாதாரணமாக ஜபமாலை 108 மணிகளைக் கொண்டிருக்கும். இகத்திலேயே பயனை நாடி ஜபமாலையை உபயோகப்படுத்துவோர் நாயக மணி என்ற உச்சி மணியிலிருந்து கீழ் நோக்கியும், முக்தி நலம் பெற விரும்புவோர் மேல் நோக்கியும் மணிகளை உருட்டி ஜபம் செய்வதே முறை.

## மாலைகளின் வகைகள்

ஒவ்வொரு பயனுக்கும் சித்திக்கும் ஏற்றவாறு ஒவ்வொரு மாலை பயன்படுகிறது. மாலைகளில் ஏராளமான வகைகள் உண்டு. ஜபமாலை, கரமாலை, வைஜயந்தி மாலை, கனக மாலை, கௌஸ்துப மணி மாலை, லோஹமாலை, ஹரித்ரா மாலை, சங்கு மாலை, ஸ்வயம்பு மாலை, ஸ்படிக மாலை, ருத்ராட்ச மாலை, துளசி மாலை, ஸ்வர்ண மாலை, தாம்ர மாலை, வைடூர்ய மாலை, பத்மாட்ச மாலை, அரிஷ்ட மாலை, அட்ச மாலை, சந்தன மாலை, மாத்ருகா மாலை என இப்படி ஏராளமானவற்றைப்பற்றி புராணங்களும், மந்திர சாஸ்திர நூல்களும் குறிப்பிடுகின்றன!



த்ரிகோணத்மக் மாலை

## ருத்ராக்ஷ மாலை

சிவனின் கண்களிலிருந்து விழுந்த நீர்த்துளிகளே ருத்ராக்ஷம் ஆனது. பல முகங்களைக் கொண்டுள்ள ருத்ராக்ஷத்தை அந்தந்த முகத்தை வைத்துப் பெயரிட்டுச் சொல்வது வழக்கம். ஏக முகத்திலிருந்து 28 முகங்கள் வரை உள்ள ருத்ராக்ஷ வகைகளைப் பற்றிய முழு விவரங்களை நமது நூல்கள் தருகின்றன.

மிக மிக அரிதான இந்திர மாலா என்னும் ஜபமாலை ஒன்று முதல் 25 வரை உள்ள முகங்களை உடைய ருத்ராக்ஷங்களை இணைத்து உருவாக்கப்படுகிறது.

108 மணிகளைக் கொண்ட ருத்ராக்ஷ மாலை 'த்ரிகோணாத்மக்' என்று அழைக்கப்படுகிறது 'க்ஷ' என்ற எழுத்து உச்சி மணியாகவும் இடது புறம் மேலிருந்து 'அ' என்ற எழுத்திலிருந்து 'க' என்ற எழுத்து வரை ஐம்பது மணிகளும் சேர்க்கப்பட்டு இருக்க, வலது புறம் கீழிருந்து மேலாக 'க' முதல் 'அ' வரை 50 மணிகள் கோர்க்கப்பட, இரண்டு பக்கங்களையும் இணைக்கும் வகையில் 'அ' முதல் 'ஷ' வரை எட்டு மணிகளும் ஆக 108 மணிகளைக் கொண்ட த்ரிகோணாத்மக் மாலை சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய மூன்று நிலைகளை முறையே சுட்டிக் காட்டுகிறது. மேலும் பிராம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரும் இணைந்த இந்த திரிகோணம் ஓங்கார வடிவை அடைகிறது. இதுவே மூலம். இதை அடைவதற்கான வழியே ருத்ராக்ஷ மாலை.

जनन-यंत्र



ஜனன யந்த்ரம்

ஜனன யந்திரம் எனப்படும் யந்திரம் 49 எழுத்துக்களால் உருவாக்கப் படுகிறது. இந்த 49 எழுத்துக் களே மூலமாத்ருகா அக்ஷரங்கள் எனப்படுகின்றன.

ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் ஒரு வலிமை உண்டு. 108 மணிகளால் ஆன ருத்ராக்ஷ மாலை இந்த அக்ஷரங்களின் வலிமை

அனைத்தையும் நமக்குத் தந்து பூவுலகில் செல்வம், அறிவு, நோயற்ற வாழ்வு ஆகியவற்றைத் தருவதோடு மேலுலக முக்தியையும் தருகிறது. கெடுதலோ, பக்க விளைவோ இல்லாமல் எந்த முகத்தையும் யார் அணிந்தாலும் ருத்ராக்ஷம் பலன் தரும் என்பதே ருத்ராக்ஷத்தின் சிறப்பு. பெண்கள் உட்பட அனைவரும் ஜாதிபேதமின்றி இதை அணியலாம்.

ஒரே ஒரு எச்சரிக்கையை மட்டும் சிவபிரான் பார்வதியிடம் கூறுகிறார். சக்தி மந்திரங்களை உச்சரிப்போர் பகல் நேரத்தில ருத்ராக்ஷ மாலையை உபயோகித்து அதை உச்சரிக்கக் கூடாது. அப்படி உச்சரிப்போர் துர்கதியை அடைவர் என்பது அவரது கூற்று.

வைணவர்கள் விரும்பி ஏற்கும் மாலை துளஸி மாலை. கோவிந்த மந்திரம் கூறுவோர் அணிய வேண்டிய மாலை இது!

விஷ்ணுவை உபாசிப்போர் சங்கு மாலையும், விநாயரை உபாசிப்போர் யானைத் தந்தத்திலான மாலையையும், சூரியனை உபாசிப்போர் பவள மாலையையும், சிவனை உபாசிப்போர் ருத்ராக்ஷ மாலையையும் உபயோகிக்க வேண்டும். பெற விரும்பும் பயன்களுக்கு ஏற்றவாறு அணிய வேண்டிய மாலைகளின் பட்டியல் கீழே தரப்படுகிறது.

சர்வ கார்ய சித்திக்காக–ருத்ராக்ஷ மாலை,

காந்தி (ஒளி) பெற –சந்தன மாலை,

வசீகரத்திற்கு –பவள மாலை,

அரசியலில் ஏற்றம் பெற–ருத்ராக்ஷ மாலை,

வாக்கு சித்தி ஏற்பட –ஸ்படிக மாலை.

## பூமாலைகள்

பூமாலைகளில் ஒவ்வொரு மாலைக்கும் ஒவ்வொரு பயன் உண்டு. பூஜைகளில் பயன்படுத்த வேண்டிய மாலைகளைப் பற்றி நமது நூல்கள் விரிவாக எடுத்துக் கூறுகின்றன. ஆயிரம் செந்தாமரை மலர்களை இணைத்து மாலை செய்து மஹாதேவிக்கு அணிவிக்கும் ஒருவர் ஆயிரம் கோடி ஆண்டுகள் தேவியின் லோகத்தில் இருந்து பிறகு பூலோகத்தில் பெரிய சக்ரவத்தியாகப் பிறப்பான் என்று காளிகா புராணம் கூறுகிறது.

வில்வ மாலையும் இதே போலப் பெரும் பயன் அளிக்க வல்லது.

ஒவ்வொரு புஷ்பத்திலும் அடியில் பிரம்மாவும் நடுவில் விஷ்ணுவும் நுனியில் சிவனும் உறைந்துள்ளனர். இந்த மாலைகளை இறைவனுக்கு சாத்துவதன் மூலம் இறைவன் ஆராதிக்கப்படுகிறான்!

அதன் மூலம் ஜபசித்தி ஏற்படுகிறது. அழகு கூடுகிறது. நோய் தீருகிறது!

## உலகமெங்கும் மாலைகள்

ஆச்சரியமூட்டும் ஒரு விஷயம், மாலைகளை அனைத்து மதத்தினரும் ஏற்று உபயோகிப்பதுதான்!

சீக்கியரும், பௌத்தரும் மாலைகளை உபயோகிக்கின்றனர். ஜப்பானில் 112 மணிகள் கோர்க்கப்பட்ட மாலைகளை உபயோகிக்கின்றனர். திபெத்தில் 'தெங்க்வா' என்று கூறப்படும் மாலை உபயோகிக்கப்படுகிறது. அராபியா, ஈராக், ஈரான், துருக்கி, ஜோர்டான் ஆகிய நாடுகளிலும் 101 மணிகள் உடைய 'தஸ்பீஹ்' என்று அழைக்கப்படும் மாலைகள் உபயோகப்படுத்தப் படுகிறது! கிறிஸ்தவ மதத்திலும், யூத மதத்திலும் ஜப மாலைகளுக்கும் மிகுந்த முக்கியத்துவம் உண்டு!

உலகெங்கும் இப்படி உபயோகப்படுத்தப்படும் மாலைகளின் பயன்களும். அதன் ரகசியங்களும் எழுத்தில் அடங்காது. ரகசிய சாஸ்திரங்களை ஊன்றிப் படிப்பதன் மூலம் ஒருவாறாக இதன் முக்கியத்துவத்தையும் பலன்களையும் சிறிது அறிய முடியும். ஆனால் இதைப் பயன்படுத்திப் பார்ப்பதே அனுபவப் பூர்வமாக அனைத்து ரகசியங்களையும் அறிந்து பூரண பலன்களைப் பெறுவதற்கான சிறந்த முறை!

## தீபமங்கள ஜோதி நமோ நம!

"விளக்கினை ஏற்றி வெளியை அறிமின்!

விளக்கின் முன்னே வேதனை மாறும்!!

–திருமூலர் (திருமந்திரம் – பாடல் : 1818)

## நாஸா ஆராயும் இந்தியர்!



உலகிற்கு ஒளியும் நலமும் தருபவை மூன்று. சூரியன், வேள்வித் தீ, தீபம்!

சூரிய சக்தியின் பால் அளவிலாத ஆராய்ச்சிகளைச் செய்து வரும் அமெரிக்க விண்வெளி ஆய்வு நிறுவனமான நாஸா, ஹீரா ரதன் மனேக் என்னும் இந்தியரை ஆராய்ந்து வருகிறது. 64 வயதான இவர் குஜராத்தில் பிறந்தவர். கேரளாவில் பெரும் பகுதி தன் வாழ்க்கையைக் கழித்தவர். சென்ற ஜூன் மாதம் இவர் நாஸா சென்றடைந்ததற்கான காரணம் இவர் பெயரால் அழைக்கப்படும் ஹெச்.ஆர்.எம். பினாமினா எனப்படும்– "ஹீரா ரதன் மனேக் நிகழ்வை" ஆய்வு நடத்துவதற்காகத்தான்! அன்ன ஆகாரமின்றி 130 நாட்கள் இவர் தண்ணீரை மட்டுமே குடித்து வாழ்ந்திருக்கிறார். சூரிய ஒளியைப் பார்த்தவாறே கடந்த எட்டு வருடங்களாக பசியை இவர் அடக்கி இருக்கிறார்! பேராசை, பொருள்களின் மீது இச்சை, கோபம், இவற்றையும் சூரியனை உற்றுப் பார்ப்பதின் மூலம் வென்றுள்ளார்!

இதைக் கேள்விப்பட்ட நாஸா மிகுந்த ஆர்வம் கொண்டு இந்திய யோகிகள் சூரிய ஒளி மூலம் அனைத்தையும் செய்யலாம் என்று கூறுவதைக் கருத்தில் கொண்டு ஆறு மாத காலம் பல்வேறு சோதனைகளை இவரிடம் நடத்த இருக்கிறது. இதே எண்ணத்தை ஜப்பான், ப்ரேசில், ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளும் தெரிவிக்கவே நாஸா ஆராய்ச்சி முடிந்த பின்னர் பல்வேறு நாடுகளுக்குத்

தன்னை ஆராய்ச்சிக்கு உட்படுத்த அவர் செல்ல இருக்கிறார்.

## ஒளியே உயிர்

சூரிய ஒளியின் மூலம் அனைத்து சித்திகளையும் பெற முடியும் என்று நமது வேத உபநிடதங்கள் முழங்குகின்றன. 'தமஸோ மா ஜ்யோதிர் கமய'!

'இருளிலிருந்து ஒளிக்கு இட்டுச் செல்' என்பதே வேத பிரார்த்தனை!

## அடுத்ததாக வேள்வித் தீ

வேள்வித் தீயில் நெய்யையும் சமித்தையும் இடுவதால் எழும் புகை தீயனவற்றை நீக்குவதோடு சுற்றுப்புறச் சூழலை மாசுபடுத்தும் அனைத்தையும் நீக்கும் ஆற்றல் வாய்ந்ததாக இருக்கிறது!

1984–ம் வருடம் போபாலில் விஷ வாயு கசிந்த போது ரயில் நிலையத்திற்கு அருகே வசித்த எம்.எல். ரதோர் குடும்பத்தினரை மட்டும் அந்தக் கடுமையான விஷம் ஒன்றும் செய்யவில்லை! அந்த இல்லத்தின் தலைவர் தினமும் அக்னிஹோத்ரம் என்னும் வேள்வித் தீ ஹோமம் செய்து வந்ததால் விஷப்புகை அந்தக் குடும்பத்தினரை ஒன்றும் செய்யவில்லை! தூய்மை நிறைந்த அந்த இடத்திற்கு அக்னிஹோத்ரம் கவசம் போல இருந்து விஷப்புகையை அண்டவிடவில்லை!

இதோ போல ஆசிரியரான எஸ்.எல். குஷ்வஹா குடும்பத்தினரும் இதே அக்னிஹோத்ரம் செய்து வந்த காரணத்தால் அன்று உயிர் பிழைத்தனர்!

இந்தச் சம்பவத்தால் உத்வேகம் பெற்ற அமெரிக்கா, போலந்து, சிலி, ஜெர்மனி ஆகிய நாடுகளில் அக்னிஹோத்ரம் தினமும் நடைபெற்று வருகின்றது!

## தீப மகிமை

சூரியன், வேள்வித் தீ இவற்றை அடுத்து மூன்றாவதாக ஒளி தரும் தீபத்தின் மகிமையை முழுதுமாக யாராலும் உரைக்க முடியாது.

வேதம், புராணம், இதிஹாசம், நாலாயிர திவ்யப்பிரபந்தம், தேவாரம், வள்ளலார் பாடல்கள் உள்ளிட்ட இலக்கியங்களில் மட்டும் ஆயிரம் பாக்களுக்கு மேல் தீப மகிமை கூறப்படுகிறது!

"ஜோதி அகவலில்" எப்படி சாதாரண மனித உடல் ஒளி உடலாக மாறுகிறது என்பதை வள்ளலார் அற்புதமாக படிப்படியாக விளக்குகிறார்.

"மடல் எலாம் மூளை மலர்ந்திட

அமுதம் உடல் எலாம் ஊற்றெடுத்து ஓடி நிரம்பிட"

உருவாகும் ஒளி உடல் மூலம் பல கோடி ஆண்டுகள் சாகா நிலையைப் பெற்றதாகக் கூறுவதோடு மட்டுமல்லாமல் அதை நிரூபிக்கும் வண்ணம் அவர் உடலோடு மறைந்தார். அருட்பெருஞ்ஜோதியானார்!

## தீப ஒளியில் நடந்த அதிசய யுத்தம்

மகாபாரதத்தில் துரோண பர்வத்தில் 164, 165ம் அத்தியாயங்களில் இரவிலே தீப ஒளியிலே நடந்த யுத்தக் காட்சிகள் அழகுற வர்ணிக்கப்படுகின்றன.

உலகிலேயே இப்படிப்பட்ட தீப யுத்தம் இது ஒன்றுதான் என்று எண்ணும்போதே இதை வர்ணிக்கும் வியாசரின் வர்ணனை, உலக இலக்கியங்களில் மற்றவற்றில் காணமுடியாத ஒப்புயர்வற்ற ஒரே வர்ணனை என்ற சிறப்பையும் பெறுகிறது!

எல்லா வீரர்களும் தீவர்த்தியைப் பிடிக்க தேவர்களும், ரிஷிக் கூட்டங்களும், கந்தர்வர்களும், வித்யாதரர்களும், அப்ஸரஸ் கூட்டங்களும், யட்சர்களும், உரகர்ளும், கின்னரரும், நாகரும், ஆகாயத்திலிருந்து தீபங்களைப் பிடித்தனராம்! திக் தேவதைகளும் நறுமணம் கமழும் தைலத்துடன் கூடிய தீபங்களை ஏந்தினராம்!

ரதம் மீது ஐந்து தீபங்களும், யானை மீது மூன்று தீபங்களும், குதிரை மீது ஒரு பெரிய தீபமும் என தீபங்கள் ஏற்றப்பட்டு 'தீப யுத்தகளம்' உருவானது. இதில் ரத்ன மாலைகள் எனப்படும் வைர்ம் இழைக்கப்பட்ட மாலைகளும் ஒளி சிந்தின! அற்புமான இந்தக் காட்சி உலகின் அதிசய நிகழ்வுகளில் ஒன்று! இந்த தீப யுத்தத்திலே தீமை அழிக்கப்பட்டது!

ரத்னதீபம் பற்றி சுந்தரகாண்டத்தில வால்மீகி மகரிஷியும் குறிப்பிடுகிறார்.

### தீப உவமை

தீபம் பற்றிய உவமைகள் உலக இலக்கியங்கள் பலவற்றில் இடம் பெற்றிருந்தாலும் காளிதாசர் அதைக் கையாண்ட விதத்தால் உலகின் உவமைக் கவிஞர்களுள் ஒப்புயர்வற்ற இடத்தைப் பிடிக்கிறார். ரகுவம்சத்தில் சுயம்வரத்தில் இந்துமதி தன் மணாளனை வரிப்பதற்காக வரிசையாக நின்றிருந்த ராஜகுமாரர்கள் அருகிலே செல்லும் போது 'அவள் ஒளிச்சுடரின் நுனி போலச் சென்றாள்' (சஞ்சாரிணி தீப ஷிகேன ராத்ரௌ 6–67) என்கிறார்.

சுடர் அருகே வந்தவுடன் நம்பிக்கையுடன் பிரகாசமாகும் மன்னர்களின் முகம் அவள் நகர்ந்தவுடன் இருண்டதாம்!

### நரகனின் அழிவும் தீபாவளியும்

நரகாசுரனால் பல்லாயிரக்கணக்கான பெண்கள் இருள் சூழ்ந்த சிறையிலே வாடி வதங்கினர். கிருஷ்ணன் அசுரனை அழிக்கவே சிறை மீட்கப்பட்ட அவர்கள், ஒளியைக் கண்டனர். தங்களுக்கு ஒளி தந்த கிருஷ்ணனை வழிபட தீபத்தை வரிசையாக ஏற்றிய அவர்களின் 'தீப ஆவளியே' அவர்களது நன்றிக் கடனானது!

### நலம் தரும் தீபம்

500 வகைக்கும் மேற்பட்ட தீபங்கள் தொன்றுதொட்டு நம் நாட்டில் இருந்து வந்துள்ளன!

அன்றாடம் தீபம் ஏற்றும் பிறை மாடங்களை இன்றைய நவீன நாகரிகச் சூழலில் நகரங்களில் காண

முடியாவிட்டாலும் கிராமங்களில் பழைய வீடுகளில் இன்றும் காணலாம்.

## கார்த்திகை தீபம்

கார்த்திகை மாதம் மட்டுமாவது வீட்டின் முன்னே தினமும் பெண்கள் விளக்கை ஏற்றுவது மரபாக இருந்து வருகிறது. இது அழியாத செல்வத்திற்கு வழிவகுக்கும். வேதனைகளைத் தீர்க்கும்.

## தீப தியானம்

அனைத்து நலங்களும் பெற ஸ்ரீ சத்திய சாயிபாபா தீப தியானத்தை வலியுறுத்துகிறார். சில நிமிடங்களில் செய்யக்கூடிய இந்த தியானத்தில் முதலில் தீப ஒளியில் உங்களையும் பிறகு உங்களில் தீப ஒளியையும் தியானிக்க வேண்டும்.

பிறகு நீங்களே ஒளி என்பதை உணரலாம். இந்த ஒளி உங்கள் பெற்றோர், உறவினர், நண்பர் ஆகியோரைச் சூழ்ந்து நலம் பயக்கச் செய்வதுடன் உலகம் முழுதும் பரவி நன்மையைத் தருவதாக தியானிக்க வேண்டும். லட்சக்கணக்கான தீபங்களை ஏற்றவல்ல தீப ஒளி தியானம் உங்களிடமிருந்து பரவுவதை பாபா அற்புதமாக விளக்குகிறார் (சத்யசாய் ஸ்பீக்ஸ் வால்யூம் 6) எளிய, ஆனால் வலிமை மிக்க தியானம் இது! உடலே தீப தியானத்தால் எடையற்று லேசாகி விடும். 'தேக பிராந்தி (தேக பயம்) போகும் போது 'ஆத்ம ஜோதி' ஒளிரும் என்கிறார் பகவான் பாபா!

**தீப சக்தி**

வாக்கிற்கு அருணகிரி என்று போற்றப்படும் அருணகிரிநாதர் 'தீப மங்கள ஜோதி நமோ நம' என்று கூறி மங்கள ஜோதியே தீபம் என்பதை வலியுறுத்துகிறார்!

தினமும் தீப வழிபாடு செய்தால் இகபர சௌபாக்யம் பெற முடியும்!

# அஷ்டநிதிகளை அள்ளித் தரும் பத்மினி வித்யா

"திருமகள் சேர்பவர்களுக்கு செல்வம் சேர்கிறது. ஐசுவரியமும் நீண்ட ஆயுளும் கிடைக்கிறது, அவர்கள் செல்வத்தில் திளைத்தபடி மரணமற்ற நிலையை அடைகிறார்கள். விரைவாக புகழையும், வெற்றியையும் அடைகிறார்கள்!"

– ஸ்ரீ ஸூக்தம்

**பதினாறு பேறுகள்**

'பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வாயாக' என்று பெரியோர் ஆசீர்வாதம் செய்யும்போது அவர்கள் சுட்டிக்காட்டும் பதினாறு பேறுகளாவன:

1. கல்வி, 2. புகழ், 3. வலிமை, 4.. வெற்றி, 5. நெல், 6. நன்மக்கள், 7. பொன், 8. நல்லூழ், 9. அறிவு, 10. அழகு, 11. நுகர்ச்சி, 12. வாழ்நாள், 13. இளமை, 14. பொறுமை, 15. துணிவு, 16. நோயின்மை

## அஷ்டபோகங்கள்



அஷ்டபோகங்கள் என்று குறிப்பிடப்படுவன : 1. பெண். 2. ஆடை, 3. அணிகலன், 4. போஜனம், 5. தாம்பூலம், 6. பரிமளம், 7. பாட்டு, 8. பூவமளி (மலர்ப் படுக்கை)

## அஷ்ட ஐஸ்வர்யங்கள்

அஷ்ட ஐஸ்வர்யங்கள் என்று கூறப்படுபவை : 1.இராஜாங்கம் (பதவி), 2. மக்கள், 3. சுற்றம், 4. பொன், 5. மணி (ரத்தினங்கள்) 6. நெல், 7. வாகனம், 8. பணிபுரிவோர்.

## அள்ளித்தரும் அதி தேவதை

மேலே கண்ட அனைத்தையும் அள்ளித் தரும் பெரும் தேவி மஹாலக்ஷ்மி.

பாற்கடல் கடையப்பட்டபோது ரிஷிகளும் தேவர்களும் ஏகாதசியன்று உபவாசம் இருந்து மந்திரங்களைத் துதித்தவாறு இருக்க துவாதசி அன்று உதயகாலத்தில் லக்ஷ்மி தோன்றினாள். விஷ்ணுவின் மார்பில் அமர்ந்தாள். இதனால் மகிழ்ந்த விஷ்ணு ஏகாதசி உபவாசம் இருந்து துவாதசி அன்று என்னையும் லக்ஷ்மியையும் துதிப்போருக்கு லக்ஷ்மி கடாக்ஷம் ஏற்படும் என்று அருளினார்.

எதையேனும் எழுத ஆரம்பிக்கம் போது 'ஸ்ரீ'என்று எழுதிவிட்டு ஆரம்பிப்பவருக்கு மேலே கூறிய 16


ஸ்ரீ யந்திரம்

பேறுகளையும் தன்னுள் வைத்திருக்கும் 'ஸ்ரீ' அருளுவாள் என்று கூறுவது மரபு.

## அஷ்ட நிதிகள்

இது தவிர வானத்திலே இருக்கும் அஷ்ட நிதிகள் பற்றிய விவரங்கள் அற்புதமானவை.

1. பத்மம் : இது குறிப்பது ஸத்வ குணம். (நல்ல தன்மை, தூய்மை,அறிவு, ஞானம்)

2. மஹாபத்மம் : இது குறிப்து ஸத்வ குணம். (யோக நிலையின் கடைசி நிலை)

3. கச்சபம் (ஆமை) : மனிதர்களைக் கண்டு பயப்படுவது. மர்மமான முறையில் இயங்குவது

4. மகரம் (முதலை) : இது குறிப்பது தமோகுணம் (பணம், புகழ் பற்றி ஆசை)

5. முகுந்த் : இது குறிப்பது ரஜோ குணம். (காதல், கெட்ட சேர்க்கை, சொகுசு வாழ்க்கை)


ஸ்ரீ தனாகர்ஷ மஹாலக்ஷ்மி யந்திரம்



6. நந்தகம் : இது குறிப்பது ரஜோ குணம், தமோகுணம் இரண்டின் கலவை. (தன்னைப் புகழ்தல், மனைவியை அடையவும், நிறைய புத்திரர்களை அடையவும் ஆசை)

7. நீலம்: நந்தகம் போன்றது.

8. சங்கம்: இதுவும் ரஜோகுணம், தமோகுணம் இரண்டின் கலவை.

இந்த எட்டு நிதிகளையும் குபேரனிடம் கொடுத்துப் பரிபாலிக்கச் செய்பவள் மஹாலக்ஷ்மி.

ஆகவேதான் குபேரன், 'நிதீஸ்வரன்' என்றும், 'நிதினாமதீபா' என்றும் அழைக்கப் படுகிறான்.



எட்டு நிதிகளான அஷ்ட லக்ஷ்மிகளையும் அஷ்ட புஷ்பங்களையும் குறிக்கிறது




இந்த யந்திரத்திற்கான மந்திரம் 'ஓம் ஸ்ரீ மஹா லக்ஷ்மியாய நமஹ'

தாமிரத்தில் செய்ய வேண்டிய யந்திரம்

மஹாலக்ஷ்மியின் பொக்கிஷக்காவலன் குபேரன் செல்வத்திற்கு அதிபதியானதால் 'தனாதிபத்யமும்' அதை வழங்குவதால் 'லோகபாலத்வமும்' அவனுக்கு ஏற்படுகிறது. சிவனது நெருங்கிய நண்பனாதலால் அவனுக்கு 'சிவசகா' என்ற பெயரும் உண்டு!

லக்ஷ்மியையும், குபேரனையும் வணங்கினால் செல்வம் சேரும் என்பது வேதம். புராணம் மற்றும் இதிஹாஸம் வழங்கும் அறிவுரை! குறிப்பாக தீபாவளியே லக்ஷ்மி குபேர பூஜை செய்வதுதான். இது வடநாட்டில் மிகப் பிரசித்தம். தென்னிந்தியரும் இப்பூஜையைச் செய்து வளமான நிலையை அடையலாம்.

**பத்மினி வித்யா**

மார்க்கண்டேய புராணமும் (68ம் அத்தியாயம்). கருட புராணமும் (53ம் அத்தியாயம்) வானில் உள்ள எட்டு நிதிகளைப் பற்றி விரிவாக விளக்குகின்றன.

இந்தச் செல்வத்தை அடையும் வழியை விளக்குவதே பத்மினி வித்யா!

**ஸ்ரீஸுக்தம்**

'பத்மினி வித்யா' என்பது மஹாலக்ஷ்மியைத் துதித்து அவள் அருளை வேண்டும் வித்தை. விஷ்ணுவை முதலில் வழிபட்டே லக்ஷ்மியைத் துதிக்க வேண்டும்.

லக்ஷ்மி கடாக்ஷத்தை வேண்டுவோர் ஸ்ரீ ஸூக்தத்தைச் சொல்ல வேண்டும் என்று சௌபாக்யலக்ஷ்மி உபநிஷத் கூறுகிறது.

பஞ்சமி யோகம் கூடிய உத்திர நட்சத்திரத்தில் செய்யப்படும் ஸ்ரீ ஸூக்த ஹோமம் அதிகப் பலனைத் தரும் என்று போதாயனர் அறிவுறுத்துகிறார்.

லக்ஷ்மி தந்திரம்(50ம் அத்தியாயம்) ஸ்ரீ ஸூக்தத்தைச் சொல்ல வேண்டிய முறையை விரிவாக விளக்குகிறது. "யார் ஒருவர் ஸ்ரீஸூக்தத்தைச் சொல்கிறார்களோ அவர்களுக்குச் செல்வம் நிச்சயம் சேரும்" என்று புராணங்கள் கூறுகின்றன.

## லக்ஷ்மி யந்திரம்

என்னிடம் பணம் சேருவதே இல்லை என்று வருந்துவோர் உடனடிப் பலன் கிடைக்க அஷ்டலக்ஷ்மி யந்திரத்தையும், ஸ்ரீ யந்திரத்தையும் பூஜையில் வைத்து வழிபடலாம்.

## அஷ்ட லக்ஷ்மி

அனைத்து வளங்களையும் பெற உகந்தது அஷ்ட லக்ஷ்மி வழிபாடு. சென்னை அடையாறில் உள்ள அஷ்டலக்ஷ்மி கோவில் உட்பட தமிழகத்தில் பல இடங்களிலும் லக்ஷ்மியின் உருவச் சிலைகளைக் கண்டு வழிபாடு செய்யலாம்.

## மூலிகையில் லக்ஷ்மி

வந்தா மூலிகை எனப்படும் மாதுளம் செடியில் தோன்றும் புல்லுருவியிலும், ஐந்திலை நொச்சியிலும், நாணலில் தோன்றும் புல்லுருவி ஆகிய மூலிகையிலும்

மஹாலக்ஷ்மி வாசம் செய்வதால் இவற்றை பூஜையிலும், பணப்பெட்டியிலும், பர்ஸிலும் வைத்துக் கொள்வது வற்றாத செல்வ வளத்தைத் தரும்!

## மகாராஜாக்களின் சீரிய செயல்

மிக நுட்பமான வித்தை என்பதாலும் நாட்டிற்கு முக்கியமாக வேண்டுவது செல்வமே என்பதாலும் மகாராஜாக்கள் லக்ஷ்மி வழிபாட்டை பயபக்தியுடனும் சிரத்தையுடனும் செய்து வந்தனர். தாங்கள் வெளியிட்ட காசுகளில் லக்ஷ்மி உருவத்தையோ அல்லது லக்ஷ்மிக்கு உகந்த மங்கலச் சின்னங்களையோ பொறித்தனர். அரண்மனையில் 'அலக்ஷ்மியை' அகற்றி லக்ஷ்மியை வரவேற்க, செய்ய வேண்டிய அனைத்தையும் செய்ய தனியாக அறவோரைப் பணித்தனர்.

மகாராஜாக்களே செல்வத்தை வேண்டி இப்படிச் செய்வதை வியந்து நோக்கும் நாம், நமது செல்வ வளத்தைப் பெருக்க சிறிது முயற்சி செய்ய வேண்டாமா?

பத்மினி வித்யா – மஹாலக்ஷ்மி வழிபாடு – தனி மனிதரின் செல்வத்தைப் பெருக்குவதோடு நாட்டின் ஏழ்மையை அகற்றி தேசிய செல்வ வளத்தையும் சேர்த்தே பெருக்கும்!

# அம்பிகையைச் சரண் புகுந்தால் அதிக வரம் பெறலாம்!



"ஜயதி கருணா காசி தருணா"

மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாத எதோ ஒரு கருணையானது பராசக்தியாக விளங்குகிறது – ஆதி சங்கரர் (ஸௌந்தர்ய லஹரி சுலோகம் 93)

## தேவியின் கருணை

துளஸிதாசர் தனது ராம சரித மானஸத்தில் சித்தரிக்கும் உச்ச கட்ட (climax) காட்சி!

பல்வேறு பாணங்களை விடுத்தும் ராவணன் இறந்த பாடில்லை. ராமன் திகைத்துப் போகிறான். இதற்குக் காரணம் என்ன என்று யோசிக்க ஆரம்பிக்கிறான். அருகில் இருந்த விபீஷணனை நோக்குகிறான்.

விபீஷணன், "ஐயனே! இடைவிடாது சீதா பிராட்டியை நினைத்து இருப்பவன் ராவணன். அந்த நினைவு அவனைக் காக்கிறது. அவனுடைய நாபி கமலத்தில் அம்ருத கலசங்கள் இருக்கின்றன. அந்த பலத்தால் அவன் உயிரோடு இருக்கிறான்" என்றான்.

நன்றியோடு அவனைப் பார்த்த ராமன் தன் வில்லிலிருந்து முப்பத்தியோரு பாணங்களை எடுத்து ராவணனை நோக்கி விடுத்தான்.

சதா சீதா தேவியையே நினைத்துக் கொண்டிருப் பதால் ராவணின் மனதில் அம்ருதம் வாசம் செய்தது. ஆகவே முதல் பாணத்தை ராவணனின் நாபி கமலத்தை நோக்கி ராமன் விடவே அது அங்கிருந்த அம்ருத கலசங்களை அழித்தது. பிறகு இருபது பாணங்களால் இருபது புஜங்களையும் பத்து பாணங்களால் பத்துத் தலைகளையும் ராமன் துண்டித்தான். ராவணனுடைய பூத உடல் பூமியில் நடனம் செய்ய ஆரம்பித்தது. அப்போது ராமன் இன்னுமொரு பாணத்தினால் அந்த உடலை இரு துண்டங்களாக ஆக்கினான். அந்த பாணம் ராவணனின் ஆத்மாவை அமைதி ஆக்கியது. அவன் இறந்தான்.

தேவியின் கருணையை துளஸிதாசர் இப்படி (லங்கா காண்டம் 656–658) விளக்கும் விதம் மெய் சிலிர்க்க வைக்கிறது!

## தேவி பாகவதம் தரும் காட்சி!

தேவதத்தர் என்ற அந்தணர் தன் மனைவி ரோஹிணியுடன் வாழ்ந்து வந்த போது பிள்ளை இல்லையே என்ற குறை அவரை வருத்தியது. ரோமலர் என்ற வயதான முனிவரை அழைத்து புத்ரகாமேஷ்டி யாகம் செய்ய எண்ணினார் அவர். யாகம் நடக்கும் போது வயதான

காரணத்தால் விடக் கூடாத இடத்தில் மூச்சை விட்டு உச்சரிப்பின் போது ரோமலர் ஸ்வரபங்கம் செய்து விட்டார்.

இதனால் கோபம் அடைந்த தேவதத்தர், "நீ ஒரு முட்டாள்" என்று கத்தினார். இதனால் வருத்தம் அடைந்த ரோமலர், "உனக்குப் பிறக்கும் மகனும் முட்டாளாக இருப்பான்" என்று சபித்தார்.

மனம் வருந்திய தேவதத்தர் சாப விமோசனம் கேட்கவே, சில காலம் அறிவிலியாக இருந்து விட்டுப் பின்னர் தலை சிறந்த அறிவாளியாக அவன் திகழ்வான்" என்றார் ரோமலர்.

தேவதத்தர்–ரோஹிணி தம்பதிகளுக்கு மகன் பிறந்தான். அவனுக்கு உதத்யன் என்று பெயரிட்டனர். முனிவர் சாபப்படியே அறிவில்லாதவனாகவே அவன் வளர்ந்தான். அவனைப் பலரும் ஏளனம் செய்தனர். ஆனால் பொய் பேசாமல் உண்மையையே விரதமாக அவன் அனுஷ்டித்து வந்தான். ஆகவே அவனை ஸத்யவிரதன் என்று அனைவரும் அழைக்க ஆரம்பித்தனர். ஒரு நாள் பெற்றோர் அவனை வெறுத்துப் பேசவே கால் போன போக்கில் நடக்க ஆரம்பித்த ஸத்யவிரதன் தனக்கென்று குடிசை ஒன்றை அமைத்து அதில் வாழ ஆரம்பித்தான்.

ஒரு நாள் தீனமான ஒலி ஒன்று கேட்கவே குரல் வந்த திசையில் அவன் நடக்க ஆரம்பித்தான். வேடன் ஒருவன் காட்டுப் பன்றியை அம்புகளால் அடிக்க அது ரத்தம் சொட்டச் சொட்ட ஒடி வந்து கொண்டிருந்ததைக் கண்டான்.

யமன் போன்ற வேடன் வில்லும் அம்புமாய் ஓடி வர ரத்தம் ஒழுக ஓடி வந்த பன்றியைக் கண்ட ஸத்ய விரதன் "ஐ, ஐ" என்று அலறினான்.

'அ' முதல் 'க்ஷ' வரையிலான 51 அட்சரங்களின் வடிவினளான தேவி 'ஐ' என்ற ஒரு அட்சரத்தைக் கேட்டவுடன் அது தன் வாக்பீஜ மந்திரமாயிற்றே என்று எண்ணி அவனை கருணை பொங்க நோக்கினாள். (ஐம் என்று) பீஜ மந்திரத்தில் உள்ள பிந்துவைக் கூட ஸத்யவிரதன் சொல்லாமல் வெறும் 'ஐ' என்று சொன்னபோதும் கூட தேவி அவனை ஆசீர்வதிக்க அவன் கவிராஜனாக மாறினான்.

ஸத்யவிரதன் குடிசைக்குள் பன்றி நுழையவே, ஸத்யம் தவறாத அவனிடம் வேடன், "என் பன்றி எங்கே?" என்றான். உண்மையைக் கூறி ஒரு உயிர்க் கொலை செய்வதை அவன் விரும்பவில்லை! திடீரென கவி மழை பொழிய ஆரம்பித்த ஸத்யவிரதன் வேடனை நோக்கி, "ஒரு மனிதனுக்கு பார்க்கும் கருவி (கண்) பேசாது. பேசும் கருவி (வாய்) பார்க்காது. உலகில் அனைத்தும் தேவியின் வடிவே தான். அதை வேறு பொருளாகப் பிரித்துப் பேச முடியாது. வேறு பொருளாகப் பேசினால் தேவியைக் காண முடியாது. நான் அகக் கண்ணால் பார்த்தது வேறு. நீ புறக்கண்ணால் பார்த்தது வேறு. நீ எதைப் பார்த்தாய் சொல்?" என்றான்.

வேடன் ஒன்றும் புரியாமல் விழித்து விட்டு அகன்றான். பன்றி மறைந்தது.

'ஐ' ஐ' என்ற ஒரு எழுத்திற்கே அனுக்கிரகம் புரிவாள் அன்னை என்பதை அற்புதமாக விளக்குகிறது தேவி பாகவதம்!

## அன்னையின் அருள்!

அமாவாசை தினத்தை பௌர்ணமி என்று தவறாகக் கூறி விட்ட அபிராம பட்டரின் மானத்தைக் காக்க பூரண சந்திரனை இயங்க வைத்து அபிராமி அந்தாதியை உருவாக்கியவள் அன்னை.

அவளது கருணை எந்த எல்லையையும் தாண்டும் என்கிறார் ஆதி சங்கரர்.

ஸௌந்தர்ய லஹரியில் (22ம் சுலோகம்) பவானி த்வம் என்று சொல்லத் தொடங்கும் முன்னரேயே 'பவானியே நான்' என்ற மஹாமந்திரத்தை பக்தன் கூறியதாக எடுத்துக் கொண்டு அருள் மழை பொழிந்து சாயுஜ்ய பதவியைத் தந்து விடுவாள் அன்னை என்கிறார் அவர்!

## மூகர் கூறும் ரகசியம்!

காமாக்ஷியின் அருளால் பிறந்தது முதல் ஊமையாக இருந்த மூகர், கவிதையை அருவியெனக் கொட்ட ஆரம்பித்தார். ஐநூறு பாடல்களால் காமாக்ஷியைப் போற்றினார். மூக பஞ்ச சதி என்று அழைக்கப்படும் இந்தப் பாடல்கள் அம்பிகையின் கருணையை விளக்குகிறது.

அதில் எல்லா நலன்களும் பெற நாளின் தொடக்கத்தை தேவியை நமஸ்கரித்துத் தொடங்க வேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்துவார். (ஸ்துதி சதகம் பாடல் 32 – 'ப்ரணமன தின ஆரம்பே')

## லலிதா சஹஸ்ர நாமம்

லலிதா சஹஸ்ர நாமத்தில் 'கருணா ரஸ ஸாகரா' (நாமம் 326) என்று தேவி துதிக்கப்படுகிறாள். கருணையையே கடலாகக் கொண்டவள்; அபாரமாக கருணையை அள்ளித் தெளிப்பவள் என்று இதற்குப் பொருள்!

## மகாகவி பாரதியார் பாடல்

இவ்வளவு விஷயங்களையும் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பது எப்படி?

'சக்திதாஸனாக' தன்னைப் புனைப் பெயரால் அழைத்துக் கொண்ட மகாகவி பாரதியாருக்கு மட்டுமே அது சாத்தியமாகும்!

ஆகவே தான் அவர், "அம்பிகையைச் சரண் புகுந்தால் அதிக வரம் பெறலாம்" என்று சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார்!

அதிக வரம் பெற வழி தெரிந்து விட்டதே, இனி என்ன குறை?

# யுகாவதாரம் ஸ்ரீகிருஷ்ணன்

## யுகாவதாரம்



"நல்லோர்களைக் காப்பதற்கும், தீயவர்களை அழிப்பதற்கும் தர்மத்தை நிலை நாட்டுவதற்கும் யுகம்தோறும் அவதரிக்கிறேன்'' என்று கீதையில் அருளிய கண்ணனின் பிறப்பு மக்களுக்குக் களிப்பூட்டும் திருநாளாக விளங்குவதில் வியப்பில்லை! பூரண அவதாரம் என்று அழைக்கப்படும் கிருஷ்ணாவதாரத்தில் ஏராளமான சிறப்புகள் உள்ளன.

அவதாரம் என்றால் 'மேலிருந்து கீழிறங்கி வருதல்,' என்று பொருள். நமக்காக, நம் பாவங்களைப் போக்கி இறைநிலையை நோக்கி நம்மை இட்டுச் செல்ல பகவான் நம் நிலைக்கு இறங்கி வருவதையே அவதாரம் என்ற சொல் குறிப்பிடுகிறது.

## கிருஷ்ணன் கவர்பவனே!

'கிருஷ்' என்னும் மூலத்திலிருந்து தோன்றிய சொல் கிருஷ்ணன் என்னும் சொல், 'கிருஷ்' என்றால் கவர்வது, தன்னிடம் இழுப்பது என்று பொருள். 'ந' என்றால் ஆனந்தம் என்று அர்த்தம். ஆகவே தன்னிடம் கவர்ந்திழுத்து இடையறா ஆனந்தம் அருள்பவனே– பேரின்பத்தைத் தருபவனே கிருஷ்ணன் ஆவான்!

## ஆழ்வார் பாட்டு

ஆகவே தான்,

பச்சை மாமலை போல் மேனி, பவள வாய் கமலச் செங்கண்

அச்சுதா, அமரர் ஏறே, ஆயர் தம் கொழுந்தே என்னும்

இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகம் ஆளும்

அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருள்ளானே!

என்று ஆழ்வார் பாடிப் பரவினார்.

## தீராத லீலைகள்

தனது லீலைகளின் மூலம் உலகோரைப் பரவசப்படுத்திய லீலாவதாரமே மக்களுக்குப் பிடித்த அவதாரமானது.

அஷ்டமியிலே சிறையிலே ஜனித்து, வசுதேவர் தலையிலே சுமக்க கோகுலத்தை அடைந்து யசோதையின் மகனாகக் கண்ணன் வளரும்போது கண்ணன் ஆற்றிய லீலைகளை லீலாசுகர், கிருஷ்ண சைதன்யர், ஆழ்வார்கள், மீரா, ஆண்டாள், ஊத்துக்காடு வேங்கடசுப்பையர், மகாகவி பாரதியார் உட்பட அனைவரும் நினைத்து நினைத்து மனம் பரவசப்பட்டுப் பாடி மகிழ்ந்துள்ளனர்.

கிருஷ்ணனை விடத் தமக்கு கிருஷ்ண லீலைகளையே பிடிக்கும் என 'கிருஷ்ண கர்ணாம்ருதத்தில்' லீலாசுகர் குறிப்பிடுகிறார்!

'தீராத விளையாட்டுப் பிள்ளை' என்று கண்ணனைப் பேருவகையுடன் குறிப்பிடுவார் மகாகவி பாரதியார்.

யசோதைக்குத் தன் வாயிலே உலகையே காண்பித்தது, இளமையிலேயே ஏராளமான அசுரர்களை அழித்தது, கம்ஸனை வதம் செய்தது, கோவர்த்தன கிரியைத் தூக்கியது, காளிங்கன் மீது நடனம் ஆடியது, கோபியர் மனம் மகிழ புல்லாங்குழல் இசையால் அவர்களைப் பக்திப் பரவசத்தில் ஆழ்த்தியது, பாண்டவருக்கு நண்பனாய், நல்லாசிரியனாய், வழிகாட்டியாய், சேவகனாய் இருந்து மகாபாரத யுத்தத்தை நடத்தியது என்று ஆயிரக்கணக்கான சம்பவங்களைத் தன் வாழ்நாளில் நடத்திக் காட்டிய அவன் உலகோர் நடக்க வேண்டிய பாதையை கீதையிலே காட்டி அருளினான்!

## கீதையின் சாரம்

கீதையின் சாரத்தை இரண்டே வரிகளில் சுருக்கிப்பாடி விட்டார் மகாகவி பாரதியார்:

"பக்தி பண்ணி பிழைக்கச் சொன்னான்
பலனை எண்ணாமல் உழைக்கச் சொன்னான்"

## கேசவன் என்றால் கடவுள்

தனது விசுரூப தரிசனத்தை அருளிய கண்ணனைப் பார்த்து வியந்த அர்ஜுனன் 'கேசவா' என்றும் 'பகவான்' என்றும் கண்ணனை விளிக்கிறான்.

கேசவா என்ற நாமத்தில் வரும் 'க' என்ற எழுத்து பிரம்மாவையும் (ஆக்கல்) 'அ' என்பது விஷ்ணுவையும் (காத்தல்), 'ஈச' என்பது சிவனையும் (அழித்தல்) குறிப்பிடுகிறது என்பர் பெரியோர். ஆகவே சேகவன் என்றால் படைத்து, காத்து, அழிக்கும் முப்பெரும் தொழில்களைச் செய்யும் கடவுள் என்றாகிறது. (GENERATOR, OPERATOR, DESTROYER) என்ற மூன்று சொற்களில் முதல் எழுத்துக்கள் இணைந்தால் உருவாவது 'GOD' ஆகும் !)

## பகவானின் ஆறு குணங்கள்

பகவானுக்கு ஆறு குணங்கள் உண்டு என்று விஷ்ணு புராணம் கூறுகிறது. எல்லையற்ற மகிமை, எல்லையற்ற ஞானம், எல்லையற்ற நற்குணம், எல்லையற்ற கீர்த்தி, எல்லையற்ற செல்வம், எல்லையற்ற சாந்தம் – இவை ஆறும் சேர்ந்தே 'பக' என்று அழைக்கப்படுகிறது. இந்த ஆறையும் எவன் கொண்டுள்ளானோ அவனே பகவான் ஆவான்! எவனுக்கு உலகின் தோற்றமும் அழிவும் தெரியுமோ, எவனுக்கு உயிர்களின் தோற்றமும் அழிவும் தெரியுமோ, எவன் வித்தையையும் அவித்தையையும் அறிவானோ அவனே கடவுள் என்று மேலும் கூறுகிறது விஷ்ணு புராணம்.

இதை அனைத்தையும் மனதிலே வைத்தே 'பகவான்' என்று கிருஷ்ணனை அழைக்கிறான் அர்ஜுனன்.

## கர்மயோகி

கர்மயோகத்தை வலியுறுத்திய கண்ணன் பார்த்தனுக்கு சாரதியாக வந்து 'சேவகமும்' செய்தது பிரமிக்க வைக்கும் செயலாகும்.

மதுராவிலே சிறையிலே பிறந்து, துவாரகையில் அரசனாக மாறிய கண்ணன் உண்மையான கர்மயோகியாக அர்ஜுனனுக்குத் தேர்ப்பாகனாய் இருந்தபோது போர்க்களத்திலிருந்து திரும்பிய குதிரைகளை அலுப்புத் தீரக் குளிப்பாட்டினான்! யுத்தகளத்திலே குதிரையை எப்பக்கம் நடத்திச் செல்ல வேண்டும் என்பதற்கான கட்டளையைத் தரும்போது அர்ஜுனன் யுத்தத்திலிருந்து தன் கவனம் சிதறாமல் இருக்கும் வகையில் இடப்பக்கமும் வலப்பக்கமும் திரும்ப தன் காலால் கண்ணனது தோளை மிதித்து சமிக்ஞை செய்வதையும் பொறுத்து உண்மையான கர்மயோகியாய் வேலை செய்வது எப்படி என்பதை உலகிற்குக்குக் காண்பித்தான்!

**கர்வபங்கம்**

போரில் வீர தீர பராக்ரமத்தால் செருக்குற்ற அர்ஜுனன் தன்னை கண்ணன் முதலில் இறங்கச் சொன்னபோது "நீ எனது சாரதி, நீ அல்லவா முதலில் இறங்க வேண்டும்" என்று கூற, சிரித்தவாறே "நீ முதலில் இறங்கு நான் அப்புறம் இறங்குகிறேன். பின்னால் ஏன் என்று உனக்கே புரியும்" என்றான் கண்ணன்.

முதலில் அர்ஜுனன் இறங்க கண்ணன் பிறகு இறங்க, தேர் குபீரெனத் தீப்பிடித்து எரிகிறது.

எதிரிகள் விட்ட திவ்ய அஸ்திரங்கள் கண்ணனின் திவ்ய மேனியின் ஒளியால் செயலிழந்து இருந்ததையும் அவன் இறங்கியவுடன் செயல் பெற்றதையும் உணர்ந்த

அர்ஜுனன் தன்னை மன்னிக்குமாறு வேண்டுகிறான். புன்சிரிப்போடு அவனை ஆட்கொள்கிறான் கண்ணன் "என்னவனாக ஆகு" (மன்மனா பவ) என்று.

### சரணடைவோம்

"எல்லா அறங்களையும் விட்டுவிட்டு என் ஒருவனையே சரணாகதியாக அடை; நான் உன்னை அனைத்துப் பாவங்களிலிருந்தும் விடுவிக்கிறேன்; வருந்தாதே!" இதுவே கண்ணன் அளித்த உறுதிமொழி. இது அர்ஜுனனுக்கு மட்டும் அளித்ததல்ல. உலக மாந்தர் அனைவருக்கும் அளித்த உறுதிமொழி! அவன் பிறந்த நாளில் அவன் தாளில் சரணடைவதே நமது கடமை!

நம்பினோர் கெடுவதில்லை, இது நான்கு மறைத் தீர்ப்பு!

## அறிவியல் வியக்கும் கங்கை!

நதிகளின் ராணி என்றும் கங்காமாதா என்றும் பயபக்தியுடன் அழைக்கப்படும் புனித நதி கங்கை, வியாதிகளைப் போக்க வல்லதுமட்டுமல்ல, சகல பாவங்களையும் அழித்து விடும் ஆற்றல் படைத்தது என்பது பாரத மக்களின் நம்பிக்கை.

உலகில் பிரபல நகைச்சுவை எழுத்தாளரான மார்க் ட்வைன் தனது ஆஸ்திரேலியப் பயணத்தை முடித்துக்

கொண்டு 1896ம் ஆண்டு ஜனவரி மாதம் 18ம் தேதி இந்தியாவுக்கு வந்தார். காசியில் கங்கையில் சடலங்களை எரித்த நிலையில் தள்ளிவிடப்படுவதையும் அதற்கு மிக அருகில் மக்கள் குளித்து விட்டு கங்கை நீரைக் குடிப்பதையும் பார்த்துத் திகைத்துப் போனார்.

டாக்டர் ஹென்கின் என்ற விஞ்ஞானி ஆக்ராவில் அரசுப் பணியில் பணிபுரிந்து கொண்டிருந்தார். அவர் கங்கை நீரைச் சோதனை செய்வதற்காக காசிக்குச் சென்றார். கழிவுநீர் கங்கையில் சேருமிடத்திலிருந்து ஒரு கன செண்டி மீட்டர் நீரை எடுத்தார். சாதாரணமாக அந்த அளவு நீரில் லட்சக்கணக்கில் விஷக் கிருமிகள் இருக்கும். ஆனால் அவை அனைத்தும் ஆறு மணி நேரத்தில் இறந்துவிட்டதை ஹென்கின் கண்டு ஆச்சரியமடைந்தார். மிதந்து சென்ற சடலங்களின் அடியிலிருந்து காலரா கிருமிகள் உள்ள நீரை எடுத்தார். ஆனால் காலரா கிருமிகளும் ஆறு மணி நேரத்தில் துடிதுடித்துச் சாவதை வியப்புடன் நோக்கினார். தான் கண்ட உண்மைகளை உலகிற்கு எடுத்துச் சொன்னார்.

அன்று ஆக்ராவிலிருந்த மார்க் ட்வைன் உடனே தன் வியப்பை அடக்க முடியாமல், "எப்படி பழங்காலத்திலேயே அந்த நீரின் புனிதத் தன்மையை அவர்கள் கண்டறிந்துள்ளனர்! அவர்கள் கிருமிகள் பற்றி நன்கு அறிந்த விஞ்ஞானிகளா!" என்றவர், ஹிந்து நாகரிகத்தை வெகுவாகப் புகழ்ந்தார்.

பிரிட்டிஷ் மருத்துவரான டாக்டர் சி.என். நெல்ஸன் "இங்கிலாந்து செல்லும் கப்பல்கள் கங்கையின் சுத்தமற்ற நீர் என்று கருதப்படும் ஹுக்ளியிலிருந்து நீரை எடுத்துச் செல்லும். ஆனால் அவை இங்கிலாந்து செல்லும் வரை அந்த நீர் கெடுவதில்லை" என்று கங்கை நீரின் சுத்தத்தை விளக்கினார். இப்படி சுத்தமுள்ள நீரை உலகிலேயே கொண்டுள்ள ஒரே நதி கங்கை தான் என்பதை உலக மக்கள் அறிந்தனர்.

பல்வேறு அறிவியல் சோதனைகள் அவ்வப்பொழுது நடத்தப்பட்டு கங்கையின் புனிதம் விளக்கப்படும் போது முன்னோர்களின் அறிவுத்திறனும் நம்பிக்கையும் பிரமிப்பை ஏற்படுத்துகின்றன!

சாமான்யனான இந்தியனுக்கு இந்த அறிவியல் சோதனைகள் ஒன்றும் தேவையில்லை. அவனைப் பொறுத்தமட்டில் கங்கை ஒரு புனித மாதா! பாவங்களை நசுக்கும் பவதாரிணி! உத்தரகாசியிலிருந்து 90 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள கங்கோத்ரியிலிருந்து ஒரு சிறு துளியாக உருவாகி அகண்டு பெருத்து நீண்ட ஓட்டம் ஓடும் அவளை 'நமோஸ்து கங்கே' என்று வணங்கி ஆரத்தி எடுப்பான் அவன்.

ஜகத்குரு சங்கராசார்யரின் கங்காஷ்டகத்தை நீர் கண்ட இடமெல்லாம் முணுமுணுப்பான். தீபாவளி அன்று ஒவ்வொரு வீட்டிலும் கங்கை பிரதிஷ்டை ஆகிறாள் என்ற நம்பிக்கையுடன் 'கங்கா ஸ்நானம் ஆச்சா?' என்ற பொருள்

பொதிந்த அவனது விசாரிப்பில் காலம் காலமாக ரிஷிகளின் கூற்றின் அடிப்படையில் எழுந்துள்ள நம்பிக்கையும் அறிவியல் சோதனைகளின் முடிவும் சங்கமமாவதோடு பரம கதியைத் தரும் நதியின் அருளும் இணையட்டும் என்ற வாழ்த்தும் இணைகிறது.

கங்கா ஸ்நானம் ஆச்சா?

# அறிவியல் பார்வையில் புராண, இதிஹாஸங்கள் பொய்மூட்டையா, பொக்கிஷமா?

## ஸ்டெம் செல் தொழில்நுட்பம்

1998ம் ஆண்டு நவம்பர் மாதம் ஜேம்ஸ் தாம்ஸன் என்ற விஸ்கான்ஸின் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த அமெரிக்க விஞ்ஞானி 'உபரியாக' இருந்த முதிராத கருமுளையிலிருந்து (Embryo) ஸ்டெம்செல்லைப் பிரித்தெடுத்தார். தீராத பல வியாதிகளைத் தீர்த்து வைக்கும் ஒரு விஞ்ஞான ரகசியம் உலகிற்குக் கிடைத்தது. உலகமே பரபரப்படைந்தது. வெறுமையாக– காலியாக– இருக்கும் இந்த செல்களை உடலில் உள்ள 200 வகை செல்களில் எதுவாக வேண்டுமானாலும் மாற்ற முடியும் என்பதும் சிறுநீரகம்,



இதயம் சம்பந்தமான கோளாறுகளுக்கு நல்ல தீர்வாக அமையும் என்பதுமே இந்த பரபரப்புக்குக் காரணம்!

இந்தியாவில் டெல்லி மௌலானா ஆஜாத் மருத்துவக் கல்லூரியைச் சேர்ந்த டாக்டர் பி.ஜி. மதாபுர்கர் (Dr B.G. Matapurkar) கருமுளை ஸ்டெம் செல் ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளார். இந்தியாவிலிருந்து மறைந்து போன அறிவியல் ரகசியங்களுள் இநத் ஸ்டெம் செல் ரகசியமும் ஒன்று என்று கூறும் அவர், இதற்கு உதாரணமாக காந்தாரி உருண்டை பிண்டத்தைப் பெற்றதையும் அதை த்வைபாயன மகரிஷி குளிர்ந்த நீரால் அலம்பி – அறிவியல் இதை ஹைபோதெர்மியா என்கிறது– நுண்ணுயிர்க் கிருமிகளை அதிக எண்ணிக்கையாக்கி அதை அழியாமல் பாதுகாத்தார் என்பதையும் அறிவியல் பூர்வமாக விளக்குகிறார். கட்டைவிரல் நுனியளவே இருந்த நூறு பகுதிகளை இரண்டு வருட காலம் பாதுகாத்து பராமரித்து நூறு கௌரவர்கள் உருவாக்கப்பட்டனர் என்பதை அவர் விளக்கும் போது பிரமிப்பு ஏற்படுகிறது.

புராண இதிஹாஸங்கள் இப்படி நவீன அறிவியல் நுட்பக் கண்டுபிடிப்புகளை ஏற்கனவே கொண்டிருந்ததை விஞ்ஞானிகள் விளக்குவது இது முதன் முறையல்ல!

## விமான அறிவியல்

லாஸ்ஏஞ்சல்ஸை சேர்ந்த அணுஆராய்ச்சி நிபுணர் டாக்டர் ப்ராங்க்ளின் ஆர்.நூஹெல் புஷ்பக விமானத்தையும்

புராணங்கள் விவரிக்கும் விமான வகைகளையும் ஆராய்ந்த பின்னர் இந்தத் தொழில் நுட்பத்தை வியந்து பேசுகிறார்.

புஷ்பக விமானம் ஏராளமான பயணிகளை ஏற்ற வல்லது; அதி வேகமாகச் செல்ல வல்லது; குளிர்சாதன – ஏர்கண்டிஷன்– வசதி பொருத்தப்பட்டது என்பன போன்ற விளக்கங்களை ஆராய்ந்த அவர் அவை தம்மை வியக்க வைப்பதாகக் கூறுகிறார்.

மேலும், ''இந்திரனின் விமானத்தைப் பற்றி 32 விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. அவை விமானம் இயக்கும் விதம், அதன் வடிவமைப்பு, அதில் உள்ள ஒளிவிளக்குகள் பற்றியும், சோலார் சக்தியால் –சூரிய கதிரால்– அவை இயக்கப்பட்டதையும், ஒளி ஆயுதங்களும் ஏவுகணைகளும் அதில் பொருத்தப்பட்டிருந்ததையும் துல்லியமாகக் கூறுகின்றன'' என்கிறார் அவர். மிக நீண்ட அவரது ஆய்வு நூலைச் சுருக்கமாகச் சொன்னால் ''இந்திய இதிஹாஸ, புராணங்கள் பிரமிக்க வைக்கும் தொழில் நட்பத்தை விவரிக்கின்றன'' என்று ஒரு வரியில் கூறி விடலாம்!

## 64 கலைகளில் ஒன்று

புராணம் படிப்பது, கேட்பது, அறிவது அறுபத்தி நான்கு கலைகளில் ஒன்றாக இருக்கிறது! ராஜகுமாரர்கள் புராணங்களைக் கற்க வேண்டும் என்று சாணக்யர் தன் நூலில் குறிப்பிடுகிறார். அத்துடன் புராணம் நன்கு அறிந்த பௌராணிகர்களுக்கு அரசில் முக்கிய இடம் தர வேண்டும் என்றும் அவர் அறிவுறுத்துகிறார்!

இந்தியாவைச் சுற்றிப் பார்த்து வியந்த இஸ்லாமிய யாத்ரீகர் அல்பெரூனி, "அவர்களிடம் (இந்துக்களிடம்) 18 புராணங்கள் இருக்கின்றன: அவற்றில் அனைத்தும் இருக்கிறது" என்று வியந்து கூறியதோடு தான் பார்த்த புராணப் பகுதிகளையும் தன் நூலில் குறிப்பிடுகிறார்!

## 18 புராணங்கள்

பிரம்ம, பத்ம, விஷ்ணு, சிவ, பாகவத, பவிஷ்ய, மார்க்கண்டேய, அக்னி, நாரத, பிரம்ம வைவர்த்தம், லிங்கம், வராஹம், ஸ்காந்தம், வாமனம், கூர்மம், மத்ஸ்யம், கருடம், பிரும்மாண்டம் என்று புராணங்கள் 18.

புராணம் என்றே சொல்லே மிகப் பழமையானது என்ற அர்த்தத்தைத் தருவதோடு என்றும் புதுமையானது என்ற அர்த்தத்தையும் சேர்ந்து தருகிறது!

ஐயாயிரத்திற்கு மேற்பட்ட அத்தியாயங்களில் சுமார் நான்கு லட்சம் சுலோகங்கள் உள்ளன. ராமாயண, மகாபாரத இதிஹாஸங்களில் சுமார் ஒரு லட்சத்து இருபதினாயிரம் சுலோகங்கள் உள்ளன. இவற்றில் இராணுவம், ஏவுகணை, அஸ்திரங்கள் எனப்படும் அதி பயங்கர ஆயுதங்கள், கடற் படை, விமான இயல், ஏவுகணைகள், உயிர்ணு ஆயுதங்கள், பறவை இயல், மிருக இயல், அறுவை சிகிச்சை, மருந்து மூலகங்கள், ரசாயன இயல், கணித இயல், பிரபஞ்ச தோற்றம், இயக்கம், வேகப் பயணம், மனதில் இருப்பதை அறிவது, தொலைவில் உள்ளதைக் கருவியின்றிப் பார்ப்பது, ஒலி இயல், அதன் ஆற்றல், மொழி இயல், கட்டிட இயல் என

நீண்ட பட்டியலில் இருநூறுக்கும் மேற்பட்ட அறிவியல் கிளைகளை விரிவாக எடுத்துரைக்கிறது!

மேலை நாட்டினர் இவற்றை வகைப் படுத்தி ஆராய்ந்து அதில் உள்ள தொழில் நுட்பத்தை அப்படியே செய்து பார்ப்பதை கடந்த நூறு ஆண்டுகளாகப் பல்வேறு அறிஞர்களும் மேலை நாட்டு அரசியல்வாதிகளும் வெளிப்படையாக ஒப்புக் கொண்டுள்ளனர்!

அணுகுண்டைக் கண்டுபிடிப்பதில் ஈடுபட்டிருந்த பிரபல விஞ்ஞானி ராபர்ட் ஒப்பன்ஹீமர் ஒரு சிறந்த சம்ஸ்கிருத அறிஞர். புராண இதிஹாஸங்களை ஆழ்ந்து படித்தவர். அதைப் புகழ்ந்து எழுதியவர். தான் சொல்ல வந்த கருத்திற்கு ஆங்கிலத்தில் தகுந்த சொல் இல்லாததால் 'அஹிம்ஸை' என்று கூறி இதை சம்ஸ்கிருதத்தில் தான் சொல்ல முடிந்தது என்று ஒரு முறை கூறி இருக்கிறார்!

## மனித உணர்வுகளின் நுட்பம் தெரிவிப்பது

அறிவியல் ஒரு புறம் இருக்க மனித உணர்வுகளின் நுட்பத்தைப் புராணக் கதைகள் தெரிவிப்பது போல அவ்வளவு ஆழமாக உலக இலக்கியங்களில் வேறு எங்கும் பார்க்க முடியாது. காதலை வெளிப்படுத்தும் நளினமான சம்பவக் கோர்வைகளை, இன்றைய நாயகியின் தொப்புளையே பம்பரமாகச் சுற்றும் இயக்குனர்கள் பார்த்தால் வியந்து போவர். காலில் குத்திய முள்ளை

எடுக்கும் சாக்கில் துஷ்யந்தனைப் பார்க்கும் சகுந்தலை,அல்ட்ரா மாடர்ன் நங்கையை விட அதி புத்திசாலியும் அழகும் வாய்ந்த தமயந்தி தன் ஆழ்ந்த காதலை பொன் சிறகுகள் வாய்ந்த அன்னத்திடம் கூறுவது போன்ற காட்சிகள் மனதின் நுட்பமான உணர்வுகளைத் தூண்டுபவை. இதனால் தான் இவற்றை ராஜா ரவிவர்மா அழியாத சித்திரங்களாகப் படைக்க அவை அமர புகழ் பெற்றுள்ளன. அவரது ஹரிச்சந்திரா, சகுந்தலை, விசுவாமித்திரர், தமயந்தி, கிருஷ்ணர் போன்ற புராண சித்திரங்கள் பார்ப்போரைப் பரவசமூட்டும் உன்னத சித்திரங்கள்!

ஹரிச்சந்திரன் கதையே மோகன் தாஸ் கரம் சந்த் காந்தியை மகாத்மா காந்தியாக உருவாக்கியது.

## பரமாசார்யர் வாழ்வில்!

இந்தக் காலத்திலும் புராணத்திற்கு சக்தி உள்ளது என்பதை காஞ்சி பரமாசார்யர் வாழ்வில் நடந்த ஒரு சம்பவம் விளக்குகிறது.

அவரது அணுக்க பக்தர்களுள் ஒருவர் ஆசார்யரை அணுகி தனக்கு வேண்டிய சேட் ஒருவர் ஆகாரம் சாப்பிட முடியாமல் இருப்பதாகவும், டியூப் வழியே திரவ வடிவில் ஆகாரம் அவருக்குச் செலுத்தப்படுவதாகவும் கூறி ஆசார்யரின் அனுக்ரஹத்தை வேண்டினார். இதைக் கேட்ட ஆசார்யர் ஒன்றும் சொல்லவில்லை. சில நாட்கள் கழிந்தன.

நோய் தாங்க முடியாத நிலைக்கு வந்து விட்டதை அடுத்து மீண்டும் பக்தர் ஆசார்யரை அணுகி அருள் வேண்டினார். இந்த முறை ஆசாார்யர், "நான் என்ன சொன்னாலும் அவர் கேட்பாரா?" என்று வினவினார். பக்தர், சேட் ஒரு பெரிய செல்வந்தர் என்றும் ஆசார்யர் சொல்படி கேட்க விருப்பமுடையவர் என்பதையும் தெரிவித்தார். உடனே ஆசார்யர், "பதினெட்டு புராணங்களையும் அச்சடித்து அவர் வெளியிடட்டும்" என்றார். உடனே சேட் தனது அலுவலகத்தில் ஒரு பகுதியை புராண வெளியீட்டிற்காக ஒதுக்கி சிறந்த பண்டிதர்களை அழைத்து அவர்கள் மூலம் ஒவ்வொரு புராணமாக வெளியிடலானார். 17 புராணங்கள் அச்சேறின. அவர் உடல் நிலையில் ஒரு மாற்றமும் இல்லை. பதினெட்டாவது புராண வேலை ஆரம்பமாயிற்று. அவர் உடல் நிலையில் ஒரு மாற்றம் வந்தது. டியூப் இல்லாமல் உணவு சாப்பிட முடிந்தது. பதினெட்டாம் புராணம் முடிவடைந்து அச்சேறிய நிலையில் அவர் ஆரோக்கியமான ஒருவர் எப்படி உணவருந்துவாரோ அது போல சாப்பிட ஆரம்பித்தார்.

கண்ணீர் மல்க ஆசார்யரை அவர் வணங்கிய போது, "என்னால் என்ன இருக்கிறது.... புராணங்களின் மகிமை...அது !" என்றார் பரமாசார்யர்.

புராணத்தின் மகிமையையும் ஆசார்யரின் அற்புதமான தவ ஆற்றலையும், மேன்மையையும் கருணையையும் ஒருங்கே உணர்த்தும் அதிசயச் சம்பவம் இது !

## புராணம் பொய் மூட்டையா, பொக்கிஷமா?

புராணம் பொய் மூட்டை..... ஒருத்திக்கு நூறு பேர் எப்படிப் பிறக்க முடியும் என்பது தொடங்கி ஏராளமான கேள்விக்கணைகளைத் தொடுக்கும் பகுத் தறிவுவாதிகளுக்கு வளர்ந்து கொண்டே வரும் நவீன அறிவியல் தக்க பதிலை ஒவ்வொன்றாகத் தருவது வியப்புக்குரிய விஷயம்!

இதையே அழுத்தம்திருத்தமாக சுவாமி விவேகானந்தர் கூறுகிறார்: **"இந்தியாவின் மகரிஷிகள் காலத்திற்கு முற்பட்டவர்கள்! அவர்களது ஞானத்தை அறிந்து பாராட்ட உலகம் பல நூற்றாண்டுகள் காத்திருக்க வேண்டும்!"**

லட்சக்கணக்கான சுலோகங்களை அடக்கி உள்ள புராண இதிஹாஸங்கள் பொய் மூட்டை அல்ல; அது ஒரு அரிய பொக்கிஷம்!

ஏராளமான அறிவியல் அறிஞர்களும் ஞானிகளும் போற்றும் புராண, இதிஹாஸங்களைப் போற்றிப் பாதுகாக்க வேண்டியது நமது உடனடிக் கடமை!

# அறிவியல் வியக்கும் அற்புத ஆலயங்கள்!

## ஹிந்து ஆலயங்களின் நோக்கம்



"மனிதர்களின் உன்னதமான குறிக்கோளை சேகரித்து ஒன்றுபடுத்திப் பெரிதாக்கும் கருவிகளே அறிவியல் முறையில் அமைக்கப்பட்ட ஹிந்து ஆலயங்கள்! மனித உலகத்தை தெய்வ லோகத்துடன் இணைக்கும் தொடர்பாக அவை விளங்கு கின்றன. தென்னிந்தியாவில் உள்ள பெரும் கோவில்கள் இதற்குச் சிறந்த உதாரணம்" என்று டேவிட் ஃப்ராலி தான் எழுதிய 'நான் எப்படி ஹிந்து ஆனேன்?" (How I became a Hindu) என்ற நூலில் கூறுகிறார்.

## ஒலி இயல் விஞ்ஞானம்

மதுரை மீனாட்சி அம்மன் ஆலயத்தில் ஆயிரங்கால் மண்டபத்தில் (உண்மையில் 985 கால்களே உள்ளன) எதிரொலி உருவாகாமல் இருக்க ஆங்காங்கே ஒலித் தடைகள் அமைக்கப்பட்டுள்ளன என்பதையும் சிறந்த ஒலி விஞ்ஞான அடிப்படையில் அமைக்கப்பட்ட அந்த மண்டபத்தில் எந்த ஒரு தூணும் பார்வையை மறைக்காத வாறு மைய இடத்தைக் காணும் வகையில் அமைக்கப்பட்டு இருப்பதோடு எதிரொலி ஏற்படுத்தாத அற்புத மண்டபம் என்ற வகையில் கட்டிட அதிசயமாக உள்ளது என்பதையும்

அறிவியல் முறையில் ஆய்வு நடத்திய குழு அறிவித்துள்ளது. (குழுவின் முழு அறிக்கையின் அதிசய விஞ்ஞான வியப்புகளை 24–6–1983 ஹிந்து நாளிதழில் காணலாம்)

இசைத் தூண்கள் என ஸ,ரி,,க,ம,ப,த,நி,ஸ என ஸ்வரங்களை எழுப்பும் 22 தூண்கள் அடங்கிய அற்புதத் தூண்களை வடக்கு கோபுர நுழைவாயில் அருகே காணலாம்.

இதே போன்ற தூண்கள் திருவனந்தபுரம் பத்மநாப சுவாமி கோவில் குலசேகர மண்டபத்திலும், ஆழ்வார் திருநகர் கண்ணாடி மண்டபத்திலும் உள்ளன.

விஞ்ஞானபூர்வமான வடிவமைப்பு, நேர்த்தி, ஒலி உருவாகும் அமைப்பு இவற்றிற்கு இந்த இசைத்தூண்கள் ஒரு சான்று.

## சூரிய வழிபாட்டுத்தலங்கள்

எகிப்தில் இரண்டாம் ராம்ஸேஸ் கட்டிய அபு ஆலயத்தின் மீது சூரியனின் ஒளி ஒவ்வொரு ஆண்டும் பிப்ரவரி, அக்டோபர் 21ம் தேதிகளில் விழுவதைக் குறிப்பிட்டு அதன் சிறப்பை வானளாவ அனைவரும் புகழ்கின்றனர்.

ஆனால் பாரதக் கோவில்களில் ஏராளமானவற்றில் மூலவர் மீது சூரிய ஒளி குறிப்பிட்ட நாட்களில் குறிப்பிட்ட நேரத்தில் சரியாக விழுவதோடு இந்த நாட்களை சூரிய

பூஜை நாட்கள் எனக் குறிப்பிட்டு சிறப்பு பூஜைகள் நடைபெறுவது சாதாரணமாக இருந்து வருகிறது.

குஜராத் மாநிலத்தில் மொதிராவில் கிழக்கு நோக்கி அமைந்துள்ள சூரியனுக்கான கோவிலில் இரவும் பகலும் சம நேரமாக வரும் மார்ச் 21, செப்டம்பர் 22/23 தேதிகளில் சூரியனின் ஒளி நேராக மூலக் கோவிலில் விழுகிறது. குறிப்பிட்ட மாதத்தில் குறிப்பிட்ட நாட்களில் கிழக்கு நோக்கியுள்ள ஆலயங்களில் காலையிலும் மேற்கு நோக்கி அமைக்கப்பட்டுள்ள ஆலயங்களில் மாலையிலும் கும்பகோணம் கீழ்க்கோட்டம் நாகேஸ்வரர் கோவில், புள்ளிருக்கு வேளூர், ஏத்தாப்பூர் சாம்பமூர்த்தி கோவில், நெல்லிக்கா, பைஞ்ஞீலி, நாவலூர், மாயூரம் அருகில் உள்ள பொன்னூர், கரூர், மதுரை (மாரியம்மன் தெப்பக்குளத்தருகே உள்ள முக்தீஸ்வரர் கோவில்), சித்தூரில் உள்ள நாகலாபுரம் ஆகிய இடங்களில் உள்ள கோவில்களில் மூலவர் மீது சூரிய ஒளி விழுகிறது. இப்படி சுமார் ஐம்பதுக்கும் மேற்பட்ட ஆலயங்களில் விழுவதையும் இவற்றை பஞ்சாங்கம் தெரிவிப்பதையும் பார்க்கும் போது, அதிசயங்கள் சாதாரணமானவையாக இருப்பது உறுதிப்படுகிறது.

## வானியல் விஞ்ஞானம்

உஜ்ஜயினியில் உள்ள மகா காலேஸ்வரர் ஆலயம் பூமியின் முதலாவது தீர்க்கரேகையில் உள்ளது. இங்குள்ள சூரிய புள்ளியில் சரியான இடத்தில் மகா காலேஸ்வரர்

ஆலயம் உள்ளது. இங்கிருந்தே காலம் ஆரம்பிப்பதை முன்னோர் எப்படி அறிந்தனர்?

## நீரும் கோவிலும்

திருவானைக்காவில் ஊறிக்கொண்டே இருக்கும் நீரில் இருக்கும் லிங்கம் அதிசய லிங்கம்! பாரிபாடாவில் உள்ள வாரணேஸ்வரர் ஆலயத்தில் உள்ள கல் கிணற்றில் கைப்பிடிச் சுவரிலிருந்து நீர் ஊறிக் கொண்டே இருக்கிறது!

## சிற்ப அற்புதங்கள்

பெரும்பாலான ஆலயங்கள் கருங்கற்களால் அமைக்கப்பட்டுள்ளன. கருங்கற்கள் பூகம்ப அதிர்வை "ஷாக் அப்சார்பர்" போல அதிர்ச்சி தாங்கும் தன்மையுடையவை என்பது குறிப்பிடத்தகுந்த அறிவியல் உண்மை! ராமேஸ்வரம் கோவில் பிரகாரம் உலகிலேயே பிரம்மாண்டமான பிரகாரம்!

தஞ்சை பெரிய கோவிலின் கோபுர கலசத்தின் நிழல் பூமியில் படாதவாறு அமைக்கப்பட்டுள்ளது. பல்லாயிரக் கணக்கான சிற்ப அற்புதங்கள் பாரத ஆலயங்களில் உள்ளன. மாமல்லபுரத்தின் கடற்கரைக் கோவில் உலகின் உன்னத கலைப்பீடம்!

மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் கடம்ப மரம் அருகே உள்ள தூணில் உள்ள நடன மாதர் சிற்பம், காளையும் யானையும் விசித்திரமாக அமைந்துள்ள ஒரே சிற்பம். ஒரே தலையைக் கொண்டு உள்ளிருந்து வருவது,

கிளையில் இருப்பது, அமர்ந்திருப்பது ஆகிய மூன்று நிலைகளைக் காண்பிக்கும் குரங்கு சிற்பம், யாழியின் தொண்டையில் உள்ள உருண்டை பார்வையாளர் கையால் சுழலப்பட்டாலும் வெளியில் வராமல் அமைக்கப்பட்டுள்ள சிற்ப நேர்த்தி, ஆயிரங்கால் மண்டபத்தில் நுழைவாயில் அருகே மேற்கூரையில் அறுபது வருடங்களைச் சித்தரிக்கும் கால வட்டம் என்று இப்படி நூற்றுக்கணக்கானவற்றை அடுக்கிக் கொண்டே போகலாம். ஒரு கோவிலிலேயே இப்படி என்றால் ஆயிரக்கணக்கான கோவில்களின் சிற்ப அற்புதங்கள் பல்லாயிரத்தையும் தாண்டும் என்பதோடு இதன் விலை மதிப்பு உலகியல் ரீதியில் கோடானுகோடி ரூபாய்களைத் தாண்டுவதோடு இதன் கலை நய மதிப்பு "விலை" என்ற வரையறுப்பைத் தாண்டியதாக அமைந்துள்ளதும் பெரிய ஆச்சரியத்தைத் தரும் விஷயம்!

ஆவுடையார் கோவிலில் உள்ள கொடுங்கைகளையும், திருவலஞ்சுழி கல் பலகணிகளையும் தவிர மற்றவற்றை எங்களால் அமைக்க முடியும் என்று ஆலய வேலையைத் தொடங்கு முன்னர் ஸ்தபதிகள் குறிப்பிடுவது வழக்கம். இப்படி சிற்பிகளாலேயே போற்றப்படும் கலை நுணுக்கம் உலகில் எங்கும் இல்லை என்பது உண்மை!

**கற்களிலும் ஒரு கலை**

ஆண் கல், பெண் கல், அலி கல் என கற்களைக் கூட இனம் பிரித்து உரிய கற்களை வைத்து உரிய சிலைகள் அமைக்கப்பட்டுள்ளது வியப்பூட்டும்!

ஆதி சங்கரர் ஸ்தாபித்துள்ள ஸ்படிக லிங்கம் ஐந்து இடங்களில் உள்ளன. யோகலிங்கம் காஞ்சியிலும் போக லிங்கம் சிருங்கேரியிலும் வர லிங்கம் கேதாரிலும் முக்தி லிங்கம் கைலாஸத்திலும் ஆகாச லிங்கம் சிதம்பரத்திலும் அவரால் ஸ்தாபிக்கப்பட்டன. ஸ்படிகம் அனைத்து நல்லதிர்வுகளையும் இழுத்து தன்னுள் சேமிக்கும் ஆற்றல் உள்ளது என்பதை கணினி அறிவியல் கண்டுபிடித்துள்ளது.

மீனாட்சி திருஉருவச்சிலை மரகதக் கல்லில் அமைக்கப்பட்டுள்ளது தற்செயலான ஒன்று இல்லை. பழநியில் உள்ள நவபாஷாணச் சிலை ரசாயனச் சேர்க்கையின் அதிசயம் என்றால் திருநாகேஸ்வரத்தில் வேறு விதமான அதிசயம் உள்ளது. அங்குள்ள ராகு பகவான் சிலையில் பால் அபிஷேகம் செய்யும்போது சுவாமியின் மேல் அபிஷேகம் செய்யும்போது நீல நிறமாக மாறும். அந்தப் பால் ராகு பகவானின்திருமேனியில் நீல நிறமாக இருப்பது ராகு பகவானின் பாதத்தை அடையும்போது துாய வெண்மையாக முன்பிருந்ததைப் போல ஆவதை தினமும் அபிஷேகத்தின் போது நேரில் காணலாம். திருவண்ணாமலையே ஒரு அக்னிக்கல் என புவியியல் வல்லுனர் ஆராய்ந்து சொல்லும்போது அது அக்னி தலம் என்று கூறுவதன் பொருள் புரிகிறது!

அமர்நாத்தில் வருடந்தோறும் சிராவண பௌர்ணமி அன்று பனி லிங்கம் பெரிய அளவு ஆகும். அன்று இரண்டு புறாக்கள் சிவனையும் பார்வதியையும் குறிக்கும் விதத்தில் வருடந்தோறும் தவறாமல் வருவது உலகின் மிகச் சிறந்த அதிசயம்!

திருக்கழுக்குன்றத்தில் தினமும் வரும் கழுகு, விராலிமலை, திருப்பரங்குன்றம் பகுதிகளில் வாழும் நூற்றுக்கணக்கான மயில்கள், பறவையியல் அதிசயங்களுள் சில!

## இயற்கை இயைந்த கோயில்கள்

நீர்வீழ்ச்சி சாரல் பட்டவாறே உள்ள குற்றாலம் கோவில், திருச்செந்தூர் உள்ளிட்ட நூற்றுக்கணக்கான கடற்கரை கோவில்கள், அதற்கும் மேற்பட்ட எண்ணிக்கையில் உள்ள கங்கை, காவிரி உள்ளிட்ட நதி தீரங்களில் அமைக்கப்பட்டுள்ள கோவில்கள், குன்றுகளில் உள்ள குமரன் கோவில்கள் என இயற்கையோடு இயைந்த கோவில்களில் உள்ள இயற்கை அதிசயங்கள் தனி அதிசயங்களாகும்! இவற்றை விரிப்பின் பல என்சைக்ளோபீடியாக்கள் (கலைக்களஞ்சியங்கள்) அளவு பெருகும்!

இப்படி அறிவியலின் அனைத்துப் பிரிவுகளையும் வியக்க வைக்கும் கோவில்களால் வடக்கே இமயத்திலிருந்து தெற்கே கன்யாகுமாரி வரை உள்ள தேசத்தை 108 சக்திபீடங்களாலும், 108 திவ்ய தேசங்களாலும், 12 த்வாதச ஜ்யோதிர்லிங்க ஸ்தலங்களாலும் ஒன்றுபடுத்தி மனித உலகத்தை தெய்வ லோகத்துடன் இணைக்கும் பாலமாக அவற்றை அமைத்த நம் முன்னோர்களின் அருள் செயலை நினைத்தாலே மெய்சிலிர்க்கும்!

நவீன உலக அதிசயங்களுள் ஒன்றாக மீனாட்சி அம்மன் கோவில் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் சரி, தேர்ந்தெடுக்கப்படாவிட்டாலும் சரி, அது என்றுமே முதல் அதிசயம் தான் என்பதோடு அதிசய ஆலயங்கள் அனைத்துமே கொண்டுள்ள பாரத நாடே உலகின் முதல் அதிசய நாடு என்பதில் சந்தேகம் உண்டா, என்ன?

# ஆயுள் நீடிக்க ரத்தினங்களை அணிக

## ஆயுர்வேதம்



அதர்வண வேதத்தின் உபவேதமாகத் திகழும் பூரண ஆயுளுடன் வாழும் கலையைச் சொல்லித்தரும் ஆயுர்வேதத்தை 12,000 உரையிடையிட்ட பாக்களால் ஆக்கியவர் சரகர். ஆனால் நமக்கு இன்று கிடைத்துள்ளவை 10,000 பாக்களே!

''அக்னிவேச தந்திரம்'' என்ற நூலைத் தொகுத்து, பகுத்துப் பதிக்கப்பட்ட இவரது நூல் ''சரக சம்ஹிதை'' என்று அழைக்கப்படுகிறது.

## நீடித்த ஆயுள்

''அதாதோ தீர்க்க ஜீவிதீயம் அத்யாயம் வ்யாக்யாஸ்யாம்'' – இப்போது தீர்க்க ஆயுளுடன் வாழ்வது

எப்படி என்று அத்தியாயத்தைப் பார்ப்போம்'' என்று தனது நூலை சரகர் ஆரம்பிக்கிறார். தீர்க்க ஆயுள் என்ற சொற்றொடர் மிக்க ஆழமான பொருள் படைத்த ஒன்று!

''ஷட்த்ரிஷதம் சஹஸ்ராணி ராத்ரினாம் ஹிதபோஜன:
ஜீவத்யனாதுரோ ஜந்துர் ஜிதாத்மா சம்பத: சதாம
சூத்ரஸ்தானம் அத் 27: சுலோ: 348

''சுயக்கட்டுப்பாடுடன் இருப்பதோடு பெரியோரால் ஆசிர்வதிக்கப்படும் ஒருவன் ஊட்டச்சத்து மிகுந்த (whole-some food) உணவை உண்பதன் முலம் வியாதியின்றி நூறு ஆண்டுகள் வாழலாம் என்று சரகர் மேலே கண்ட சுலோகத்தில் அருளுகிறார். இந்த தீர்க்க ஆயுளை அடைவதற்கான வழிமுறைகளைத் தெளிவாக, படிப்படியாக அவர் விரித்துரைக்கும் விதமே ஆச்சரியமானது.

மனம், ஆத்மா, உடல் – இந்த முன்றும் முக்காலி போல (த்ரிதண்டத்) என்று கூறி இந்த மூன்றில் எந்த ஒன்றும் தொந்தரவுபடுத்தப்படாமல் இருந்தால் ''புருஷன்'' ஆனந்தமாக வாழலாம் என்று ஆயுர்வேதக் கலையின் உட்பொருளை விளக்குகிறார்.

இந்த நூலில் இல்லாதது வேறெங்கும் இல்லை. வேறெங்கும் கூறியிருக்கும் அனைத்தும் இதில் உள்ளது என்று கூறும் சரகர் திறந்த மனதுடன், ''நான் கூறியது மட்டுமின்றி வேறு நல்ல விஷயங்கள் எங்கிருந்தாலும் அதையும் ஏற்கிறேன்'' என்கிறார்.

வெறும் உடலை மட்டும் பாதுகாத்துப் பயன் இல்லை. உள்ளத்தையும் ஆன்மாவையும் பேணிப் பாதுகாக்க வேண்டும் என்ற இவரது அணுகுமுறையே மற்ற தேச மருத்துவ முறைகளுக்கும் ஆயுர்வேதத்திற்கும் உள்ள முக்கியமான வேறுபாடு ஆகும்.

எட்டுவித சிகிச்சை முறைகளில் ஆயுதத்தால் செய்யும் அறுவை சிகிச்சை போன்றவற்றை விட்டு விட்டு உள்ளுக்குச் சாப்பிடும் மருந்து முறைகளையும், தள்ள வேண்டியவற்றையும் கொள்ள வேண்டியவற்றையும் மட்டும் விரிவாக சரகர் எடுத்துரைக்கிறார்.

ஸூத்ர ஸ்தானம் எனப்படும் முதல் பகுதியின் ஏழாவது அத்தியாயம் வெற்றிகரமான வாழ்க்கை முறையை விவரிக்கிறது.

அதில் முக்கியமாக ரத்தினக்கற்கள் பற்றி விவரிக்கப்பட்டுள்ளது. ''நா ஸ்ப்ருஷ்டாய ரத்னாஜ்ய பூஜ்ய மங்கல சுமனேஸோபி நிஷ்க்ராமேத், ந பூஜ்ய மங்கலான்யபசக்யம் கச்சேன்ன தராயனுதக்ஷிணம்'' அத் 7 : சுலோ 19

''வெளியில் கிளம்பும்போது ரத்னக்கற்களைத் தொடாமல் (அணியாமல்) செல்லக்கூடாது. பெரியயோர்களின் பாதங்களைத் தொடாமல் செல்லக்கூடாது. நெய், நல்ல மங்களகரமான பொருள்கள், மலர்கள் இவற்றைத் தொடாமல் செல்லக்கூடாது. வணக்கத்திற்குரிய பெரியோர்கள், பூசிக்கப்படும் பொருள்கள் ஆகியவை வலப்புறம் இருக்கும்படியும்,

சிறியவர்கள் இடப்புறம் இருக்கும்படியாகவும் உள்ள நிலையில் கிளம்ப வேண்டும். (அதாவது பெரியோரை வலமாகச் சுற்றிக் கிளம்ப வேண்டும்)

ரத்னக் கற்களின் முக்கியத்துவத்தை அடுத்த சுலோகத்திலும் வலியுறுத்துகிறார்.

''நா ரத்னபாணிர் நாஸ்னாதோ'' என்ற ஆரம்பித்து ரத்னக்கற்களை கையில் அணியாமலோ, குளிக்காமலோ சாப்பிடக்கூடாது என்று அறிவுறுத்துகிறார். இத்துடன் மூலிகைகளையும் உடலிலே தரிக்குமாறு அறிவுறுத்துகிறார்! நூற்றுக்கும் மேலான விதிகளை நாம் பின்பற்றுவதற்காக வரிசையாக அடுக்கித் தருகிறார். இவற்றைக் கடைப்பிடிக்காமல் விலக, விலக அந்த அளவுக்கு ஆயுள் குறையும்.

## சந்தோஷமான வாழ்க்கை

சந்தோஷமான வாழ்க்கை எது?

எவர்கள் உடல், மனம் இவற்றில் வியாதியின்றி இருக்கின்றார்களோ இளமை, உற்சாகம், வலிமை, வீரியம், மரியாதை, ஆண்மை, தைரியம் இவற்றோடு புலன்கள், அவற்றின் குறிக்கோள், அவற்றின் தன்மை பற்றிய அறிவு மற்றும் கலைகள், விஞ்ஞானம் பற்றிய அறிவோடு தான் விரும்பியவற்றையெல்லாம் அடைந்து தான் விரும்பும் இடமெல்லாம் செல்கிறார்களோ அவர்களின் வாழ்க்கையே சந்தோஷமான வாழ்க்கை; அல்லாத வாழ்க்கை மகிழ்ச்சி அற்ற வாழ்க்கை என்று அற்புதமாக விளக்குகிறார்.

யார் யாருக்கு எந்தெந்த உணவு தேவை என்பதை அறிந்து சாப்பிட வேண்டும் என்று அவர் குறிப்பிடுவதைக் கருத்தில் கொண்டால், எவர் எவருக்கு எந்தெந்த ரத்தினக்கற்கள் பொருந்தும், அதை எப்படி அணியவேண்டும் என்பதை உணர்ந்த பின்னரே அணிய வேண்டும் என்பது தெளிவாக விளங்கும்.

வராஹமிஹிரர் எழுதிய பிருஹத் ஜாதகம், போஜராஜன் எழுதிய யுக்தி கல்பதரு, விஷ்ணு தர்மோத்தர புராணம், அக்னி புராணம், அகஸ்தியர் இயற்றிய ரத்ன சாஸ்த்ரம் ஆகியவை ரத்தினங்களின் குணங்கள், ஆகியவற்றின் மேன்மை, யார் எதை அணிய வேண்டும், அதை அணிந்தால் என்ன பயன் ஏற்படும் என்ற விவரங்களை நுட்பமாகக் குறிப்பிடுகின்றன.

ஹிந்து அறிவியல் நூல்களில் ரசாயன நூலாக விளங்கும் ''ரஸஜல நிதி'' ரத்தினக்கற்களின் வெவ்வேறு வகைகளையும் அவற்றின் தோஷங்கள் மற்றும் அவற்றைப் பரிட்சித்துத் தெரிவு செய்ய வேண்டிய முறைகள் ஆகியவற்றைத் தெளிவாக எடுத்துரைக்கிறது.

ஆகவே ரத்னக்கற்களை அணிய வேண்டும் என்ற சரகரின் அறிவுரையை ஏற்று, அவற்றில் எதை, எப்படி எந்த நன்மைகளைப் பெற அணிய வேண்டும் என்பதைத் தக்க நிபுணர்களை அணுகிக் கேட்டு அறிந்து அணிந்தால் நீடித்த ''தீர்க்க'' ஆயுளுடன் கூடிய மகிழ்ச்சிகரமான வாழ்க்கை அமைவது திண்ணம்!

# வெற்றி தரும் ஆசீர்வாதம்



மகாபாரதத்தில் பீஷ்ம பர்வத்தில் ஒவ்வொருவரும் பின்பற்ற வேண்டிய ஒரு வழிமுறையை ஒரு காட்சி அற்புதமாகச் சித்திரிக்கிறது.

குருக்ஷேத்திரத்தில் யுத்த களத்தில் கௌரவரும், பாண்டவரும் அணி வகுத்து நிற்க, மனம் தளர்ந்து போர் புரிய மறுத்த அர்ஜுனனை கண்ண பெருமான் கீதோபதேசம் செய்து மாற்றி போர் புரியப் பணிக்கிறார். போர் துவங்க இருக்கும் வேளை.

திடீரென்று தர்மர் தன் கவசங்களைக் கழட்டினார். தனது ஆயுதங்களைக் கீழே வைத்தார். தேரிலிருந்து இறங்கி கூப்பிய கரங்களுடன் கௌரவர் சேனையை நோக்கி நடக்கத் தொடங்கினார். பீமன், அர்ஜுனன், நகுலன், சகாதேவன், "அண்ணா, என்ன இது, எங்கே போகிறீர்கள்?" என்று அலறியவாறே பின் தொடரலாயினர். கிருஷ்ணரும் கூடவே சென்றார்.

எதிர்பாராத இந்தத் திருப்பத்தால் கௌரவர்கள் பெருமகிழ்ச்சி அடைந்து, "பார்த்தாயா, போரிட பயந்து நடுநடுங்கி பாண்டவர்கள் வருகின்றனர்" என்று கூறி எள்ளி நகையாடினர்.

கிருஷ்ணர் அலறுகின்ற சகோதரர்களை நோக்கிப் புன்முறுவல் பூத்தார். அவர்களை நோக்கி, "தர்மர், எதிரே

உள்ள பீஷ்மர், துரோணர், கிருபர் மற்றும் பெரியோரிடம் அனுமதி வாங்கச் செல்கிறார்'' என்றார்.

தர்மர் பீஷ்மரிடம் சென்று அவரை வணங்கினார். ''ஜெயிக்க முடியாதவரே! உங்களோடு போர் புரிய அனுமதி கொடுங்கள். ஆசீர்வாதங்களை அருளுங்கள்'' என்றார்.

இதனால் மகிழ்ந்த பீஷ்மர், ''யுத்தம் செய்! வெற்றி பெறு'' என்று கூறி அனுமதி தந்து ஆசீர்வாதங்களையும் அளித்தார்.

''இப்படி என்னை நோக்கி நீ வராது இருந்திருப்பாயாகில், நான் உன்னைச் சபித்திருப்பேன்'' என்றும் கூறினார்.

இதே போன்ற வார்த்தைகளை துரோணரும், கிருபரும், சல்லியனும் கூறினர். இந்தச் சந்திப்பு தர்மரின் வெற்றிக்கு வழி வகுத்தது.

பீஷ்மர் தான் இறக்கும் தருணம் இன்னும் வரவில்லை என்பதால், மீண்டும் வருமாறு தர்மரிடம் அறிவுறுத்தினார். துரோணர் தான் சாக வேண்டுமெனில் தான் நம்பும் ஒருவர் மூலமாகத் தனக்குப் பிரியமில்லாத ஒரு விஷயத்தை தான் கேட்க நேர்ந்தால் தன் ஆயுதங்களைப் போட்டுவிட்டு போரிடாமல் இருக்க நேரிடும் என்ற ரகசியத்தை தருமரிடம் வெளியிடுகிறார். சல்லியனோ கர்ணனின் ஊக்கத்தைக் குறைக்க தர்மரிடம் உறுதி அளிக்கிறான், ஆக இந்தச் சந்திப்பு முக்கிய சந்திப்பாகவும் திருப்பு மையமாகவும் ஆகிறது.

பெரியோரின் அனுமதியுடனும், ஆசிகளுடனும் திரும்பிய தர்மர் போர் புரிந்தார். வெற்றி பெற்றார்.

ஒரு காரியத்தைத் தொடங்கும் முன்னர் பெரியோர்களிடம் அனுமதி, ஆசிர்வாதம் பெறுவது என்பது பாரதப் பாரம்பர்யத்தில் தொன்றுதொட்டு இருந்துவரும் நடைமுறை.

விவாஹ முகூர்த்த ஆரம்பத்தில், வீட்டிலுள்ள மூத்த பெரியோரை வணங்கி அவர்களின் அனுமதியுடனும், ஆசிகளும் அளித்த பின்னரே மங்கலவிழா தொடங்கப்படுகிறது.

ஆசீர்வாதம் என்ற சொற்றொடரில் ஆசி மற்றும் வாதம் என்ற இரு சொற்கள் இணைந்துள்ளன. இதன் பொருள் "இஷ்டப்பட்டதைப் பெறுவது" என்பதாகும். (இஷ்டார்த்த ஆவிஷ்கரணம்) சப்த கல்பத்ருமம், "மதிப்புக்குரியோர் தங்கள் இளையோரிடத்தில் அன்பு மேலிட அவருக்கு இஷ்டமானதை அடைய உதவி செய்யும் சொற்களைச் சொல்வது ஆசீர்வாதமாகும்" என்று கூறுகிறது.

விவாஹத்திலும், இதர விழாக்களிலும் "சதமானம் பவதி" என்று நூறு ஆண்டுகள் வாழ வாழ்த்துப் பெறுதல் முக்கியமானதாகக் கருதப்படுகிறது.

ஆசீர்வாதம் புரிபவர் வயதிலே மூத்தவராக இருப்பதோடு அவரது இடம், அதிகாரம், ஞானம், உயர்ந்த குணங்கள் முக்கியமானதாக உள்ளன.

வாழ்த்துக்களை யார் வேண்டுமானாலும் சொல்லலாம். இளையவர்கள் கூட மூத்தவரை வெற்றி பெற வாழ்த்தலாம். ஆனால் ஆசிகள் பெரியோரிடமிருந்தும் தக்கோரிடமிருந்தும் தான் பெறப்படவேண்டும்.

ராமர் வனத்திற்குச் செல்லுமுன் தன் தாயார் கௌஸல்யா தேவியிடம் அனுமதியுடன் ஆசியும் வாங்கச் செல்கிறார். மிகுந்த துயரம் எய்திய கௌஸல்யா தேவி அவருக்கு அனுமதி தந்து ஆசி மழை பொழிகிறார்.

"ராமனே! நீ செல்லும் வழியெல்லாம் மங்களம் உண்டாகட்டும். உனக்கு எங்கும் வெற்றி கிடைக்கட்டும்" என்று சொல்லி ஆசீர்வதிக்கிறார். இதை வால்மீகி ஐந்து சுலோகங்களில் விவரிக்கிறார்.

இதே போல லட்சுமணன் சுமித்திரையிடம் சென்ற போது சுமித்திரை லட்சுமணன் தலையில் கையை வைத்து ஆசீர்வதிக்கிறார். "மகனே! நீ ஸ்ரீராமனுக்கு அனுசரணையாக எப்போதும் இரு. இதற்காகவே உன்னை வனம் செல்ல விடை கொடுக்கிறேன்" என்று கூறுகிறார். ராமனை தசரதன் போலப் பாவித்து பணிவிடை செய்யுமாறு அறிவுரை பகர்கிறார். இதையும் வால்மீகி ஐந்து சுலோகங்களில் விவரிக்கிறார்.

யுத்தம் முடிந்த பின்னர் சிவபிரான் சுவர்க்கத்தில் இருக்கும் தசரதனை ராமருக்குக் காண்பிக்கவே தசரதனை ராமர் வணங்குகிறார்.

தசரதன், "எனது பிரதிக்ஞையை நீ பூர்த்தி செய்துவிட்டாய். ராவணனைக் கொன்று தேவர்களையும்

சந்தோஷமடையச் செய்துவிட்டாய். புகழ் பெற்றுவிட்டாய். இனி சகோதரர்களுடன் ராஜ்யத்தை ஆள்! தீர்க்க ஆயுளுடன் இரு!'' என்று ஆசீர்வதிக்கிறார்.

இப்படி மகாபாரதமும், ராமாயணமும் வலியுறுத்தும் ஒரு பேருண்மை – தந்தை, தாய், குரு, பெரியோர் இவர்களின் ஆசியை கிடைத்தற்கரிய பெரும்பேறாகக் கருதி அதை முயன்று பெற அவண்டும். அதுவே வெற்றிக்குத் தேவையான அனைத்தையும் பெற்றுத் தரும்!

பள்ளித் தேர்வு, வேலைக்கான நேர்முக பேட்டிக்குச் செல்லல், விவாக முகூர்த்தம் – இப்படி எந்த முக்கிய நிகழ்ச்சியாக இருந்தாலும் பெரியோரின் ஆசி ஒரு கவசம் போல இருந்து இடர்கள் வராமல் தடுத்து ரட்சித்து வெற்றியை உறுதி செய்கிறது!

இதிகாசங்கள் உணர்த்தும் முக்கியப் படிப்பினைகளில் இது முக்கியமான ஒன்று. ஆகவே பெரியோரின் நல்லாசிகளை முயன்று பெறுதல் வேண்டும்!

## மேலை நாட்டு விஞ்ஞானிகள் வியக்கும் தியான பலன்கள்

இந்திய யோகிகள் கூறும் தியானத்திற்கு ஆற்றல் உண்டா? பலன்கள் உண்டா? உண்டு எனில் அவற்றால் ஏற்படும் நன்மைகள் என்னென்ன என்பதை ஆராய, பல ஆண்டுகளாகவே மேலை நாட்டு விஞ்ஞானிகள் தங்களது நவீன ஆராய்ச்சிக் கருவிகளுடன் களத்தில் இறங்கி

உள்ளனர். முடிவுகள், அவர்களை மட்டும் பிரமிப்பில் ஆழ்த்தவில்லை, நம்மையும் சேர்த்து வியக்க வைக்கிறது!



## உயிருடன் குழிக்குள் புதைந்த யோகி!

தியானத்தின் ஆற்றலைப் பரிசோதிக்க தன்னை அனுமதித்த யோகி ஒருவர் "Pit Burial" என்று கூறப்படும் உயிருடன் குழிக்குள் காற்றுப் புக முடியாத பெட்டியில் (Air Tight Box) ஓரிரண்டு நாட்கள் அடைத்து வைத்து சோதனை நடத்த ஒப்புக் கொண்டார். மிக அதிக நேரம் அறிவியல் சோதனைப்படி நடந்த "குழிக்குள் புதைந்து கிடக்கும்" சோதனையில் அறுபத்திரண்டு மணி நேரம் அவரால் உயிருடன் இருந்து வெளியே வர முடிந்தது! வகீல் என்பவர் நடத்திய இந்தப் பரிசோதனையால் அதிர்ந்து ஆச்சர்யப்பட்டுப் போன இந்திய அரசாங்கம் இந்திய முறையிலான மருத்துவக் கலையை ஆய்வு செய்ய முடிவு செய்து ஒரு குழுவையே அமைத்தது!

இன்னொரு சோதனையில் ஒரு யோகா ஆசிரியர் எரியும் மெழுகுவர்த்தியுடன் காற்றுப்புகமுடியாத ஒரு பெட்டிக்குள் போனார். மூன்ற மணி நேரமே மெழுகுவர்த்தி எரிந்த நிலையில், அவர் மேலும் ஐந்து மணி நேரம் பெட்டிக்குள் இருந்ததை விஞ்ஞானிகள் திகைப்புடன் பார்த்தனர்.

இவரே இன்னொரு சோதனைக்கும் உள்ளானார். அதில் பத்து மணி நேரம் பெட்டிக்குள் இருந்தார். அவரது ஆக்சிஜன் உள்ளிழுப்பு 40 சதவிகிதமாகக் குறைந்திருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. சோதனையின் கடைசி நிமிடத்தில் அவர் சுவாசித்த காற்றில் ஆக்சிஜன் அளவு 15.8 சதவிகிதமாகவும், கார்பன் டை ஆக்ஸைடு 4.4 சதவிகிதமாகவும் இருந்தது. இன்னொரு சோதனையை நடத்திய விஞ்ஞானிகள் கார்பன் டை ஆக்ஸைடு 7 சதவிகித்த்தையும் ஆக்சிஜன் அளவு 12 சதவிகிதத்தையும் தாண்டாத வரை ஒருவர் உயிருடன் இருக்க முடியும் என்பதை ஆய்ந்து அறிந்தனர். இவற்றிற்கெல்லாம் என்ன காரணம்? தியானம் தான்!

இந்தச் சோதனை முடிவுகளையெல்லாம் கேட்டு வியந்து போன் இங்கிலாந்தின் "ஆர்மி ரிசர்ச் இன்ஸ்டியூட்", ஹூல் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பெர்னர் மற்றும் கனாலி ஆகியோரைக் கொண்டு 1986ம் வருடம் ஒரு தீவிர ஆராய்ச்சியைச் செய்யப் பணித்தது.

இந்தக் குழு தியானத்தின் பலனாக வரும் ஹைபர் டென்ஷன் குறைப்பு மற்றும் இறுக்கம் குறைப்பு (Reducing Hypertension and Stress) ஆகியவற்றை ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டது.

குறைந்த ஆக்சிஜனே கிடைத்த போதிலும், குழிக்குள் உயிருடன் இருக்க, தியானமே காரணம் என்று இந்தக் குழு தனது ஆய்வறிக்கையில் கூறியதோடு ரத்தத்தில் ரசாயன

மாறுதல் உட்பட்ட உடலியல் மாறுதலையும் உளவியல் மாறுதலையும் தியானம் ஏற்படுத்துவதாகத் தெரிவித்தது.

## தியானம் என்றால் என்ன?

இதைத் தொடர்ந்து அமெரிக்க விஞ்ஞானிகள் களத்தில் குதித்தனர்.

மூளையில் தியானம் என்னென்ன மாறுதலை ஏற்படுத்துகிறது என்பதை அறிய ஹார்வர்ட் மெடிக்கல் ஸ்கூல் MRI டெக்னாலஜி எனப்படும் நவீன அறிவியல் நுட்பத்தைப் பயன்படுத்தியது. இந்த ஆய்வின் முடிவில் நம்மால் கட்டுப்படுத்த முடியாத ஜீரணம், ரத்த அழுத்தம் ஆகிய ஆட்டோனாமிக் நெர்வஸ் சிஸ்டத்தைக் கட்டுப்படுத்த தியானம் மூளையில் அதற்குரிய பகுதியில் தேவையானபடி தூண்டுகிறது என்பதை அறிந்து வியப்பில் ஆழ்ந்தனர்.

ராப் நாய்ர்ன் (ROB NAIRN) தனது "தியானம் என்றால் என்ன?" (What is Meditation) என்ற புத்தகத்தில் இப்படி விளக்குகிறார்: "அது ஒரு உயரிய, ஆற்றல் படைத்த மனநிலை! மற்ற சூழ்நிலை எப்படி இருந்தாலும் தன் நிலையில் இருக்கும்படி அது செய்கிறது" என்கிறார்.

அமைதியாக ஓரிடத்தில் உட்கார்ந்து தனது மூச்சுக்காற்று போவதைக் கவனித்தவாறே மெதுவாக சுவாசத்தை உள்ளிழுத்து, வெளியிடுவதுடன், ஒரு இஷ்டமான வார்த்தையையோ அல்லது மந்திரத்தையோ சொல்வதே தியானம்!

## ஹெர்பர்ட் பென்ஸனின் ஆய்வு முடிவுகள்

உடல் – மனம் ஆராய்ச்சியின் முன்னோடி என்று கூறப்படும் ஹெர்பர்ட் பென்ஸன் பிரபல உளவியல் பத்திரிகையான சைக்காலஜி டு டே (Psychology Today) 2001–மே–ஜூன் இதழில் அற்புதமான தன் வரலாறை எழுதியதோடு, தியானம் பற்றிய அறிவியல் ஆராய்ச்சிகளின் முடிவுகளையும் விளக்கி உள்ளார். அவர் கூறுவது:–

"முப்பது வருடங்களுக்கு முன்னர் நான் கார்டியாலஜிஸ்டாக என் வாழ்க்கையை ஆரம்பித்த போது மனம் – உடல் மருத்துவம் என்பதெல்லாம் இல்லை! ஹைபர் டென்ஷனையும், இறுக்கத்தையும் குறைக்க ஹார்வர்ட் மெடிக்கல் ஸ்கூலில் குரங்குகளின் மீது சோதனைகளை நடத்த ஆரம்பித்தேன். அந்த நேரத்தில் ஆழ்நிலை தியானம் கற்பித்து வந்த மகரிஷி மகேஷ்யோகியால், பயிற்றுவிக்கப்பட்ட பலர் தங்கள் மீது சோதனை நடத்துமாறு கூறி முன் வந்தனர்".

விளைவு–தியானத்தின் பலன்களைப் பற்றிய ஏராளமான விவரங்கள் அவர் சேர்த்து விட்டார். அமெரிக்காவின் ஆட்கொல்லி நோயான ஹார்ட் அட்டாக் நோய் வராமல் தடுப்பதோடு உடலின் வலியைக் குறைத்தல், நோய்த் தடுப்பு சக்தியை அதிகமாக்கல் ஆகியன உட்பட்ட ஏராளமான நன்மைகளைத் தியானம் தருவதை அவர் அதிகாரபூர்வமாக எடுத்துரைக்கிறார்.'

அடுத்த ஆராய்ச்சி முடிவு ஒன்றை வெளியிட்ட 'ஸ்ட்ரோக்' என்ற பத்திரிகை, "60 ஆப்பிரிக்க – அமெரிக்கர்கள் ஆர்ட்டிரிஸ் நோயால் பாதிக்கப்பட்டவர்கள் தியானம் செய்ய ஆரம்பித்தனர். அவர்களின் ஆர்ட்டிரிஸ் உறையின் கனம் மிகக் குறைந்தது" என்றது.

இன்னொரு ஆய்வை மேற்கொண்ட சைக்கோஸ்மாடிக் மெடிசின் பத்திரிகை 'தொண்ணூறு கான்ஸர் நோயாளிகள் தியாணம் செய்ய ஆரம்பித்தனர். ஏழு வாரங்களுக்குப் பின்னர் மனக்குழப்பம், கவலை, கோபம் முற்றிலுமாகக் குறைந்து விட்டது என்று அவர்கள் குறிப்பிட்டனர்' என்று ஆய்வு முடிவை வெளியிட்டது.

## பதஞ்சலி காட்டும் வழி

'யோக சூத்ரத்தை' எழுதிய பதஞ்சலி முனிவர் சூரியன், சந்திரனை தியானம் செய்வோருக்கு விண்வெளி பற்றிய சகல ஞானமும் உண்டாகும் என்றும், உடல் பாகங்களை தியானம் செய்வோருக்கு அதன் அமைப்பு தெரியும் என்றும், தொண்டைக்குழியை தியானம் செய்வோருக்கு பசி, தாகம் எடுக்காது என்றும், நாடித்துடிப்பு, இதயத்துடிப்பு, சுவாசம் இவற்றை தியானம் செய்வோரக்கு அதைத் தன் விருப்பத்திற்கு ஏற்றபடி மாற்றும் ஆற்றல் உருவாகும் என்றும் புலன்களின் மூலத்தைத் தியானம் செய்வோருக்கு ருசி, வாசனை, தொடுதல், கேட்டல், காணல் ஆகியவற்றில் பல்வேறு சக்திகள் ஏற்படும் என்றும் நுட்பமான விவரங்களைக் கூறுகிறார். யோகிகளால்

நிரூபிக்கப்பட்ட இந்த உண்மைகளை விஞ்ஞானம் ஆராய ஆரம்பித்திருக்கிறது.

### முடிவான பயன்

என்றாலும் தியானத்தின் இறுதியான பயன் தொலை தூரப் பார்வை, உடலைச் சுருக்குதல், உடலைப் பெருக்குதல், கூடுவிட்டுக் கூடு பாய்தல் போன்ற சித்திகள் இல்லை என்றும், தியானம் மூலம் இறைவனை உணர்தலே ஒரு உண்மையான யோகியின் கடமை என்றும் அவர் கூறுகிறார். இதையே கீதையில் கிருஷ்ண பரமாத்மா வலியுறுத்துகிறார். புலன்கள் வழியே தியானத்தை ஆராயும் அறிவியல் விஞ்ஞானிகள் இந்த முடிவையே சற்று கால தாமதம் ஆனாலும் அடைவர் என்பதில் ஐயமில்லை.

## தற்செயலா? இறைவன் விளையாட்டா?

2001 ஆம் ஆண்டு ஒரு நாள் இங்கிலாந்தில் உள்ள ப்ளர்டன் என்னுமிடத்திலிருந்து பத்து வயதுச் சிறுமியான லாரா பக்ஸ்டன் தனது பெயரையும் முகவரியையும் எழுதி ஹீலியம் பலூனில் மாட்டிப் பறக்கவிட்டார். நீல வானத்தில் மெதுவாகப் பறந்த பலூன் 140 மைல் தூரம் பறந்து வில்ட்ஷைரில் உள்ள ஒரு தோட்டத்தில் வந்து இறங்கியது. அதைக் கண்டு எடுத்த சிறுமி அதில் மாட்டி இருந்த பெயரைப் பார்த்துத் திகைத்தாள். ஏனெனில் அவள் பெயரும் லாரா பக்ஸ்டன். அவள் வயதும் பத்து தான்!

இன்னொரு சம்பவம்! கலிபோர்னியாவில் உள்ள தனது வீட்டைப் பூட்டிய பெண்மணியான வில்லர்ட் லோவெல் 'ஓ'வென்று அலறினாள். அவளது சாவி தொலைந்து விட்டது. வீட்டிற்குள் எப்படிப் போவது? திகைத்துப் போயிருந்த அவளிடம் அப்போது வந்த தபால்காரர் ஒரு லெட்டரைக் கொடுத்தார். அதைப் பிரித்துப் பார்த்த வில்லர்ட் லோவெல் அதற்குள்ளிருந்த வீட்டின் இன்னொரு சாவியை நம்ப முடியாமல் எடுத்தார். சாவியுடன் இருந்த கடிதத்தில் அவரது சகோதரர் வாட்ஸன் அங்கே தங்கி இருந்த சமயம் உபயோகித்து வந்த மறுசாவியைத் தவறுதலாக எடுத்துக் கொண்டுவந்து விட்டதாகவும் அதைத் திருப்பி அனுப்புவதாகவும் எழுதி இருந்தார்.

இன்னொரு சம்பவம்! ஆல்ப்ரட் ஸ்மித் என்ற வியாபாரி டெக்ஸாஸிலுள்ள தனது வீட்டை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தார். வழியில் ஆலன் பால்பி என்ற மோட்டார் சைக்கிள் ரோந்துக்காரர் ஒரு லாரியுடன் மோதிக் கால் ஒடிந்து ரத்தம் ஒழுக அடிபட்டுக் கிடந்ததைப் பார்த்தார். உடனே தனது டையைக் கழற்றி முதல் உதவிக் கட்டுப் போட்டு ஆலனை மருத்துவ மனையில் சேர்த்தார் ஸ்மித். சரியான நேரத்தில் செய்த உதவியால் ஆலன் உயிர் பிழைத்தார். ஐந்து வருடங்கள் உருண்டு ஓடின. ஒரு நாள் இரவு போலீஸ் ரோந்துக்காரரான ஆலன் வழக்கம் போலத் தன் ரோந்துப் பணியில் ஈடுபட்டிருந்த போது கார் ஒன்று மரத்தில் மோதி இருக்கும் இடத்திற்கு வருமாறு அவசரமாக் அழைக்கப்பட்டார். அங்கே விரைந்த ஆலன் மரம் மீது கார் மோதி இருந்ததைக் கண்டு காருக்குள் இருந்தவரைப்

பார்த்தார். தன்னை முன்பொரு நாள் காப்பாற்றிய அதே ஸ்மித் கால் ஒடிந்து இரத்தம் ஒழுக உணர்விழந்து இருந்ததைக் கண்டார். உடனே தனது முதல் உதவிப் பெட்டியிலிருந்து கட்டுப் போட உதவும் பாண்டேஜை எடுத்து அவரது காலில் கட்டி ரத்தம் ஒழுகுவதை நிறுத்தி அவரை மருத்துவ மனையில் சேர்த்தார். ஸ்மித்தும் உயிர் பிழைத்தார்.

ஆயிரக்கணக்கில் இப்படி நடக்கும் சம்பவங்கள் தற்செயலானவைதானா? அல்லது இதற்கு ஒரு ஆழமுள்ள அர்த்தம் உண்டா?

பிரபல நடிகரான ஆண்டனி ஹாப்கின்ஸ், 'தி கேர்ள்ஃப்ரம் பெட்ரோவ்கா' என்ற படத்தில் நடிப்பதற்காக அழைக்கப்பட்டார். அந்தப் படம் பிரபல நாவலாசிரியரான ஜார்ஜ் பெய்பர் என்பவரது நாவலைத் தழுவி எடுக்கப்பட இருந்தது. ஆகவே அதை வாங்க விரும்பிய ஆண்டனி லண்டன் முழுவதும் அலைந்து திரிந்தார். நாவல் கிடைக்கவில்லை. மனம் நொந்து போய் வீடு நோக்கித் திரும்ப எண்ணிய அவர் லண்டனில் உள்ள லீசெஸ்டர் அண்டர்கிரவுண்ட் ரயில் நிலையம் அடைந்தார். அங்கே கேட்பாரற்றுக் கிடந்த ஒரு பார்ஸலைப் பார்த்து அது ஒரு வெடிகுண்டாக இருக்குமோ என்று சந்தேகப் பட்டார். கவனத்துடன் மெதுவாக அதைப் பிரித்துப் பார்த்தார். உள்ளே இருந்தது அவர் தேடி அலைந்த 'தி கேர்ள் ஃப்ரம் பெட்ரோவ்கா' நாவல் தான்! என்ன வினோதம் என்று வியக்காமல் இருக்க முடியாது. ஆனால் சம்பவம் இன்னும் முடியவில்லை!

சில நாட்கள் கழித்து வியன்னா சென்ற ஆண்டனி அதை எழுதிய பெப்பரைச் சந்தித்து அதைத் தேடி அலைந்ததையும் லண்டனில் எதிர்பாராத விதமாக ரயில் நிலையத்தில் அது கிடைத்ததையும் கூறி நாவலை அவரிடம் தந்தார். அதை வாங்கிய நாவலாசிரியர் திகைத்தார். அது தனக்கே சொந்தமான பிரத்யேகக் காப்பி என்று சுறிய பெய்பர் அதில் ஒவ்வொரு பக்கத்திலும் ஆங்காங்கே தான் எழுதி இருந்த குறிப்புகளைச் சுட்டிக் காட்டினார். லண்டனில் இரண்டு வருடங்களுக்கு முன்னர் காரில் சென்று கொண்டிருந்த சமயம் காணாமல் போன புத்தகம் அது என்று அவர் தெரிவித்தார்.

ஏராளமான சம்பவங்கள் இது போல ஆயிரக்கணக்கானோருக்கு அன்றாடம் நிகழ்ந்து கொண்டேதான் இருக்கின்றன! ஜப்பானில் ஒரு ஆடையை அணிய முயன்ற மூன்று சகோதரிகள் அகால மரணமடைந்தனர். அந்த ஆடையை அதிர்ஷ்டமில்லாதது என்று எண்ணிய மதகுரு ஒருவர் தீயிட்டு அதைக் கொளுத்த எண்ணினார். மதகுரு ஆடையைக் கொளுத்திய போது ஒரு பெருங்காற்று ஆடையை அப்படியே தூக்கிச் சென்றது. ஆங்காங்கே அது பட்டு ஏற்பட்ட தீ பரவி டோக்கியோ நகரத்தில் முக்கால் பகுதி நாசமானது. 300 கோவில்கள், 500 அரண்மனைகள், 9000 கடைகள், 61 பாலங்கள், ஒரு லட்சம் பேர் அழிந்து பெருந்தீயில் நாசமாயினர். (1657 பிப்ரவரி மாதம் நடந்த நிகழ்ச்சி இது) ஒரு சிறு துணி தான் இதற்குக் காரணமா அல்லது துணி ரூபத்தில் தீவினை ஏவி விடப்பட்டதா?

எனக்கு இது ராசி இல்லை என்று அனைவரும் தினமும் சொல்கிறோமே அந்த ராசி என்பது யாரால் நிர்ணயிக்கப்படுகிறது? யார் இதற்குக் காரணம்? மிக பிரம்மாண்டமான பிரபஞ்ச அறிவு இதைச் செய்கிறதா? தேவதைகளின் வேலையா அல்லது அயல் கிரகங்களில் உள்ள அறிவு சார்ந்த இனம் செய்கின்ற வேலையா? விஞ்ஞானிகள் இப்படிப் பட்ட தற்செயல் சம்பவங்களால் பெரிதும் கவரப்பட்டு இதை வெகு காலமாக ஆராய்ந்து வருகின்றனர்.

பிரபல உளவியலாளர் ஜங் இதற்கு 'சிங்க்ரானிசிடி' (Synchronicity) என்று புதிய சொல்லை அளித்து விளக்க முயன்றார். இரண்டு சம்பவங்கள் தனித் தனியே நடந்தது போலத் தோன்றினாலும் பிரமிக்க வைக்கும் ஒரு தொடர்பைக் கொண்டு இருந்தால் அதற்கு ஒரு ஆழ்ந்த அர்த்தம் இருக்கிறது! அவரிடம் சிகிச்சை பெற வந்த ஒரு பெண்மணி ஆழ்ந்த கனவு நிலைக்குச் சென்று தான் பிறந்த இடத்தை வர்ணித்த போது அபூர்வமான ஒரு வகை வண்டு அங்கே இருந்ததைக் குறிப்பிட்டார். அப்போது ஜன்னல் மீது ஏதோ ஒன்று மோதிக் கொண்டே இருந்ததைக் கவனித்த ஜங் ஜன்னலைத் திறந்து பார்த்தார். அந்தப் பெண்மணி வர்ணித்துக் கொண்டிருந்த காணக் கிடைக்காத அதே வகை ஆபூர்வ வண்டு ஜன்னலை மோதித் திறக்க வைத்ததை அவர் பார்த்துப் பிரமித்தார். இந்த அற்புதங்கள் எப்படி நடக்கின்றன? அவரும் அவரைத் தொடர்ந்து ஏராளமான விஞ்ஞானிகளும் இதை ஆராய ஆரம்பித்தனர்.

ஆனால் கணித இயல் நிபுணர்களோ இதில் ஆச்சரியப்பட ஒன்றும் இல்லை என்கின்றனர். என்னுடைய பிறந்த நாளே தான் இவருக்கும் என்று பிரமிப்படைய வைக்கும் ஒரு சம்பவம் கணிதவியல்படி ஒரு அறையில் இருபத்திமூன்று பேர் இருந்தாலே (365 க்கு ஒன்று என்ற விகிதத்தில் இருக்கும்) இந்த அபூர்வம் நடக்கப் போதுமானது என்கின்றனர். 'தியரி ஆஃப் ப்ராபபலிடி' என்ற கணிதப்பிரிவை நன்கு படிக்குமாறு இவர்கள் கூறுவது வழக்கம்.

ஆனால் எல்லாமே இந்த ப்ராபபலிடி கொள்கையில் அடங்குவதில்லை என்பதை அனைவரும் அறிவர். உதாரணமாக 1961 ம் ஆண்டு பிரிட்டிஷ் ரயில்வே நிர்வாகத்திற்கு ஒரு போன் வந்தது. ஒரு பெண்மணி 47216 என்ற நம்பரைக் கொண்ட எஞ்ஜின் ஒரு பெரும் ரயில் விபத்தில் சிக்கப் போவதாகத் தான் கனவு கண்டதாகவும் ஆகவே அந்த நம்பர் உள்ள எஞ்ஜின் இருந்தால் அதை இயக்க வேண்டாம் என்றும் வேண்டிக் கொண்டார். இரண்டு வருடங்கள் கழிந்தன! அவர் விவரித்தபடியே ஒரு விபத்து நேர்ந்தது. ஆனால் அந்த விபத்திற்குள்ளான எஞ்சினின் நம்பர் 47299. ஆனால் அராய்ச்சியாளர் ஒருவர் இது எஞ்சினின் நிஜமான நம்பர் இல்லை என்பதைக் கண்டுபிடித்தார். பெண்மணியின் போன் பேச்சால் பயந்து போன பிரிட்டிஷ் ரயில் நிர்வாகம் அந்த விபத்தைத் தவிர்க்க எண்ணி 47216 என்ற எஞ்ஜினுக்குப் புதிய நம்பரை அதாவது 47299 ஐ வழங்கியது! நம்பரை மாற்றியதால் மட்டும் நிகழ இருந்த விபத்தைத் தவிர்க்க முடியவில்லை. ஆகவே

தற்செயல் போலத் தோன்றும் சம்பவங்கள் காரண – காரியத் தொடர்பு இல்லாமல் இல்லை என்பதும் அதை இயக்குவிக்கும் அறிவு பேரறிவு என்றும் ஆராய்ந்தால் புலப்படும்.

கோடிக்கணக்கான மனிதருக்கு நடக்கும் பல கோடி கோடிச் சம்பவங்களை ஒரு வரைபடத்தால் இணைத்துப் பார்த்தால் குறுக்கும் நெடுக்குமாக எத்தனை கோடி இணைப்புகளைப் போட வேண்டி இருக்கும்? அந்த வரைபடம் எவ்வளவு பிரம்மாண்டமானதாகவும், சிக்கல் உள்ளதாகவும் இருக்கும்? நினைக்கவே பிரமிப்பாக இருக்கிறது! கோடானு கோடி இணைப்புகளைக் கொடுத்தவன் யார்? இறைவனா? அவனது விளையாடல்தானா இது?

வினை வினைத்தவன் வினை அறுப்பான் என்பதை, நல்ல செயல்களும் தீய செயல்களும், ஆயிரக்கணக்கான பசுக்கள் உள்ள மந்தையில் எப்படிக் கன்றுக் குட்டி தவறாது தன் தாயைக் கண்டு சேர்கிறதோ அதேபோல உரியவனை உரிய காலத்தில் அடைந்து உரிய பலனைக் கொடுக்கும் என்று இவ்வாறு உதாரணத்துடன் உபநிடதங்கள் நன்கு விளக்குகின்றன! தற்செயல் போலத் தோன்றும் சம்பவங்களை மேலும் தீவிரமாக ஆராய அறிவியல் அறிஞர்கள் முயன்று வருகின்றனர். அதன் முடிவு நம் முன்னோர் கண்ட முடிவுடன் ஒத்துப் போகும் என்பதை சீக்கிரமே அறிந்து கொள்ளலாம்!

# மனமே எல்லாம்!



கனடா நாட்டைச் சேர்ந்த பிரபல உளவியலாளர் டாக்டர் ஆர்.எம்.பக் (R.M. Buck) என்பவர் வாழ்க்கையில் நடந்த சம்பவம் இது.

ஒருநாள் மாலை அவர் கவிஞர் வேர்ட்ஸ்வொர்த், ஷெல்லி, கீட்ஸ், ராபர்ட் ப்ரௌனிங், வால்ட் விட்மன் ஆகியோரின் கவிதைகளை மிக்க ஈடுபாட்டுடன் படித்துக் கொண்டிருந்தார். அவர் மனம் எல்லையற்ற ஆனந்தத்தில் மிதந்து கொண்டிருந்த நேரம். திடீரென்று தீ ஜுவாலை போன்ற மேகமூட்டத்தில் தான் சுற்றப்பட்டிருப்பது போல உணர்ந்தார். தனது நகரில் திடீரென்று தீ விபத்து ஏற்பட்டு விட்டதோ என்று முதலில் அவர் நினைத்தார். ஆனால் அடுத்த கணமே அந்தத் தீப்பிழம்பு அவர் உள்ளத்தில் எழுந்ததே என்று உணர்ந்தார். உடனடி ஆனந்தம், அற்புத உணர்வு இவற்றோடு ஞானமும் விவரிக்க ஒண்ணாத வகையில் ஏற்பட்டதை அவர் உணர்ந்தார். இதை அவரே தனது காஸ்மிக் கான்ஷியஸ்னெஸ் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

உயரிய நிலையை மனம் அடையும் போது அற்புத ஆன்மீக உணர்வுகள் எழும்பும் என்பதையே அவர் அனுபவித்த நிகழ்ச்சி உணர்த்துகிறது.

## ராமகிருஷ்ணரின் வாழ்வில்...

ராமகிருஷ்ணரின் மனம் ஆன்மீக உணர்ச்சியோடு ஒன்றும் போதெல்லாம் சர்வ சாதாரணமாக அவர் சமாதி நிலையை அடைந்து விடுவார்.

அவர் ஏதேனும் ஒரு தெய்வத்தைத் தரிசிக்க வேண்டும் என்று தீவிரமாக விரும்பினால் திடீரென்று அவர் உடலிலிருந்து ஒரு உருவம் வெளியேறும். அதுவே அவர்காண விரும்பிய தெய்வமாக இருக்கும். அவர் உடலிலேயே பிரபஞ்ச தேவதைகள் எல்லாம் இருந்ததையும், அவர் மனமே அவற்றைத் தேவையானபோது உருவாக்கி தரிசித்ததையும் அவர் வாழ்க்கையில் நடந்த இந்தச் சம்பவம் உணர்த்துகிறது.

## வசிஷ்டரும், ராமரும்

ஸ்ரீராமர் தனது உள்ளத்தில் எழுந்த சந்தேகங்களை எல்லாம் குலகுரு வசிஷ்டரிடம் கேட்க, அவர் சந்தேக விளக்கம் தர அதுவே யோக வாசிஷ்டமாக மலர்ந்தது. அதில் வசிஷ்டர், "மனமே எல்லாம்" என்று வலியுறுத்துகிறார் "மனமே சம்சாரம்; அதுவே தளை" என்று கூறிய அவர், மனதின் அற்புதமான மூன்று நிலைகளை விவரிக்கிறார்.

மனம் விழிப்பு நிலையில் 'கோரம்' என்ற பயங்கர நிலையிலும், கனவு நிலையில் 'சாந்தம்' என்ற அமைதி நிலையிலும், ஆழ்ந்த உறக்கத்தில் 'முதம்' என்ற மழுங்கிய நிலையிலும் இருப்பதாகவும், இந்த மூன்று நிலைகளில் எந்த

ஒன்றிலும் இல்லாதபோது இறந்து படுவதாகவும் குறிப்பிடுகிறார்.

## அனைத்துப் பிரச்சினைகளும் தீர வழி

மனதை மிகமிகக் குளிர்ந்த நிலையில் வைத்திருந்தால் பிரபஞ்சமே பிரச்சினையின்றி குளிர்ந்திருக்கும் என்ற பெரிய ரகசியத்தை அவர் ராமருக்கு உணர்த்துகிறார். மகாகவி பாரதியார் யோகம், யாகம், மெய்ஞானம் இவற்றை நவீன முறையில் விளக்கிப் பாடுகையில்,

"ஊருக்கு உழைத்திடல் யோகம்
நலம் ஓங்கிடுமாறு வருந்துதல் யாகம்
போருக்கு நின்றிடும் போதும்
உளம் பொங்கல் இல்லாத அமைதி மெய்ஞானம்"
என்று பாடுகிறார்.

## மனமே எல்லாம்!

"மன ஏவ மனுஷ்ணாணாம் காரணம்
பந்த மோக்ஷயோஹோ"
– அம்ருத பிந்து உபநிடதம்

இந்த மனமே மனிதனின் பந்தத்திற்கும், மோக்ஷத்திற்கும் காரணம் என உபநிடதம் விளக்குகிறது. ஆகவே "எந்த செயலையும் உரிய முறையில் செய்து விட்டு அதன் பலனைப் பற்றி எண்ணமில்லாமல் இரு" என்று வசிஷ்டர் வலியுறுத்துகிறார்.

## வசிஷ்டர் வாக்கே கீதைவாக்கு

வசிஷ்டரிடம் ராமர் பெற்ற இந்த ஞானமே அவரது அடுத்த அவதாரமான கிருஷ்ணாவதாரத்தில் பகவத் கீதையில் "கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன!" என்ற வாக்காக மலர்கிறது.

பகவத் கீதையை இரண்டே வரிகளில் சுருக்கிய பாரதியார்,

"பக்தி பண்ணி பிழைக்கச் சொன்னான்
பலனை எண்ணாமல் உழைக்கச் சொன்னான்"
என்று பாமரனுக்கும் புரியும்படி விளக்கிவிட்டார்.

மூன்று வயதிலேயே "தோடுடைய செவியனை"ப் பார்த்த ஞானசம்பந்தர், ஏழு வயதிலேயே கந்தனைக் கண்ணாரக் கண்ட வள்ளலார், 23 வயதிலேயே கிறிஸ்டியன் கல்லூரியில் கணிதம் கற்பிக்கும் பேராசிரியராக இருந்தபோது, கிருஷ்ணர் என்றவுடனேயே ஆழ்ந்த சமாதி நிலைக்குச் சென்றுவிடும் சுவாமி ராமதீர்த்தர் என்று ஒரு நீண்ட பட்டியலையே உயரிய மனநிலையை அடைந்த பெரியாரின் பட்டியலைத் தொகுக்க நினைத்தால் தயாரிக்க வேண்டி வரும்.

## பூரண ஞானம் பொலிந்த நன்னாடு

இந்தப் பேரமைதி மேலைநாட்டு ஞானிகளிடமும், இயற்கை கவிஞர்களிடமும் இறங்கி இருக்கிறது என்பதால் வசிஷ்டர் போதித்த ஞானம், இடம், மொழி, நாடு, பால், வயது

என்ற பேதங்களை எல்லாம் தாண்டி உண்மையான ஞானம் என்பதையும் புரிந்துகொள்ள முடியும். மனம் பற்றிய மர்மங்களை எல்லாம் உலகிற்கு முழுவதுமாக விளக்கிய ஒரே நாடு பாரதம் என்பதையும், அதன் இலக்கியமே ஒப்புயர்வற்றது என்தையும் நாம் உணரும் போது பெரும் பிரமிப்பு ஏற்படுகிறது!

## நமக்கு நாமே நல்ல நேரம் அறியலாம்!

### வியப்பூட்டும் இரு நகரங்கள்

அமெரிக்காவில் வாஷிங்டன் அருகே கிறிஸ்டல் சிடி (Crystal City) என்ற நகரும், நியூயார்க்கில் லெஃப்ராக் சிடியும் (Lefrak City) செயற்கை நகரங்களாக அமைந்துள்ளன.



இருபதினாயிரம் பேருக்கும் மேலாக வசிக்கக்கூடிய இந்த இரு நகரங்களின் உள்ளே வானளாவிய கட்டிடங்கள் உள்ளன. வேலை செய்வதற்கான இடம், சாமான்கள் வாங்குவதற்கான கடைகள், நீச்சல் குளம், சாப்பிட ஹோட்டல், பொழுது போக்க தியேட்டர் என்று வெளி உலகத் தொடர்பே இல்லாமல் வாழ்வதற்கான அனைத்தும் இந்த நகரங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

ஆனால் இங்கே சூரிய ஒளியையும், தென்றல் காற்றையும் அனுபவிக்கலாம்: ருதுக்களின் மாறுபாட்டை உணரலாம். ஆனால் இதுகூடத் தெரியாமல் முற்றிலும்

செயற்கை நகரம் அமைக்கப்பட்டால் அங்கே மனிதன் வாழ முடியுமா? அப்போது அவனுக்கு ஒரு நாள் என்பது இருபத்தி நான்கு மணி நேரம் கொண்டதாகத்தான் இருக்குமா? பகல் பன்னிரண்டு மணி நேரம், இரவு பன்னிரண்டு மணி நேரம் என்பதை மாற்றி இஷ்டப்படி பகல் நேரத்தையும் இரவு நேரத்தையும் அவனால் நீட்டிக்கவோ சுருக்கவோ முடியுமா? இதை ஆராயப் புகுந்தனர் விஞ்ஞானிகள்! அவர்கள் அதிசய உண்மைகளைக் கண்டறிந்தனர்!

## ஹால்பெர்க்கின் ஆய்வு

மின்னசோடா பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டாக்டர் ஃப்ரான்ஸ் ஹால்பெர்க் ஏராளமான சோதனைகளை நடத்தினார். எலிகளை மூன்று பிரிவுகளாகப் பிரித்தார். முதல் பிரிவிற்கு 12 மணி நேரம் பகல், 12 மணி நேரம் இரவு என்றும் அடுத்த பிரிவிற்கு முதல் பிரிவின் பகல் நேரம் இரவு நேரமாக இருக்கும்படியும் முதல் பிரிவின் இரவு நேரம் பகல் நேரமாக இருக்கும்படியும் மாற்றினார். மூன்றாவது பிரிவிற்கோ ஒரு நாள் என்பது எட்டு மணி நேரம் கொண்டதாக அமைத்தார். இப்படி எலிகளை ஒளிக்கும் இருளுக்கும் உட்படுத்தி அவர் செய்த சோதனைகளின் முடிவுகள் அவரை மேலும் பல ஆராய்ச்சிகளைச் செய்யத் தூண்டின.

விளைவு, மனிதன் உடலில் ஒரு அற்புதமான ரிதம் – லயம் இருக்கிறது என்பதையும், இது 24 மணி நேரம் அடிப்படையில் அமைந்திருப்பதையும் அவர் கண்டறிந்தார்.

## மலர் கடிகாரம்

மனிதர்கள், மிருகங்கள் உட்பட்ட அனைத்து உயிரினங்களும் ஒரு லயத்துடன்இயங்குகின்றன. அது மட்டுமல்ல, மலர்கள் மலர்வது கூட இந்த ரிதத்தின் அடிப்படையிலேயே!

18ம் நூற்றாண்டின் இயற்கை ஆய்வாளரான ஸ்வீடனைச் சேர்ந்த கர்லோலஸ் லின்னாஸ் (Carlolus Linnaeus) வெவ்வேறு மலர்கள் வெவ்வேறு நேரங்களில் தங்கள் இதழ்களைத் திறந்து மலர்வதைப் பார்த்தார். இதனால் அவர் ஒரு மலர் கடிகாரத்தையே அமைத்தார். ஒரு மலர் மலர்வதைப் பார்த்து அவரால் துல்லியமாக நேரத்தைச் சொல்ல முடிந்தது. அது மட்டுமல்ல, அது எந்த ருது (season) என்பதையும் அவரால் சரியாகச் சொல்ல முடிந்தது! தோட்டத்தை ஒரு முறை பார்த்தால் போதும், உலகின் லயம் தெரிய வந்துவிடும்!

## மனிதனின் பயோரிதம்

இந்த இயற்கை அமைப்பு மனிதனிடமும் உள்ளது. சூரியன் ஏற்படுத்தும் பகல், இரவை ஒட்டிய 24 மணி நேரம் அவனிடம் ஒரு அற்புதமான லயத்தை ஏற்படுத்துகிறது.

இந்த ரிதத்தை விஞ்ஞானிகள் இன்னும் துல்லியமாக ஆராய ஆரம்பித்தனர். மனித மூளையின் இடப்பாகம் மற்றும் வலப்பாகம் இடையே அமைந்துள்ள "Pineal Gland" என்ற பகுதி சூரிய ஒளியினால் பாதிப்பை அடைகிறது

என்பதை அவர்கள் கண்டறிந்தனர்.

இந்திய யோகிகள் இந்தப் பகுதியை மூன்றாவது கண் என்று குறிப்பிடுவதையும், அது எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை அவர்கள் உணர்ந்திருந்ததையும் கே கேயர் ல்யூஸ் என்ற ஆராய்ச்சியாளர் தனது பாடி டைம் (Body Time) என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

## மனோநிலை மாறுபாடு

எதிர்வீட்டு "சந்தோஷ்" சில சமயம் சந்தோஷமாக இல்லாமல் "அப்செட்" ஆகி இருப்பதையும் அடுத்தவீட்டு சாந்தி அமைதி இன்றி அடிக்கடி மனோநிலை மாறுபட்டு எரிச்சலுடன் கத்துவதையும் பார்த்து அவர்கள் மனோநிலை மாறுபட்டிருக்கிறார்கள் (மூடில் இல்லை) (mood swing) என்று சொல்வதைக் கேள்விப்படுகிறோம்.

உண்மையில் இந்த "MOOD SWING" மனோநிலை மாறுபாடு – அலவலகச் சண்டை முதல் வீட்டில் குழப்பம் உருவாவது வரை அனைத்திற்கும் காரணமாக அமைந்து விடுகிறது.

இதை மாற்ற நமது உடலில் உள்ள ரிதத்தை நமக்கு நாமே ஆராய்வதுதான்!

## உச்சபட்சச் செயல்பாடு

உளவியல் பேராசிரியரான ராபர்ட் தாயர் (Robert Thayer), "நமக்கு ஏற்பட்ட சில நிகழ்ச்சிகளினால் தான்

நமது மனோநிலை மாறுகிறது என்று நாம் நினைக்கிறோம். உண்மை அதுவல்ல! நம் உடலில் இயற்கையாக ஏற்படும் மாறுபாட்டினாலேயே நமது மனோநிலை – மூட் – மாறுகிறது'' என்று கூறுகிறார்.

இன்னொரு உளவியலாளரான டேவிட் வாட்ஸன் 125 பேரைப் பல நாட்கள் ஆராய்ந்து, ''நமது உடலின் உஷ்ணநிலை ஒரு நாளில் எப்போது அதிகமாக இருக்கிறதோ அப்போது நாம் உச்சபட்ச செயல்பாட்டுடன் (Peak Performance) இயங்குகிறோம்'' என்கிறார்.

அதாவது உடலின் உஷ்ணம் அதிகமாக இருக்கும்போது நாம் மிக்க மகிழ்ச்சியுடனும் ஆற்றல் வாய்ந்தவராகவும் இருக்கிறோம் என்கிறார் அவர். சாதாரணமாக பெரும்பாலானோருக்கு முற்பகலில் ஆற்றல் அதிகமாக இருக்கிறது. ஆகவே முற்பகலில் முக்கிய வேலைகளை முடித்துவிட்டுப் பிற்பகல் கடைசியில் மற்றவருடன் அரட்டை, உல்லாசப் பேச்சு என அதிகம் ஆற்றல் தேவைப்படாத செயல்களைச் செய்ய வேண்டும் என்று அவர் அறிவுறுத்துகிறார்.

ஒரு நாட்குறிப்பில் நமது உடல் உஷ்ணத்தை அவ்வப்பொழுது சில நாட்கள் குறிப்பதன் மூலம் நமது முழு ஆற்றல் செயல்படும் திறனை நாம் அறியலாம். அதாவது நமது நல்ல நேரத்தை நாமே அறிந்துகொள்ளலாம்!

## அலெக்ஸாண்டரும் புளியமரமும்

மாவீரன் அலெக்ஸாண்டர் இந்தியா மீது படை எடுத்து வந்தான். அப்போது அவனுடன் ஆண்ட்ரோஸ்தீனஸ் என்ற அறிஞரும் உடன் வந்தார். படையெடுப்பு சென்ற வழியிலெல்லாம் வளர்ந்திருந்த புளியமரங்களை அவர் கூர்ந்து கவனித்தார். அவற்றின் இலைகள் இரவிலே சுருங்கி மரம் தூங்குவதையும், காலையில் இலைகள் விரிந்து மரம் விழிப்பதையும் பார்த்து ஆச்சரியப்பட்டார். இயற்கை லயம் பற்றிய அறிவை அவர் அடைந்தார்! 24 மணி நேரம் என்பது மனிதனுக்கு மட்டுமல்ல, பறவைகளுக்கும், விலங்குகளுக்கும், தாவரங்களுக்கும் இருக்கிறது! இதை சார்லஸ் டார்வின் உட்பட்ட ஏராளமான விஞ்ஞானிகள் கண்டு ஆச்சரியத்தோடு ஆராய்ந்தனர்!

## வேதமும் விஞ்ஞானமும்

இயற்கையாகவே உடலில் அமைந்துள்ள இந்த லயம் "Circadian Rhythm" (ஸர்காடியன் ரிதம்) என்று அழைக்கப்படுகிறது.

"Circa" என்ற லத்தீன் சொல் சுமார் என்ற பொருளையும் "Dies" என்ற சொல் நாள் என்ற பொருளையும் தந்து ஸர்காடியன் ரிதம் என்ற சொற்றொடருக்கு சுமார் ஒரு நாள் – அதாவது 24 மணி நேரம் – என்ற பொருளைத் தருகிறது. இந்த உடல் லயமே நமது வெற்றிக்குக் காரணமாகிறது!

இதை அறிந்துவிட்டால் நமது நல்ல நேரத்தை நாமே கணிக்கலாம்! உருவாக்கிக் கொள்ளலாம்!

அதாவது நமது வெற்றியை நாமே உருவாக்கிக் கொள்ளலாம்! நம்முடைய வேதங்கள் பிரபஞ்சத்தில் இருக்கின்ற அற்புதமான ஒழுங்கையும், லயத்தையும் பற்றி விரிவாகக் கூறுகின்றன. அந்த லய அதிர்வுகளை வேத ரிஷிகள் தியானம் மூலமாக உணர்ந்து அவற்றுடன் ஒருங்கிணைந்து செயலாற்ற வேண்டியதன் அவசியத்தை உணர்ந்து எந்தெந்தக் காரியங்களை எந்தெந்த நேரங்களில் தொடங்க வேண்டும் என்பதை விரிவாகக் குறிப்பிட்டுள்ளனர்.

இந்த ரிஷிகளின் முடிவை பயோரிதம் என்ற புதிய அறிவியல் பிரிவு அங்கீகரிப்பதோடு, இந்த உடல் லயமே நமது நல்ல நேரத்தை அமைக்கிறது என்பதை உறுதிப்படுத்துகிறது.

"சந்துஷ்ட சததம் யோகி" – யோகி ஒருவன் எப்போதும் சந்தோஷமாக இருப்பான் என்று கீதையில் கிருஷ்ண பரமாத்மா கூறி அருளுகிறார். உடல் லயத்தை இயற்கை லயத்துடன் ஒருங்கிணைப்பதில் வெற்றி பெறும் ஒருவர் எப்போதும் மகிழ்ச்சியாக இருப்பார் என்பதை வேதமும் விஞ்ஞானமும் உறுதிப்படுத்துகின்றன!

# உலகம் வியக்கும் உயர்ந்த வேத சிந்தனைகள்



ரிக் வேதத்தில் ஒரு மந்திரம் "ஆ நோ பத்ராஹா க்ரதோவோ யந்து விஸ்வதஹ" என்று பிரகடனம் செய்கிறது!, இதன் பொருள்: "எல்லாத் திசைகளிலிருந்தும் உயர்ந்த சிந்தனைகள் எங்களை வந்தடையட்டும்" என்பதே! உலகின் உயர்ந்த சிந்தனைகளையெல்லாம் உவந்து வரவேற்கும் வேத ரிஷிகளின் சிந்தனைகள் எவ்வளவு உயர்ந்ததாக இருக்க வேண்டும்?

இந்தியர்களாகிய நாம் மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் பேசாதபடி வெளிநாட்டோர் இந்த சிந்தனைகளை இனம் கண்டு கொண்டு புகழ்ந்து பேசுகின்றனர்!

ஆன்ம வளர்ச்சியாகட்டும், உலகியல் வளர்ச்சியாகட்டும், அறிவியல் கொள்கைகளாகட்டும், சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் போன்ற நவீன கோஷங்களாகட்டும் – இவை அனைத்துமே வேத சிந்தனைகளில் வெளிப்படுவதோடு அதற்கும் மேற்பட்ட எல்லைகளையும் தொடுகின்றன!

இதை மேலை நாட்டு அறிஞர்களான மாக்ஸ்முல்லர், சர் ஜான் உட்ராஃப், எழுத்தாளர் பால் பிரண்டன், விஞ்ஞானி ஷோப்பன் ஹோவர், அன்னிபெஸண்ட், லெட் பீட்டர், கர்னல் ஆல்காட், உலக சரித்திரம் எழுதிய ஆர்னால்ட் டாய்ன்பி, எமர்சன் உட்பட்ட நூற்றுக்கணக்கான அறிஞர்கள் வியப்புடன் கூறி உள்ளனர்!

## இந்தியாவையே சுட்டிக் காட்டுவேன்

"வானத்தின் கீழ், எந்த மனிதர்களின் மனம், தமக்கு அரிதாகக் கொடுக்கப்பட்ட கொடைகளை முழுவதுமாக வளர்ச்சியுறச் செய்திருக்கிறது; வாழ்வின் பெரிய பிரச்னைகளை ஆய்ந்திருக்கிறது; அது மட்டுமின்றி, பிளேடோ, காண்ட் போன்றோரை நன்கு பயின்றவர்களைக் கூடக் கவரும் வகையில் அந்த பிரச்னைகளில் சிலவற்றிற்குத் தீர்வைக் கண்டிருக்கிறது என்று என்னைக் கேட்டால், நான் இந்தியாவையே சுட்டிக் காட்டுவேன். இங்கே ஐரோப்பாவில் கிரேக்க, ரோமானிய மற்றும் செமிடிக் இனமான யூத இனத்தின் சிந்தனைகளை மட்டும் பிரத்யேகமாக ஏற்றுக் கொண்டிருக்கிறோமோ அப்படிப்பட்ட நாம் நமது அக வாழ்விற்கு பரிபூரணமான, மிகப்பரந்த, பிரபஞ்சம் அளாவிய இன்னும் சொல்லப்போனால் நிஜமாகவே மனிதாபிமானமுள்ள ஒரு வாழ்க்கைக்காக – இந்த பூமியில் வாழும் வாழ்க்கை மட்டுமல்லாமல் இதற்கு அப்பால் என்றும் நிலைத்து வாழும் வாழ்க்கைக்குமாக –

எந்த இலக்கியத்திலிருந்து வேண்டிய திருத்தங்களைப் பெற முடியும் என்று என்னிடம் கேட்டால் மீண்டும் நான் இந்தியாவையே சுட்டிக்காட்டுவேன்'' – இவ்வாறு அழுத்தம் திருத்தமாக அறிஞர் மாக்ஸ்முல்லர் ''இந்தியா – வாட் இட் கேன் டீச் அஸ்'' என்ற தன் நூலில் கூறுகிறார்.

உலகப் பிரசித்தி பெற்ற எழுத்தாளர் பால் பிரண்டன். காஞ்சி பரமாசார்யரைச் சந்திக்க அவரால் ரமண மகரிஷியைச் சந்திக்குமாறு அருளாசி தரப்பட்டு, ரமணரால் ஈர்க்கப்பட்டு, ''ரமண பணியில்'' தன்னை முழுதுமாக அர்ப்பணித்துக் கொண்டார். அவர்தனது ''விஸ்டம் ஆஃப் தி ஓவர் செல்ப்' என்ற தமது நூலில், ஆழத்திலும், விரிந்திருக்கும் அகலத்திலும் தனக்கு ஒப்புமை இல்லாத புராதன பாரம்பரியம் மிக்க ஆன்மீக சிந்தனையை, தனது பழைய காலத்திலிருந்தே இந்தியா தக்க வைத்திருக்கிறது. ஆகவே இந்திய இளைஞர்கள் இதைத் தமது பிறப்புரிமையாக உரிமை கொண்டாட வேண்டும். இன்றைய யுகத்திற்கு ஏற்ப எவை தேவையோ எவை கடைபிடிக்கக் கூடியவையோ அவற்றைக் கொள்ள வேண்டும். மேலை நாட்டு வக்கிர சிந்தனையாலோ, அரிக்கப்பட்ருக்கும் நவீன உலகாயத வாதத்தாலோ மத மாச்சரியங்களினாலோ ஈர்க்கப்பட்டதை விடுத்து, தமது மிகச் சிறந்த சிந்தனையாளர்களின் வழிகாட்டுதலை நோக்கித் திரும்ப வேண்டும்'' என்கிறார்!

## உலக நலனே வேத சிந்தனை

சர்வே ஜனா சுகினோ பவந்து – அனைத்து மக்களும் சுகமாக வாழட்டும்!

லோகாஸ் ஸமஸ்தா சுகினோ பவந்து – அனைத்து உலகும் சுகம் பெறட்டும்!

– என்ற உலகளாவிய நலனே வேத சிந்தனையாகும்.

## யோக வாசிஷ்டம்

வேதத்தின் நுணுக்கமான கருத்துக்களை எளிதில் புரிந்து கொள்வதற்காக வால்மீகி முனிவர் ராமாயணத்தை உருவாக்கினார். இவரே இன்னும் அதி நுட்பமான கருத்துக்களை யோக வாசிஷ்டம் என்ற நூலில் தந்திருக்கிறார்.

விஷ்ணுவின் பத்து அவதாரங்களில் ஒரு அவதாரமான ராமனுக்கு வசிஷ்ட மகரிஷி செய்யும் உபதேசங்களே யோக வாசிஷ்டம்.

ராமருக்கும் வசிஷ்டருக்கும் நடக்கும் உரையாடல் பகுதியுடன் கூடிய இந்த சமஸ்கிருத நூலில் 32,000 பாடல்கள் உள்ளன.

அற்புதமான கதைகளையும் ஒப்புயர்வற்ற உவமைகளையும் ஆங்காங்கே கூறி வாழ்வின் சிக்கலான பிரச்சினைகளுக்கும் மனித குலம் விடை காணத் துடிக்கும் மர்மங்களுக்கும் புதிர்களுக்கும் சுலபமாக தீர்வுகளையும் விடைகளையும் இந்த நூல் தருகிறது!

இவ்வளவு பெரிய நூலில் உள்ள கருத்துக்களை கோடியில் ஒருவரே முழுதுமாகப் படித்து உணர முடியும். இதை உணர்ந்த காஷ்மீரத்தைச் சேர்ந்த அறிஞரான அபிநந்த பண்டிதர் என்பவர் இதிலிருந்து 6000 சுலோகங்களைத் தேர்வு செய்து "லகு யோக வாசிஷ்டம்' என்று இதன் சுருக்கிய வடிவை உருவாக்கினார். மூல நூலில் சொல்லப்பட்ட அனைத்துக் கருத்துகளையும் ஒன்று விடாமல் தருவதே இந்த நூலின் சிறப்பு.

இந்த ஆறாயிரம் பாடல்களையும் படிப்போர் மிகக் குறைவாகவே இருப்பர் என்ற கருத்தோடு யாரோ ஒரு அறிஞர் 230 பாடல்களைப் பத்து அத்தியாயங்களில் அடக்கி "யோக வாசிஷ்ட சாரம்" என்ற மிகச் சிறிய நூலை உருவாக்கினார். (இது திருவண்ணாமலை ரமணாசிரம வெளியீடாக வந்துள்ளது). திருவண்ணாமலையில் வாழ்ந்த மகரிஷி ரமணருக்கு மிகவும் பிடித்த நூல் "யோக வாசிஷ்டம்". அடிக்கடி இதிலிருந்து மேற்கோள் காட்டும் அவர், தனது "உள்ளது நாற்பது" என்ற நூலில் ஆறு யோக வாசிஷ்ட செய்யுள்களை இணைத்துள்ளார்.

வேத சிந்தனையின் அடிப்படைகளைக் கூறும் வசிஷ்டரின் இந்த நூலில் வரும் ஆயிரக்கணக்கான கருத்துகளை நவீன விஞ்ஞானிகளும், உளவியலாரும், பேரறிஞர்களும், உலக சிந்தனையாளர்களும் அப்படியே வரிக்கு வரி கூறுவது வியப்பைத் தரும்!

## நெருங்கி வரும் சிந்தனைகள்

மாதிரிக்காக சில நுட்பமான கருத்துகளைக் காணலாம்.

1. ஆகாயம், பூமி, காற்று, ஈதர், மலைகள், நதிகள், வெளி அனைத்துமே மனதின் பகுதியே! அவை பரந்து விரிந்துள்ளன!

வாசிஷ்டம் (V 56–35)

சுவர்க்கத்தின் பாடகர் குழுவாகட்டும், பூமியில் உள்ள நாற்காலி போன்ற மரச் சாமான்களாகட்டும், ஏன் ஒரே வார்த்தையில் சுருக்கமாகச் சொல்லப்போனால் பிரம்மாண்டமான உலகின் அனைத்துமே மனம் இல்லாமல் இல்லை!

–பெர்க்லி

2. நனவு நிலைக்கும் கனவு நிலைக்கும் வேறுபாடு இல்லை. ஒன்று நிலையாக இருப்பது ,இன்னொன்று அப்படி இல்லை என்பதைத் தவிர இந்த நிலைகளில் அனுபவிக்கும் அனுபவங்கள் எங்குமே சீரானவை.

வாசிஷ்டம் (IV 19–11)

நனவு நிலைக்கும் கனவு நிலைக்கும் அடிப்படை வேறுபாடு எதுவுமே இல்லை.

ஷுல்வர் (ஸ்டடீஸ் இன் ஹ்யூமானிஸம்)

3. மெய் (Reality) தனது எல்லா அம்சங்களுடன் பூரணமாக எல்லா இடத்திலும் எப்போதும் நிறைந்திருக்கிறது.

வாசிஷ்டம் (VI 13–28)

மேல் நிலையில் உள்ள எல்லா அதிர்வுகளும் (Vibrations) பிரபஞ்ச வெளியில் ஒவ்வொரு இடத்திலும் நிறைந்துள்ளது. –கிங்ஸ்வேண்ட் (பிஸிக்ஸ் ஆஃப் தி சீக்ரட் டாக்ட்ரின்)

4. மனமே சக்தி வாய்ந்தது. எதையும் ஆற்றும் வல்லமை படைத்தது.

வாசிஷ்டம் (III 91–16)

எண்ணமே அனைத்து ஆற்றலையும் கொண்டது! மணமே சக்தி வாய்ந்தது என்று நான் கூறுகிறேன்

– சார்லஸ் கில்பெர்ட் டேவிஸ் (தி பிலாஸபி ஆஃப் லைப்)

5. மனிதன் தன் விதியைத் தன் எண்ணத்தாலேயே நிர்ணயிக்கிறான். தனக்கு விதிக்கப்படாத விஷயங்களையும் அவனால் நடக்க வைக்க முடியும்!

வாசிஷ்டம் (V 24–28)

நல்லதோ கெட்டதோ ஒருவனின் விதி என்பது அவனாலேயே உருவாக்கப்படுவது! அவனாலேயே சம்பாதிக்கப்படுவது! மனிதன் அகத்திலும் புறத்திலும் தன்

வாழ்வைத் தானே அமைக்கிறான்; தன் விதியைத் தானே உருவாக்குகிறான்.

பால்பிரண்டன் (தி இன்னர் ரியாலிடி)

6. மனதின் வழிகள் ஆச்சரியமானவை! அடிக்கடி ஒரே எண்ணமானது பல மனிதர்கள் மனங்களிலும் தற்செயலாக எழுகிறது!

வாசிஷ்டம் (V 49–10)

பல பேருக்குத் தோன்றும் கனவு என்று சொல்லப்படும் 'கலெக்டிவ் ட்ரீம்ஸ்' என்ற சொற்றொடரின் பெயருக்கு ஏற்ப பல மனிதர்கள் தங்கள் மனங்களில் ஒரே சமயத்தில் ஒரே கனவு காண்கிறார்கள்!

– எட்மண்ட் காங்க்லின்

7. தங்கள் உறவினர்களைப் பிரிந்தவர்களுக்கு (இறந்தோர்க்கு) ஒரு நாள் மனிதக் கணக்கில் பூமியில் ஒரு வருடமாக கழிகிறது.

வாசிஷ்டம் (III 20–51)

இறந்தவர்களுக்கு காலமே இல்லாத உலகத்தில் பூமியில் கழிக்கப்படும் எழுபது வருடங்கள் ஒரு மாலை நேரம் போவது போலக் கழிக்கப்படுகிறது.

டெஸ்மாண்ட் (யூ கேன்ஸ்பீக் வித் யுவர் டெட்)

மாதிரிக்காக மேலே கொடுக்கப்பட்ட சிந்தனைகளை மேலை நாட்டு சிந்தனையாளர்கள் அப்படியே எதிரொலிப்பது வியப்பூட்டும் விஷயம்! மனித குல அறிவு வளர வளர, விஞ்ஞானததின் புதிய பரிமாணங்களான க்வான்டம் பிஸிக்ஸ் போன்ற கொள்கைகள் வெளிப்பட வெளிப்பட, வேத சிந்தனைகளை உலக அறிஞர்கள் நெருங்கி இணங்கி வருவதை தெள்ளத் தெளிவாக நமது இளைஞர்கள் புரிந்து கொள்ள வேண்டும்

## அறிவுச் சொத்து நமதே!

பால் பிரண்டன் சொல்வது போல, இவற்றை ஆய்ந்து கட்டிக் காப்பதோடு இவற்றிற்கு உரிமை கொண்டாடி இவற்றை நமது சொத்தாக பேடண்ட் எடுக்க வேண்டும். இல்லையேல் மஞ்சளைத் தனதாக பேடண்ட் உரிமை கொண்டாடும் மேலை நாடுகள் இந்தக் கருத்துக்களையும் தாங்களே அறிந்தது போல உரிமை கொண்டாடும் நிலை ஏற்பட்டு விடும்!

இதைப் புரிந்து கொண்டு இந்திய இளைஞர்கள் நமது அறிவுச் சொத்தைப் பேண வேண்டியது இன்றைய யுகத்தின் தலையாய கடமை.

# அறிவியல் வியக்கும் ஜோதிடம்



சூரிய மண்டலத்தில் உள்ள கிரகங்களிலேயே மிகப் பெரியது ஜூபிடர் எனப்படும் குரு கிரகம்.

பிறந்திருக்கும் ஒரு குழந்தையின் மீது அது ஏற்படுத்தும் ஈர்ப்புச் சக்தி அந்தக் குழந்தையின் அருகில் இருக்கும் நர்சின் ஈர்ப்புச் சக்தியை விட மிக மிகக்குறைவே என்று விஞ்ஞானிகள் கூறி, ஜோதிடம் பற்றிப் பேசுவோரை ஒரு மாதிரியாகப் பார்ப்பது வழக்கம்! கிரகங்களுக்கும் நமக்கும் சம்பந்தமே இல்லை; அவைகள் மனித வாழ்வில் குறிப்பிடத் தகுந்த மாற்றத்தை ஏற்படுத்தக் கூடும் என்பதை ஒப்புக் கொள்ளாத அவர்கள், ஜோதிடத்தைப் படிக்கவே கூடாது; அதை ஒரு பாடமாகவும் வைக்கக் கூடாது என்று இன்றளவும் வலியுறுத்தி வருகின்றனர்.

## பெர்சிசெய்மூர்

ஆனால் "இந்த ஈர்ப்புச்சக்தி ஒரு புறம் இருக்கட்டும். அதை விடச் சிக்கலான சக்திகள் இருக்கக் கூடாதா என்ன?" என்று விஞ்ஞானிகளில் ஒரு பிரிவினர் கேட்கின்றனர். இவர்களில் பிரிட்டிஷ் வானவியல் விஞ்ஞானி பெர்சி செய்மூர் "மறைமுகமாக சூரியனின்

காந்த மண்டலத்தைப் பாதித்து கிரகங்கள் அதன் விளைவுகளை ஏற்படுத்தலாமே'' என்கிறார்.

அறுபதுகளில் நாசாவில் (அமெரிக்க விண்வெளி ஆய்வு நிறுவனம்) ஆராய்ச்சி புரிந்த விஞ்ஞானிகள், கிரகங்கள் சூரியனுக்கு எதிரிலோ அல்லது ஒரே நேர் கோட்டிலோ இருக்கும் போது சூரிய காந்தப் புயல்கள் ஏற்படுகின்றன என்ற வியப்பூட்டும் உண்மையைக் கண்டறிந்தனர்.

இதை ஆதாரமாகக் காட்டி அவர் தனது சயிண்டிபிக் பேசிஸ் ஆஃப் அஸ்ட்ராலஜி என்ற நூலில், இந்தப் புயல்கள் சூரியனிலிருந்து வேகமாகச் செல்லும் துகள்களை ஏற்படுத்துவதோடு, பூமியின் காந்த மண்டலத்திலும் விளைவுகளை ஏற்படுத்துகின்றன என்றார். இது போன்ற விளைவுகளே பூமியில் மனிதர் பிறக்கும் போது அவர்களின் நரம்பு மண்டல அமைப்புகள் மற்றும் குணாதிசயங்களை ஏற்படுத்துகின்றன என்றார். ஆனால் சந்தேகக் கண்ணோடு ஜோதிடத்தை எப்போதுமே பார்க்கும் விஞ்ஞானிகள், கிரகங்கள் மனிதர் வாழ்வில் பாதிப்பை ஏற்படுத்தும் என்பதை உறுதிப்படுத்த ஒரு உண்மை கூட இல்லை என்று அடித்துக் கூறி மகிழ்கின்றனர்.

இந்த நிலையில்தான் விண்ணில் உள்ள கிரகங்களுக்கும் நட்சத்திரங்களுக்கும் நமக்கும் தொடர்பு உண்டு என்று பத்து காரணங்களை முன் வைத்து

விஞ்ஞானிகள் கூறுவதோடு, மனித குல சரித்திரமே இவற்றால் அனேக மாறுதல்களை அடைந்துள்ளது; அடைந்து வருகிறது என்று கூறி நம்மை வியப்பில் ஆழ்த்து கின்றனர், இப்போது!

அறிவியல் வட்டாரத்தை ஒரு உலுக்கு உலுக்கி வரும் இந்தக் காரணங்கள் என்னென்ன?

## 1. மழையும் விண்வெளிக் கதிர்களும்

விண்வெளி சாடிலைட் மூலம் கிடைத்த விவரங்களை ஆராயும் சசெக்ஸ் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டாக்டர் டொமினிக் க்னிவெடன், எத்தனை விண்வெளிக்கதிர்கள் பூமியைத் தாக்குகின்றனவோ அந்த எண்ணிக்கைக்குத் தக்கபடி மழை ஏற்படுகிறது என்று கண்டு பிடித்துள்ளார். மாக்ஸ்ப்ளாங்க் இன்ஸ்டிடியூட் ஆஃப் நியூக்ளியர் பிஸிக்ஸ் நிறுவனத்தைச் சேர்ந்த விஞ்ஞானிகள் இதை உறுதிப்படுத்தி, இந்த விண்வெளி காஸ்மிக் கதிர்களே மேகங்களில் மழைக்கான விதைகளை விதைக்கின்றன என்கின்றனர். விண்வெளிபூமியின் மீது ஏற்படுத்தும் முதல் விளைவு இது!

## 2. சூரிய மண்டலத்திற்கும் கிறிஸ்துமஸிற்கும் தொடர்பு

ஸ்வீடிஷ் விண்வெளி ஆய்வு நிறுவனத்தைச் சார்ந்த லுண்ட் ஆப்ஸர் வேடரியைச் சேர்ந்த டாக்டர் ஹென்றிக்

லுண்ட்ஸ்டெட், சூரியக் காற்றிற்கும் நார்த் அட்லாண்டிக் ஆஸிலேஷன் என்று கூறப்படும் ஒரு வகை அழுத்த மண்டல அமைப்புகளுக்கும் உள்ள தொடர்பைக் கண்டறிந்துள்ளார். இதன்படி வறண்ட கிறிஸ்துமஸ் வருமா அல்லது மழையுடன் கூடிய கிறிஸ்துமஸ் வருமா என்பதை முன் கூட்டியே சொல்ல முடியுமாம். மணிக்கு 15 லட்சம் கிலோ மீட்டர் வேகத்தில் வரும் சூரியக் காற்றே வட பகுதியின் வானிலைக்கு முக்கியக் காரணம் என்பது விண்வெளிக்கும் பூமிக்குமான இரண்டாவது முக்கிய தொடர்பு.

## 3. சந்திரனும் எரிமலைகளும்

எரிமலை குமுற சந்திரனே காரணம் என்பதற்கு போதுமான ஆதாரங்கள் குவிந்து வருகின்றன. 1900–ம் ஆண்டிலிருந்து ஏற்பட்ட 600 எரிமலை வெடிப்புகளை ஆராய்ந்ததில், சந்திரனின் தினசரி தாக்கமும், உயர் அலை எழும் காலங்களில் ஏற்படுத்தும் மாற்றமுமே எரிமலைக் குமுறலுக்குக் காரணம் என்று கொலம்பியா பல்கலைக்கழக லாமாண்ட் மாஹார்டி ஆப்ஸர்வேடரியைச் சேர்ந்த டாக்டர் மாயா கண்டு பிடித்துள்ளார்.

## 4. சந்திரன் ஐரோப்பாவை தினமும் 40 சென்டிமீட்டர் தூக்குகிறது!

நமது காலடியின் கீழ் உள்ள பூமி, சந்திரனுடன் நேருக்கு நேர் வரும்போது 40 சென்டி மீட்டர் மேலெழும்புகிறது. ஐரோப்பா தினமும் இப்படி மேலே ஏறி இறங்குவதை ஸ்விட்சர்லாந்தைச் சேர்ந்த “சேர்ன்” (cern)

ரிஸர்ச் சென்டர் ஆய்ந்து கண்டு பிடித்துள்ளது. இதை அமெரிக்க ஆய்வுகளும் உறுதிப்படுத்திவிட்டன. ஜெனிவாவில் பூமிக்கடியில் புதைக்கப்பட்டுள்ள ஒரு கருவி– லார்ஜ் எலக்ட்ரான் பாசிட்ரான் கொல்லிடர் என்ற கருவி கண்டு பிடித்துவிட்டது இதை!

## 5. சூரியனும் சந்திரனுமே பூமியின் நிலப்பரப்புக்குக் காரணம்!

மரியான் க்ரெப்லெப்ஸ் என்பவர் பாரிசில் உள்ள இன்ஸ்டிடியூட் ஆஃப் க்ளோபல் பிஸிக்ஸ் நிறுவனத்தில் ஜியோபிஸிஸ்ட் ஆகப் பணி புரிபவர். இவரது சகாவான ஸ்ட்ராஸ் போர்க் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஹிலைர் லெக்ராஸ் இவருடன் இணைந்து ஆராய்ச்சி செய்து, சூரியனும் சந்திரனும் பூமியின் நடுப்பகுதியையும் அதைச் சுற்றி உள்ள மாண்டில் என்ற பகுதி வரையிலும் கூட ஊடுருவி அதை அசைக்கிறது என்கின்றனர். டைடல் எபக்ட் என்று இதை விவரிக்கும் அவர்கள், முன்னூறு கோடி மற்றும் 180 கோடி வருடங்களுக்கு முன்னர் இது குறிப்பிடத் தகுந்த அளவு இருந்துள்ளது என்றும் அறிவிக்கின்றனர். இந்த வருடங்களில்தான் பூமியின் மேற்பரப்பு உருவாகியது என்பதையும், முப்பது கோடி வருடங்களுக்கு முன்னர் இப்போது சைபீரியாவாக உள்ள இடம் பெரும் வெள்ளக் காடாக இருந்தது என்றும் அவர்கள் கூறுகின்றனர்.

## 6. அறுவடையைக் கணிக்க உதவும் நட்சத்திரங்கள்

தென் அமெரிக்காவில் உள்ள பழங்குடியினர் கார்த்திகை நட்சத்திரம் மிகவும் பிரகாசமாக இருந்தால் பெரிதும் மகிழ்வர். ஏனெனில், அடுத்த நான்கு மாதங்களில் நல்ல மழை பெய்யும். கலிபோர்னியா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பெஞ்சமின் ஆர்லாவன், இந்தப் பகுதி வாழ் விவசாயிகள், இரவு நிர்மலமாக இருக்கும் ஆகாயத்திற்கும் எல் நினோ எனப்படும் உஷ்ண அலைகளுக்கும் இருக்கும் தொடர்பை அறிந்தோ அறியாமலோ உணர்ந்து, எப்போது மழை குறைவாக வருகிறதோ அதை முன் கூட்டியே உணர்ந்து, உருளைக் கிழங்கைப் பயிர் செய்தனர் என்று வியப்புடன் கூறுகிறார். நட்சத்திரத்தை வைத்து அவர்கள் செய்த விவசாயம் பிரமிப்பூட்டும் விஷயம் என்கிறார் அவர்.

## 7. ஐஸ் காலமும் கிரகங்களின் ஈர்ப்பும்

பூமியில் மிக பிரம்மாண்டமான உஷ்ண நிலை மாறுதல்களை ஏற்படுத்தியதே சந்திரனும் இதர கிரகங்களும் தான்! ஐஸ் காலம் என நாம் இன்று விவரிக்கும் காலம், இந்தக் கிரகங்களின் ஈர்ப்பினால்

ஏற்பட்டது என்பதோடு, பூமி ஒரு பக்கமாகச் சாய்ந்து சுற்றுவதையும், அதனுடைய ஓடு பாதையையும் இந்தக் கிரகங்களே நிர்ணயித்துள்ளன. சர்ஜான் ஹெர்ஷல் 1830லேயே இதையெல்லாம் சுட்டிக்காட்டி இருக்கிறார். இது இப்போது உறுதி ஆகிறது.

## 8. சூரிய புள்ளிகளை வைத்து வானிலையைக் கூற முடியும்!

பியர்ஸ் கார்பின் என்னும் லண்டனைச் சேர்ந்த அஸ்ட்ரோபிஸிஸ்ட், சூரிய புள்ளிகளை வைத்து, ஒன்பது மாதங்களுக்கு முன்னமேயே வானிலையைத் துல்லியமாகக் கணிக்க முடியும் என்கிறார். ஆனால் இதுவரை வானிலையை கூறும் நிபுணர்கள், அதிகபட்ச அளவாக இருபது நாட்களுக்கு மேல் வானிலையை முன் கூட்டித் துல்லியமாகக் கூற முடியாது என்கின்றனர். இவர்களின் கூற்றை பியர்ஸ் மறுக்கிறார். அவர் கூறும் வானிலை கணிப்பு அப்படியே பலிக்கிறது. எப்படி அவர் இதைக் கூறுகிறார் என்பதை அறிவியல் பத்திரிகையில் அவர் தெரிவிக்க வேண்டும் என்ற வேண்டுகோள் இப்போது விஞ்ஞானிகளின் மத்தியில் எழுந்துள்ளது.

## 9. சூரியனின் நடுக்கம் மனித வரலாறையே மாற்றியது

கோடானு கோடி வருடம் எரிந்து சூரியனின் நடுப்பகுதி சற்று குளிர்ந்து, நாம் இப்போது கூறும் லிட்டில் ஐஸ் காலத்தை உருவாக்கியது. குளிர் கால உஷ்ண நிலை மாற்றம், நதிகள் உறைவது, பனிப்படலம் உருவாகி நிலமே மறைவது போன்ற அனைத்திற்கும் காரணம் சூரியனே என்பதோடு, பல லட்சம் பேர் பஞ்சம் ஏற்பட்டு சாகக் காரணமே சூரியன்தான் என்பதும் இப்போது உறுதியாகிறது. மீன் வளம் குறையக் காரணமும் இதனால் தான் என்பதும் தெரிய வந்துள்ளது.

## 10. பௌர்ணமியும் பைத்திய நிலையும்

பௌர்ணமி அன்று பைத்தியம் உச்ச கட்டத்தை அடையும் என்று உலகம் முழுவதும் பரவலாகப் பேசப்பட்டாலும், அதற்கு அறிவியல் ரீதியாக ஆதாரம் இல்லையே என்று விஞ்ஞானிகள் அதை மறுத்தே வந்துள்ளனர். ஆனால் சந்திரன் பௌர்ணமி அன்று ஏற்படுத்திய அலைகளால் ஐந்து நாட்களுக்குப் பிறகு பவழப்பாறைகளில் உள்ள பவழங்கள் ஏராளமான விந்தணுக்களையும் முட்டைகளையும் கடலுக்குள்

விடுகின்றன என்பது உறுதியாகிவிட்டது. உயிரினத்தில் ஒன்றான பவழங்கள் மீது சந்திரனின் தாக்கம் இருப்பதை அறிவியல் அங்கீகரிக்க வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது.

## அறிவியலின் அணுகுமுறை மாறுகிறது.

இப்படி பத்துக் காரணங்களைச் சுட்டிக் காட்டும் அறிவியல் உலகம், சூரியன், சந்திரன் மற்றும் மற்றும் இதர கிரகங்களுக்கும் பூமி வாழ் மனிதருக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை என்று கூறி வந்ததை மாற்றிக் கொள்ள வேண்டிய தருணம் வந்துவிட்டது. பத்து காஸ்மிக் கனெக்ஷன் என்று அறிவிக்கப்பட்ட இந்த பத்துக் காரணங்கள் அறிவியல் உலகில் பரபரப்பாகப் பேசப்படுகிறது.

ஜோதிடர்களும் ஜோதிட ஆதரவாளர்களும் சற்றுத் தலை நிமிர்ந்து நிற்கின்றனர்! இந்த ஆராய்ச்சி முடிவுகளால், இன்னும் சில வருடங்கள் போனால், அதற்குள் நடந்து முடிந்து இருக்கும் ஆராய்ச்சி முடிவுகளால், விஞ்ஞானிகளே ஜோதிடர்களாக மாறினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. அவர்களிடமே நாங்கள் ஜோதிடம் கற்க வேண்டிய நிலை வரப்போகிறது என்பது ஜோதிடர்களின் ஜோதிடம்.

ஜோதிடத்தை ஆராயும் அறிவியல் சோதனைகள் சீக்கிரம் முன்னேறட்டும். முடிவுகளைத் தெரிவிக்கட்டும். கார்த்திகை நட்சத்திரத் தொகுதியில் உள்ள ஆறு நட்சத்திரங்களையும் முருகனையும் தொடர்புபடுத்தி அந்த நட்சத்திரங்களுக்கு அம்பா, தாளா, நிதாக்னி, அப்ரயந்தி, மேகயந்தி, வர்ஷயந்தி என்று பெயரிட்டு, மழைக்கும் கார்த்திகைக்கும் உள்ள தொடர்பை பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பேயே முனிவர்கள் சுட்டிக் காட்டிவிட்டனர். நமக்கு அரிச் சுவடியாக இருப்பதை அறிவியல் கற்க ஆரம்பித்திருப்பது நல்ல முன்னேற்றம்.

இருபத்தியேழு நட்சத்திரங்களையும் நவ கிரகங்களையும் உள்ளுணர்வாலும் தவத்தினாலும் ஆராய்ந்து முடிவுகளைக் கண்ட முனிவர்களின் வழிக்கு விஞ்ஞானிகள் வந்தால் கசப்பே இல்லை; கற்கண்டு கொடுத்து வரவேற்போம்!



# சந்திரனுக்கும் மனிதனுக்கும் சம்பந்தம் உண்டா?

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக சந்திரன் மனிதனுடைய வாழ்வின் ஒரு அங்கமாகவே ஆகி விட்ட ஒன்று.

அமெரிக்க ஆய்வுகளின் முடிவுகள் பௌர்ணமி அன்று ஏராளமான கொலைகள் நடப்பதையும், அன்று நடக்கும் ஆபரேஷன்களில் அதிக ரத்தக் கசிவு ஏற்படுவதையும் சுட்டிக் காட்டின.

பைத்தியங்களுக்கு வைத்தியம் செய்யும் மருத்துவமனைகளில் பைத்தியங்கள் பௌர்ணமி அன்று நிலை கொள்ளலாமல் தவிப்பதையும் ஆய்வுகள் உறுதிப்படுத்தின.

இந்தியாவில் புராதன காலம் தொட்டே சந்திரனை மனத்திற்கு அதிபதியாகக் கூறுவதுண்டு. 'சந்த்ரமா மனோஸோஜாத:' என்று புருஷ ஸூக்தம் விளக்குகிறது.

இந்த சந்திரனின் ஆதிக்கத்தை அறிவியல், 'ட்ரான்ஸில்வேனியா விளைவு' (Transylvania effect) என்று கூறுகிறது.

பழைய கால காலண்டர்கள் சந்திரனையும் சூரியனையும் வைத்து கணிக்கப்பட்டன. கொஸு, டோத் ஆகிய இரு எகிப்தியக் கடவுள்கள் சந்திரனுடன்

தொடர்பு படுத்தப்பட்டவை. இவை காலத்திற்கும் அதிபதியாக எகிப்தியர்களால் கருதப்பட்டன.

பௌர்ணமி இரவுகளில் விழாக்கள் உலகெங்கும் கொண்டாடப்பட்டதை அந்தந்த நாகரிகங்கள் உறுதிப்படுத்துகின்றன. காவிரிப் பூம்பட்டின இந்திர விழாவிலிருந்து சித்திரா பௌர்ணமி கொண்டாட்டம் முடிய ஏராளமான விழாக்கள் நம் நாட்டில் கொண்டாடப்படுவது போலவே காதலர் விழாக்கள் மேலை நாடுகளிலும் கொண்டாடப்படுவது வழக்கம்!

தெற்கு இத்தாலியில் கர்ப்பிணிகள் சுகப்பிரசவம் அடைவதற்கு சந்திர பிறை வடிவிலான தலையணியை அணிவது வழக்கம்.

சந்திரத் தாக்குதல் நடப்பதினாலேயே மனிதர்கள் மனநிலை தடுமாறி பைத்தியங்களாக ஆவதாக பொதுவான நம்பிக்கை உண்டு.

பாரத பாரம்பரியப்படி தேய்பிறை, வளர்பிறைகளில் செய்ய வேண்டியவற்றை பிரான்ஸ், ஆப்ரிக்கா, அமெரிக்கா ஆகிய நாடுகளிலும் செய்து வந்துள்ளனர். குறிப்பாக வளர் பிறையில் செடிகளை நடுவது மூலம் செடிகள் அதிக புஷ்டியாகவும் சாறுடனும் வலுவுடனும் இருக்கும் என்றும், தேய்பிறைகளில் மரங்களை வெட்டினால் அவை ஈரமற்று உலர்ந்து இருக்கும் என்றும் அவர்கள் நம்பினர்.

சந்திரனுக்கும் தண்ணீருக்கும் உள்ள தொடர்பு பற்றி உலகமக்கள் அனைவருக்கும் ஒரே நம்பிக்கை தான்! பௌர்ணமி அன்றும் அமாவாசை அன்றும் கடல் கொந்தளிப்பது உட்பட்ட பல ஆதாரங்களை மனிதர்கள் தங்கள் நம்பிக்கைக்கு ஆதரவாக எடுத்துக் காட்டியுள்ளனர். சந்திரன் சுற்றி வரும் காலமான இருபத்தியேழரை நாட்களும் பெண்களின் மாதவிலக்கு காலமான 28 நாட்களும் முக்கிய தொடர்பாக உலக நாகரிகங்களால் கருதப்பட்டுள்ளன.

அறிவியல் ஆராய்ச்சிகளும் காலம் காலமாக இருந்து வரும் பாரம்பரிய நம்பிக்கைகளும் ஒருபுறம் இருக்க, இதில் அர்த்தமே இல்லை என்று சொல்லும் அறிவியல் விஞ்ஞானிகளும் தங்கள் கருத்துகள்ள முன் வைக்கின்றனர்.

ஆக்ஸ்போர்டில் ஜான் ராட்க்ளிஃப் மருத்துவ மனையில் மகளிர் பிரசவத்துறையில் பிரபலமாக இருக்கும் மார்க்கரட் ரிஸ் "சந்திரனின் சுழற்சி காலத்திற்கும் மகளிர் மாதவிலக்கு காலத்திற்கும் உள்ள ஒற்றுமை தற்செயலானது தான்" என்று கருத்துத் தெரிவிக்கிறார். ஃப்ளோரிடா இண்டர்நேஷனல் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த ஜேம்ஸ் ராட்டனும் கனடாவின் சஸ்கட்செவன் பல்கலைக் கழகத்தைச் சார்ந்த ஜவான் கெல்லியும், "மனிதனின் பீனியல் மனச் சோர்வு வருகிறது என்ற ஆய்வு முடிவுகளில்

புள்ளிவிவரக் கோளாறுகள் உள்ளன. சந்திரனின் ஒளி மெழுகுவர்த்தி ஒளியில் நான்கில் ஒரு பகுதிதான். அது மனநிலை மாறுபாட்டை ஏற்படுத்தும் என்பது ஏற்புடையதாக இல்லை'' என்கிறார்.

கடலில் அலைகளை ஏற்படுத்துவது போல மனதிலும் அலைகளை சந்திரன் ஏற்படுத்துகிறது என்பதையும் இவர்கள் ஏற்கவில்லை. ''மனிதனின் மீது சந்திரன் ஏற்படுத்தும் ஈர்ப்பு விசையைப் போல 5012 மடங்கு அதிகமாக பூமி ஏற்படுத்துகிறது. ஆகவே மனித மனத்தை பாதிக்குமளவு சந்திரனுக்கு ஆற்றல் இல்லை'' என்பது இவர்களின் வாதம்.

ஆனால் இவர்கள் ஒப்புக் கொள்ளும் உண்மை ஒன்று உண்டு! 'சந்திரன் இவ்வளவு பாதிப்பைச் செய்ய வல்லவன் என்று நம்பிவிட்டால், அந்த உளவியல் நம்பிக்கையே அனைத்துக் காரணங்களுக்கும் ஆதாரமாகி, சந்திரனின் விளைவை மனித மனத்தில் ஏற்படுத்தி விடும்' என்கின்றனர் இந்த அறிவியல் அறிஞர்கள்.

ஆகவே பாரம்பரியத்தையும் நம்பிக்கையையும் வைத்து வாழ்ந்து வரும் மனித குலத்திற்கு சந்திரனின் பாதிப்பு – அது நல்லதானாலும் கெட்டதானாலும் – காலம் காலமாகத் தொடரும் என்பதுதான் உண்மை!

# ஆண்டுகள் அறுபது ஏன்?

தமிழரின் வானவியல் அறிவு பிரமிக்கத் தக்கது பிரபவ தொடங்கி அக்ஷய முடிய அறுபது ஆண்டுகளைத் தமிழ் வருடங்கள் என்றே கூறுகிறோம்.

ஆண்டுகள் ஐம்பதாகவோ, நாற்பதாகவோ ஏன் வகுக்கப்படவில்லை?

மேலை நாடுகளில் ஆண்டுகளுக்குப் பெயர் சூட்டும் வழக்கமும் இல்லை; அறுபது வருடச் சுழற்சியால் வருடங்களைப் பிரிப்பதும் இல்லை.

நமது முன்னோர் மட்டும் ஏன் இப்படி வகுத்தனர் என்ற வினா எழுவது இயல்பே!

அறிவியல் ரீதியில் வானிவியல் அடிப்படையில் அற்புதமாக அமைக்கப்பட்ட ஏற்பாடே அறுபது வருடச் சுழற்சி ஆகும். குரு கிரகம் ஒரு முறை வான வட்டத்தைச் சுற்றி வர (12 ராசிகளைக் கடக்க) 12 வருடங்கள் ஆகும். சனி கிரகம் வான வட்டத்தைச் சுற்றி வர 30 வருடங்கள் ஆகும்.

குருவும், சனியும் அசுவதி நட்சத்திரத்தில் காணப்படும் போது தோன்றும் வருடமே பிரபவ ஆகும்.

ஐந்து முறை குரு வானவட்டத்தைச் சுற்றி வர 60 ஆண்டுகள். இந்த பிரஹஸ்பதி சக்கரத்தின் அறுபது மாதங்களே பிரபவ, விபவ, சுக்ல முதலான அறுபது வருடங்கள் ஆகும்.

இது மட்டுமின்றி ஆண்டுக்குப் பெயர் சூட்டியதோடு அதன் மூலம் அந்த ஆண்டின் இயல்பையும் நம் முன்னோர் குறித்து வைத்துள்ளனர். அது மட்டுமின்றி வருஷத்திய பலனுக்கான வெண்பா வேறு தனியே தரப்படுகிறது. எடுத்துக்காட்டாக பிரபவ எனில் பொருள் உற்பத்தி ஆகுதல் என்று பொருள்; விபவ என்றால் ஐஸ்வர்யம்; சுக்ல என்றால் நன்மை. இப்படி அறுபது வருடத்திற்கும் தனித்தனி பொருள் உண்டு.

சித்ரபானு வருஷத்திய பலன் பற்றிய வெண்பா பின்வருமாறு:-

சித்ர பானிற் சிறக்கமழை மிகுந்து
வித்துள்ள வெல்லாம் விளையுமே – எத்திசையும்
பார்பாருக் காகாது பார்வேந்தர்க்கே நலமாம்
தீர்ப்பாக பூமிபயஞ் செப்பு.

தைத்திரீய சம்ஹிதா 60 வருடங்களை விரிவாக விளக்குகிறது.

சூரிய வருடம் என்றும் சந்திர வருடம் என்றும்

வருடங்களை இரண்டு விதமாகக் கணக்கிடுவது வேத காலம் தொட்டு இருந்து வருகிறது.

சூரிய வருடம் என்பது பூமி சூரியனைச் சுற்ற எடுத்துக் கொள்ளும் காலமாகும். சந்திர வருடம் என்பது சந்திரனை அடிப்படையாகக் கொண்டது.

இரண்டுக்கும் உள்ள வேறுபாடு சுமார் 11 நாட்கள் ஆகும். 5 வருடத்திற்கு ஒரு முறை ஏதாவது ஒரு மாதத்தில் இரண்டு அமாவாசை வரும்.

தமிழர்கள் சூரியனை அடிப்படையாகக் கொண்ட வருடத்தையே கடைப்பிடித்து வந்தனர். ஆகவே அறுபது வருடங்களும் தமிழ் வருடங்கள் ஆகிவிட்டன.

பஞ்சாங்க கணித சாத்திரத்தில் தமிழர்கள் மிக நுணுக்கமாகக் காலத்தை நிர்ணயிக்கும் ஆற்றல் பெற்றிருந்தனர். ஒரு சூரிய வருடத்திற்கு 365 நாட்கள் 15 நாழிகை 31 வினாடி 15 தர்ப்பரைகள் என்று துல்லியமாகக் கணக்கிடப்பட்டுள்ளது.

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ என்ற ஒன்பது எழுத்துக்களிலேயே பஞ்சாங்கத்தைக் கணித்து விடுகின்றனர். இது மிக்க ஆச்சரியத்தை விளைவிக்கும் ஒன்று.

தேவி பாகவதம் மற்றும் நாரத புராணத்தில் 60 வருடங்களை நாரதருடன் தொடர்பு படுத்தி சுவாரசியமான கதை ஒன்று உள்ளது. ஒரு முறை கிருஷ்ணர் நாரதரைத் தன் ரதத்தில் ஏற்றிக் கொண்டு சென்றார். வழியிலே நீரோடை ஒன்றைக் கண்ட நாரதர் நீர் அருந்தச் சென்றார். முதலில் குளித்துவிட்டு நீரை அருந்துமாறு கிருஷ்ணர் கூறினார். ஆனால் இந்தக் கட்டளையைப் புறக்கணித்து விட்டு நாரதர் குளிக்காமலேயே நீரை அருந்தினார். என்ன ஆச்சரியம்! உடனே அவர் ஒரு அழகிய பெண்ணாக ஆகி விட்டார். அங்கே கிருஷ்ணரும் இல்லை; ரதமும் இல்லை.

நாட்டிலே சுற்றி அலைந்த பெண் உருவிலான நாரதர், ரிஷி ஒருவரின் ஆசிரமத்தை அடைந்தார். சமாதியிலிருந்து மீண்ட ரிஷி தன் எதிரே அழகிய பெண் நிற்பதைக் கண்டார். தன்னை சிஷ்யையாக ஏற்றுக் கொள்ளுமாறு அவள் வேண்டவே அவளையே மணந்தார். அந்தப் பெண்ணும் 60 பிள்ளைகளைப் பெற்றெடுத்தாள். ஒரு நாள் அந்த 60 பிள்ளைகளும், கணவனான ரிஷியும் இறந்து விட்டனர். துக்கம் தாளாமல் கதறி அழுத பெண் ஈமக் கிரியைகளைக் கூடச் செய்ய முடியாத அளவில் மிகவும் சோர்ந்து போனாள். அதி பயங்கரப் பசி அவளை வாட்டியது.

பக்கத்திலிருந்த மாமரத்தின் கனியைப் பறிக்க கையை உயர்த்தினாள். ஆனால் அது எட்டவில்லை. வேறு வழியின்றித் தன் கணவன் மற்றும் 60 பிள்ளைகளின் பிணத்தை ஒன்றின் மீது ஒன்று அடுக்கி மேலே ஏறிக் கனியைப் பறித்தாள். அப்போது அங்கே வந்த மறையவர் ஒருவர், கணவன் பிள்ளைகள் இறந்த தீட்டைப் போக்காமல் சாப்பிடுவது தவறு என்று அறிவுறுத்தி முதலில் குளிக்குமாறு கூறினார். அதைக் கேட்ட அந்தப் பெண் கையில் மாங்கனியைத் தூக்கிப் பிடித்தவாறே குளித்தாள்.

பெண் உரு நீங்கிப் பழைய படி வளையல் மட்டும் மாங்கனியோடு அப்படியே இருந்தது. மறையவர் கிருஷ்ணனாக மாறினார். கிருஷ்ணரின் கட்டளைப்படி மீண்டும் நீரில் இறங்கிக் குளித்த நாரதர் முழு உருவத்தைப் பெற்றார். அவர் கையில் இருந்த மாங்கனி வீணையாக மாறியது.

கிருஷ்ணர் நாரதரை நோக்கி, "உங்களுடன் வாழ்ந்த ரிஷி வேறு யாரும் இல்லை; அவரே கால புருஷன்! 60 பிள்ளைகளும் பிரபவ, விபவ முதலான 60 வருடங்கள்" என்று கூறினார்.

மாயையின் மகிமையை அறிய விரும்பிய நாரதர், காலத்திற்கு உருவம் கிடையாது; ஆனால் அந்தக்

காலமே மாயைக்கு உருவமாக இருக்கிறது என்ற உண்மையை உணர்ந்தார். நம் வாழ்க்கையுடன் சம்பந்தப்பட்ட 60 குண விசேஷங்களையே 60 பிள்ளைகளான வருடங்கள் வெளிப்படுத்துகின்றன. இவ்வாறு காலத்தின் மகிமையை வெளிப்படுத்தும் அழகிய புராணக் கதை பல அரிய உண்மைகளை வெளிப்படுத்துகிறது.

ஜைன சித்தாந்தப்படி ஐந்து வருட சுழற்சியில் 60 சூரிய மாதங்களும், 61 ருது மாதங்களும், 62 சந்திர மாதங்களும் 67 நட்சத்திர மாதங்களும் குறிப்பிடப்படுகிறது. ஒரு சூரிய வருடத்திற்கு 366 நாளும், ஒரு ருது வருடத்திற்கு 360 நாளும் சித்திர வருடத்திற்கு 354 12/62 நாளும், ஒரு நட்சத்திர வருடத்திற்கு 327 51/67 நாளும் குறிப்பிடப்படுகிறது.

என்றாலும் தமிழர்கள் ஏற்ற சூரிய வருடத்தையே உலகெங்கும் இன்று கடைப்பிடித்து வருவதை நினைக்கும் போது தமிழ் நெஞ்சங்கள் உவகை அடைவதில் வியப்பே இல்லை!

*****

